# வைணவ அந்தாதி காட்டும் சமய நெறி

முனைவர் கா. இராமானுசம், எம்.ஏ., எம்.பில்., பிஎச்டி.
யாதவர் கல்லூரி,
மதுரை - 14.

முத்துப் பதிப்பகம்
குமரனகம்
63, தபால் தந்தி நகர்,
மதுரை - 14.

First Edition - March. 1994
Dr K. Ramanujam
Vainava Anthathi kattum Samayaneri

Published by : **Kalimuthu Ramanujam**
Kumaranagam
63, P & T Nagar,
Madurai - 625014.

**"The Book is published with The Financial Assistance of Tirumala Tirupathi Devasthanams under their Scheme "Aid to publish Religious Books"**

நூல்பெயர் : வைணவ அந்தாதி காட்டும் சமயநெறி
ஆசிரியர் . கா. இராமானுசம், எம்.ஏ; எம்.பில்; பி.எச்டி.
பதிப்புரிமை : முத்துப் பதிப்பகம்
குமரனகம்
63, தபால் தந்தி நகர்,
மதுரை – 625014.

நூலின் அளவு : 1×8
தாள் : 5? G.S.M. வெள்ளைத்தாள்
எழுத்து · 10 point
பக்கங்கள் : 200
படிகள் : 1000

வெளியிடுவோர் : **முத்துப்பதிப்பகம்**
குமரனகம்
63, தபால்தந்தி நகர்
மதுரை - 625014.
பொருள் : சமய இலக்கியம்

விலை : ரூ. 38

அச்சிட்டோர் : **கோனார் பிரிண்டர்ஸ்**
35/4F அருப்புக்கோட்டை மெயின்ரோடு
மதுரை - 6250012.

# காணிக்கை



என்னை உருவாக்கி, உயர்ந்த
நிலைக்கு ஆளாக்கிய என்
அன்புப் பெற்றோர்
**காளிமுத்து — முத்தம்மாள்**
ஆகியோருக்கு அன்புப்படையல்

பேரா. தி.அ. சொக்கலிங்கம், எம்.ஏ., எம்.லிட்.,
தாளாளர்,
யாதவர் கல்லூரி, மதுரை-14.

# வாழ்த்துரை

தம்பி டாக்டர் கா. இராமானுசம் ஒரு வித்தியாசமான பேராசிரியர். உழைப்புக்குத் தேனீயைச் சொல்லுவது தமிழ்மரபு. நான் அடிக்கடி நினைப்பேன் — உழைப்புக்கு ஏன் தம்பி இராமானுசத்தைச் சொல்லக்கூடாது என்று!

உழைப்பு மாத்திரமன்று! — பிறருக்காக வாழ்வதில் — குறிப்பாக மாணவர்களை உருவாக்குவதில் — இவருக்கு நிகர் இவரே! யாதவர் கல்லூரியின் தமிழ்த்துறையைச் சேர்ந்த இவருக்கும் எனக்கும் உள்ள நட்புக்கும் அன்புக்கும் இது வெள்ளிவிழா ஆண்டு!

இத்தகு தனிப்பண்புகளைப் பெற்ற திரு. கா. இராமானுசம் வைணவ அந்தாதி காட்டும் சமயநெறி என்ற தலைப்பைத் தம் ஆய்வுப் பொருளாக எடுத்து—இதில் ஐந்து ஆண்டுகள் உழைத்து டாக்டர் பட்டமும் பெற்றுள்ளார்.

இதற்காக அந்தாதிகளைத் தேடி தமிழ்நாடு முழுவதும் அலைந்தார் — டாக்டர் உ.வே.சா ஏடுதேடி அலைந்தது போல.

திருப்பதியில் பாடு கிடந்தார்; ஆழ்வார் திருநகரியிலும் திருக்குறுங்குடியிலும் 'வயணம்' காத்தார்; அண்ணமலையில் நோன்பு நோற்றார்; நூற்றிஎட்டு வைணவத் திருப்பதிகளில் அந்தாதிக்காக அலைந்தார்; இப்படியாக வைணவத்தின் உட்பொருளைத் தேடித்திரிந்த பழைய இராமானுஜரைப் போல— இந்த யாதவர் கல்லூரி இராமானுஜரும் அந்தாதிகளைத் தேடிக் கண்டுபிடித்து — அவை காட்டும் சமயநெறியை நூல்வடிவாகத் தந்துள்ளார்.

முன்னவர் திருக்கோஷ்டியூர் கோபுரத்தில் ஏறிஉண்மையை உணர்த்தினார். முனைவர் இராமானுசமோ தம் முடிவுகளை இந்நூல் வழியாகத் தமிழ் உலகிற்குத் தந்துள்ளார். தமிழ்நாட்டில் 867 அந்தாதிகள் உள்ளன என்பதையும் இவற்றில் 87 வைணவ அந்தாதி என்பதையும் அறிய நாம் மலைத்துப் போகிறோம். இந்த எண்ணிக்கையின் பின்னணியில் இவருடைய உழைப்பை நாம் காண்கிறோம்.

மொத்தத்தில் அவருக்கு ஒரு மன நிறைவினைத் தரக்கூடிய ஆய்வு இது. நமக்கும் அப்படித்தான். வைணவ உலகிற்கு இது ஒரு புதிய ஆணி. அவர் மேலும் பல ஆய்வுகளை மேற்கொள்க என வாழ்த்துகிறேன்.

மதுரை
10-3-94

டாக்டர் சு. வேங்கடராமன்
தற்கால இலக்கியத்துறைத் தலைவர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை — 625021.

# முன்னுரை

'வைணவ அந்தாதி காட்டும் சமயநெறி' என்ற இந்தநூல் முனைவர் திரு. சா. இராமாநுசம் அவர்களின் ஆய்வு ஆகும். திருமாலைப் பரம்பொருளாகக் கொண்ட நெறியான வைணவம் பற்றியகுறிப்புகள், வேத நூல்களிலும் தமிழில் தொல்காப்பியம் சங்க இலக்கியந் தொட்டும் காணப்படுகிறது. சமண, பௌத்த நெறிகளுக்கு எதிராக வைதிக சமயங்கள் எழுச்சி பெற்ற பக்தியியக்கக் காலம் இந்தியச் சமய வரலாற்றில் புதிய போக்கை ஏற்படுத்திய செல்நெறிக்காலம் ஆகும். இலக்கியங்கள் வழியாகச் சமயம் பரப்பப்பட்டது. ஆழ்வார்கள் பன்னிருவர் ஈரத்தமிழ்ப் பாசுரங்களால் திருமால்நெறியைப் பரப்பினர். முதலாழ்வார் மூவரும் பின்னர்த் திருமழிசைப் பிரானும் பின்னர் நம்மாழ்வாரும் அந்தாதிகளைப் பாடினர். அவற்றைத் தொடக்கமாகக் கொண்ட அந்தாதி இலக்கியங்களை ஆராய்கிறது இந்தநூல்.

அந்தாதி இலக்கிய வகை தமிழில் ஏராளமாகப் பெருகியுள்ளது. தமிழில் வெளிவந்துள்ள அந்தாதி இலக்கியங்கள் (867) பற்றிய பட்டியலையும் அவற்றுள் வைணவ அந்தாதி நூல்கள் (87) பற்றிய பட்டியலையும் இந்த நூலின் இறுதியில் பின் இணைப்புகளாக நூலாசிரியர் தந்துள்ளார் இவற்றைத் தொகுப்பதற்கு திரு. கா. இராமாநுசம் பட்டபாடு மிகவும் துன்பம் தரத்தக்கது. இடைவிடாது அலைந்து அரிதின் முயன்று தம் உடல் நலன் பாதிக்கப்பட்டதையும் பொருட்படுத்தாது அவர் செய்து முடித்தது எடுத்தபணியைச் செவ்வனே முடிக்கும் அவருடைய உழைப்பையும் மனத்திண்மையையும் ஒருங்கே காட்டும்.

தம்முடைய ஆய்வேட்டின் ஒரு பகுதியைத்தான் இந்தநூலில் கொண்டுவந்து உள்ளார். அந்தாதி நூற்களில் காணப்படும்

சமயநெறி இப்பகுதியில் விளக்கமாக எடுத்து உரைக்கப்படுகிறது. எம்பெருமானுடைய திருவடிகளில் செய்யும் அடிமைத்தொழில்—ஈசுவரனின் முகமலர்ச்சிக்காகவே செய்யப்படும் கைங்கர்யம்-என்பதே உயிர் அடையவேண்டி இலக்கு என்ற கருத்தை முதல் திருவந்தாதியில் ஆழ்வார் அறுதியிட்டுரைப்பதாக ஆய்வாளர் காட்டுமிடம் அவருடைய நுட்பமான ஆய்வைக் காட்டும். மெய்ப் பொருட் கருத்துக்கள், புராணக்கூறுகள் என்று பகுத்து அவர் ஆராய்கிறார். ஆழ்வார் பாசுரங்கள் எழுந்த காலத்திலிருந்து மாறுபட்ட நிலையில் பிற்கால வைணவ அந்தாதிகள் தோன்றின. காலமாற்றத்திற்கு ஏற்ற சிந்தனை வளர்ச்சி பிற்கால வைணவ அந்தாதி நூற்களில் காணப்படுவதையும் ஆய்வாளர் ஆங்காங்கு அழுத்தமாகக் காட்டியுள்ளார்.

வைணவ அந்தாதிகளை இலக்கிய ஆராய்ச்சியாக உள்ள டக்கப் பகுப்பு ஆய்வாக-மட்டுமே இராமாநுசம் இந்த நூலில் ஆராய்ந்துள்ளார். அந்த ஆய்வின் எல்லையை மனத்திற்கொண்டே நாம்இந்த நூலை அணுகவேண்டும். சமயச் சிந்தனை வளர்ச்சி, தத்துவ வளர்ச்சி என்ற நிலைகளில் காணவும் மரபுவழியான வைணவ ஆய்விற்கும் இதே ஆய்வுப்பொருளில் இன்னும் நிறைய இடம் உள்ளது. ஆய்வு என்பது தொடர் ஓட்டமாகும் என்ப தால், முடிந்த முடிவு இல்லை என்பதால் இதில் இன்னும் ஆராய வேறு வாய்ப்புக்கள் உள்ளன. எடுத்துக்கொண்ட பொருளை வரை யறுத்து நிறையச் சான்றுகளைத் திரட்டி வெளிக்கொணர்ந்து முனைப்புடன் செயற்பட்டுள்ள இந்த ஆய்வாளரையும் அவர் பணியையும் பாராட்டுகிறேன். பொதுவாக, அதிகம் யாரும் மேற்கொள்ள முன்வராத சமய இலக்கிய ஆய்வுத்துறையில் முனைந்து உழைத்து வரும் இத்தகைய முன் முயற்சிகளைப் பாராட்டுவோமாக!

மதுரை
12-3-94.

முனைவர். ந. இராமலிங்கம்
தமிழ்த்துறைத் தலைவர்
யாதவர் கல்லூரி
மதுரை—14.

# அணிந்துரை

டாக்டர் கா. இராமானுசம் ''வைணவ அந்தாதி இலக்கியங்கள் ஓர் ஆய்வு'' எனும் தலைப்பில் ஆய்ந்த ஆய்வேட்டின் ஒரு பகுதியை நூல்வடிவில் தந்துள்ளார். வைணவ அந்தாதிகள் பக்தி நோக்கத்தில் எழுந்தாலும் அவற்றில் உள்ள மெய்ப்பொருள் கருத்துக்களையும், புராணக் கூறுகளையும் தன் கடின உழைப்பால் வகை தொகைப்படுத்தி இந்நூலில் ஆய்ந்துள்ளார். புராண இதிகாசக் கதைகள் சைவ மறுமலர்ச்சிக்கு உதவியது போல வைணவ சமய மறுமலர்ச்சிக்கும் உதவின என்பதனை உணர்கின்றோம். பாகவத புராணம், மகாபாரதம், இராமாயணம் போன்ற புராண இதிகாசக் கதைகளைப் பயன்படுத்தி அந்தாதி ஆசிரியர்கள் தமிழ் மண்ணில் பத்திப் பயிரினை வளர்த்த பாங்கினை ஆசிரியர் அழகுற விளக்கியுள்ளார். சைவ பத்திப் பாடல்களைக் காட்டிலும் வைணவ பத்திப்பாடல்கள் உணர்ச்சிகளை ஆழமாகத் தொடுகின்றன. என்பது அனைவரும் அறிந்த உண்மை. வேதங்களில் சிறப்பிடம் பெறும் கர்மநெறியும் உபநிடதங்களில் சிறப்பிடம் பெறும் ஞானநெறியும் பத்தி நெறியோடு இணையும் பொழுதுதான் அவை முழுமை பெறுகின்றன. பத்தியின் கூறாகிய சரணாகதி எனப்படும் பிரபத்தி நெறியை அந்தாதி ஆசிரியர்கள் புலப்படுத்தி இருக்கும் திறனை நயம்பட விளக்கியுள்ளார் ஆசிரியர்.

அந்தாதி ஆசிரியர்கள் புராணக் கூறுகளைப் பயன்படுத்தி வேதத்தின் உட்பொருளையும் சமய தத்துவங்களையும் மக்களுக்கு உணர்த்தி, இறையனுபவத்தையும் ஏற்படுத்தியதனை நம் ஆசிரியர் திறனாய்வு செய்துள்ளார். ''காலங்கடந்த கருத்துகளுக்குக் காலத்திற்கு உட்பட்ட நிகழ்ச்சிகளால் அளிக்கப்படும்

அடையாள வெளிப்பாடுகளே புராணங்கள்" என்று அறுதியிட்டுரைப்பது ஆசிரியரின் புராண நூல் அறிவின் தெளிவைப் புலப்படுத்துகிறது.

எடுத்த கருமத்தைத் திறம்பட முடிக்கும் செயலாண்மைத் திறமும், யாவரோடும் ஒத்தும் உதவியும் வாழும் பாங்கும் இயல்பாக வாய்க்கப் பெற்றுள்ள இவ்வாசிரியர் வைணவ அந்தாதிக் கடலில் மூழ்கி அரிய முத்துக்களை வெளிக் கொணர்ந்துள்ளார். வைணவ சமயத்திற்கு அவர் ஆற்றத் தொடங்கிய பணியின் முதற்படி இது, மேலும் பல படிகளில் முன்னேறி வைணவ இலக்கிய நூல்களில் காணப்பெறும் கருத்துக் கருவூலங்களை வெளிக்கொணர்ந்தால் தமிழ் ஆய்வுலகம் மேலும் பொலிவு பெறும். அவரது ஆய்வுப்பணி மேலும் சிறக்க திருவேங்கடமுடையான் திருவருள் முன்னிற்பதாக என உளங்குளிர்ந்து வாழ்த்துகிறேன்.

# நன்றியுரை

'வைணவ அந்தாதி இலக்கியங்கள் ஓர் ஆய்வு, எனும் தலைப்பில் ஆய்வை மேற்கொண்டு மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பணிக்கப் பெற்ற ஆய்வேட்டின் இரண்டு இயல்களின் தொகுப்பே, 'வைணவ அந்தாதி காட்டும் சமய நெறி' எனும் இந்நூலாகும். இந்நூல் ஓர் இலக்கிய ஆய்வேயாகும். சமுதாயத் தில் புராண இலக்கியத்தைப் பற்றி நிலவும் பொதுவான கருத் தினைப் புறந்தள்ளி இலக்கியத் தன்மை, சமயம், தத்துவம், சமூகச் செய்திகள் ஆகியவை ஆராயப்பட்டு அவற்றில் காணும் பெருண் மைகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

சமய நூல்களையும் பத்தி நூல்களையும் வெளியிடும் நூலாசிரியர்க்கு மானியம் வழங்கி வருகின்றது திருமலை-திருப்பதி தேவஸ்தானம். அத்திட்டத்தில் இந்நூலும் அந்த மானியத்தைப் பெற்று வெளிவருகின்றது. மானியம் வழங்கிய அந்த நிறுவனத் திற்கு என் அன்பு கலந்த நன்றியினைப் புலப்படுத்திக் கொள்கி றேன்.

எனது ஆய்விற்கு வழிகாட்டியாக இருந்து பல்லாற்றானும் உதவியதுடன் அணிந்துரையும் வழங்கியருளிய மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழியற்புலத்தின் தற்கால இலக்கியத் துறைத் தலைவர், முனைவர். சு. வேங்கடராமன் அவர்கட்கு என் இதயங்கனிந்த நன்றியனைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

யாதவர் கல்லூரியின் நிறுவன முதல்வரும் மதுரை காம ராசர் பல்கலைக்கழகக் கல்லூரி வளர்ச்சித்துறை முன்னாள் தலைவரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் தேர்வாணையாளரும் யாதவர் கல்லூரியின் தாளாளரும் ஆகிய பேராசிரியர் தி. அ. சொக்கலிங்கம் எம்.ஏ.எம்.லிட் அவர்கள் என்னைப் பல்லாற்றாலும் நெறிப்படுத்தி வளர்த்தவர். அப் பெரியவர் இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கியமைக்கு என் உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்விற்கும் இந்நூல் வெளிவருவதற்கும் பல்லாற்றானும் உதவிய எங்கள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ந. இராமலிங்கம் அவர்கள் இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியுள்ளார். அவருக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் முகப்பு ஓவியத்தை அழகுற வரைந்து கொடுத்த நண்பர் கனி அவர்களுக்கு என் நன்றியினைத் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

எங்கள் கல்லூரி ஆட்சிக்குழு, முதல்வர், தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியினைத் தெரியப் படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலைச் செம்மையுற அச்சிட்டு அழகுறக் கட்டமைத்துக் கற்போர் கரங்களில் தவழச்செய்த மதுரை கோனார் அச்சகத்தினருக்கும் என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# உள்ளுறை

# வைணவ அந்தாதி காட்டும் சமய நெறி

சமயம், மதம், தரிசனம் என்பன ஒரு பொருள் குறித்த சொற்களாகும். சமயநெறி வாழ்வில் திகழவேண்டிய நேர்மை, அறம், வாழ்க்கைமுறை, வாழ்க்கை இடர்களினின்று கிடைக்கும் விடுதலையின் இயல்பு போன்றவற்றைக் குறிப்பிடுகின்றது. சமயம், வாழ்க்கையின் தத்துவம் மட்டுமின்றி, ஒரு வாழ்க்கை முறையுமாகும். இச்சமயம் தனிவாழ்க்கை முறையினையும், சமூக வாழ்க்கை முறையினையும் விளக்குகின்றது. நேர்மையை நிலை நிறுத்தவும், தீயவற்றை அழிப்பதற்குரிய வழிமுறைகளையும் வலியுறுத்துகிறது. இம்மண்ணில் தொன்றுதொட்டு விளங்கி வரும் சமயங்கள் பல்வேறு வழிபாட்டு மரபுகளைத் தம்மகத்தே கொண்டிருப்பினும், ஒரே குறிக்கோளை நோக்கிச்செல்கின்றன. வழிபாட்டு மரபுகள் பலவாயினும் பரம்பொருள் ஒன்றே என்பதை அனைத்துச் சமயங்களும் ஏற்றுக்கொள்கின்றன.

வேதகாலத்திலிருந்து இன்றுவரை இந்து சமயத்தில் காலந் தோறும் பல மாற்றங்கள் நிகழ்ந்துவருகின்றன. சங்கரர் நிறுவிய அறுவகைச் சமயங்களும் (ஷண்மதங்கள்) வேதங்களையே அடித் தளமாகக் கொண்டவை என்பதை யாரும் மறுக்க இயலாது, வேதகாலத்தில் சிவன் திருமால் முதலிய தெய்வங்கள் முதன்மை பெறாவிடினும் இவ்விரு தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள் பல காணப்படுகின்றன. தென்னகத்தில் திகழும் சிவன் திருமால் ஆகிய தெய்வங்களின் இயல்புகளை அறியும்போது அவை இந்தியா முழுவதும் பரவி இருந்த சிந்தனைகளே என்பது தெளிவாகும். இந்திய நாட்டின் சமய வளர்ச்சியின் எதிரொலி யாகவே சிவன், திருமால் இயல்புகள் தமிழ் இலக்கியத்தில் சித்தரிக்கப்படுகின்றன என்பதில் ஐயமில்லை.

சங்ககாலத்தில் சைவம், வைணவம் என்ற சமயப்பிரிவுகள் தனித்து இயங்கவில்லை. வேதநெறிகளைக் கூறும் வைதிக சமயங்கள், பௌத்தம், சமணம், ஆகியவை தமிழகத்தே வழக்கில் இருந்தன. சங்க இலக்கியங்களில் வேதங்கள் பற்றியும், வேள்விகள் பற்றியும் அறியமுடிகிறது. சிவன், முருகன், திருமால், பலராமன்,

ஆகிய கடவுளைப் பற்றிய குறிப்புகளும், பிற தெய்வங்களைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.

சங்க மருவிய காலத்தின் பிற்பகுதியில்தான் சமயக்காழ்ப்புத் தோன்றியது. அதற்கு முன் சகவாழ்வு கொள்கையை அல்லது சமயப் பொது நோக்கைக் காணமுடிகின்றது. கி. பி. ஆறாம் நூற்றாண்டில் சமயத்துறையில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டு, பக்தி இயக்கம் தமிழகத்தில் தோன்றி இந்திய நாடெங்கும் பரவியது. வாழ்வையும் கலை இலக்கியங்களையும் சிறப்புச் செய்தது. இந்திய மக்களின் ஒற்றுமையைப் பறைசாற்றியதோடு அதற்குப் பேருக்கமும், ஆக்கமும் அளித்தது. இறைவனை உரிமையோடு கொண்டாடிய தமிழர்கள், அவன் உலகம் அனைத்திற்கும் உயிர்நாடியாக நின்று காத்துவரும் உண்மையினையும் வெளிப்படுத்தினர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் சமயநெறிக்குப் பெருந்தொண்டாற்றினர். மனிதனைத் தீயவழியினின்று மீட்பதற்காக இறைவன் தோன்றியதாக ஆகமங்கள் விளக்குகின்றன. ஆழ்வார்களின் பாசுரங்களும், நாயன்மார்களின் திருமுறைகளும் இறைவனின் கருணையை வேண்டி கோயிலிலுள்ள அர்ச்சை அல்லது மூர்த்தி உருவத்தைச் சிறப்பாகப் போற்றிப் பாடப் பெற்றவையேயாகும்.

வேதங்களிலும், புராணங்களிலும், இதிகாசங்களிலும் காணப்படும் திருமால், சிவன் ஆகிய கடவுளரது பண்புகளைப் பத்தி இலக்கியத் தேனில் குழைத்து ஆழ்வார்களும், நாயன்மார்களும் மக்களுக்குத் தந்ததால், இந்து சமயம் நம்நாட்டில் புதுப்பொலிவுடன் விளக்கம் பெற்றது. தென்னகத்தில் தோன்றிய ஆழ்வார்களும், அடியவர்களும் பாடியருளிய வைணவ அந்தாதிகளில் வலியுறுத்தும் சமய நெறிகள் வேத புராண இதிகாசங்களில் உள்ள சமயக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டவையே என்பதில் ஐயமில்லை. சமயத்தின் அடிக்கருத்தை அறிவதற்கும், தெளிவதற்கும், உணர்வதற்கும் ஆழ்வார்களின் அந்தாதிகள் துணைபுரிகின்றன என்னும் உண்மையை உணர்கின்றோம்.

# 1. பத்திநெறி

பத்திஇலக்கியம் என்பது மக்களைப் பாடாது இறைவனைப் பாடுவது. இறைவனைப் பாடுவது என்பது இறைவனுபவத்தைப் பாடுவதாகும்.

இறைவனிடத்தும், பெரியவர்களிடத்தும் கொள்ளும் அன்பைப் 'பத்தி' எனத் தமிழ் இலக்கியங்களைக் கொண்டு விளக்க முடியவில்லை. இறைவனிடத்தும், அடியாரிடத்தும் கொள்ளும் அன்பே 'பத்தி' எனக் கூறப்படுகிறது.[1]

பத்தி இலக்கியங்கள் தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தில் பத்தி உணர்வு இல்லையென்று கூறமுடியாது. அன்பின் முதிர்ச்சியாகிய 'ஆர்வம்', 'பத்தி' என்ற பொருளில் வழங்கியிருத்தல் வேண்டும். 'அழிவில முயலும் ஆர்வமாக்கள் வழிபடும் தெய்வம் சட்கண்டாங்கு'[2] எனும் நற்றிணைப்பாடல் வரிகளில் 'ஆர்வ மாக்கள்' என்பது பத்தர்களையும், 'ஆர்வம்' என்பது பத்தியையும் குறிக்கும். மேலும், 'ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக் காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே[3] எனும் திருமுருகாற்றுப் படைத் தொடரில் 'ஆர்வலர்' என்றசொல் பத்தர்களைச் சுட்டும். 'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக'[4] எனும் பூதத்தாழ்வார் பாசுரத்திலும் 'ஆர்வம்' எனும்சொல் பத்தியைக் குறிக்கிறது.

'பத்தி' என்பதற்குக் கலந்துநிற்றல் என்ற வடநூற் பொருளையே ஏற்றுக்கொண்டாலும்[5] இறைவனோடு கலந்து நிற்றலையே தமிழ்ப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

அனைத்திற்கும் ஆதியான இறைவன் மீது மனிதனுக்கு எழுகின்ற கவர்ச்சியே 'பத்தி' என்றும் கூறலாம்.

மனிதனின் மனத்தைக் கவர்வது இறைவன் என்றாலும், அந்த உண்மையை மனிதன் உணர்வதில்லை. காரணம், அதைக் காணவிடாமல் மறைக்கும் ஒரு மறைப்பு மனிதனிடத்துக் காணப் படுகின்றது. இம்மறைப்பு மாயை என்றும் மலம் என்றும் அவித்தை என்றும் கூறப்படுகின்றது.[6]

வெறும் உணர்ச்சிவயப்பட்ட ஒன்றாகப் பத்தியை விளக்குவதில்லை. உள்ளத்தையும், அறிவையும் பண்படுத்தி நிற்கும் சாதனத்தையே 'பத்தி' என்பர்.[7]

'பத்தி' என்பது அடிப்படையான மனித உணர்ச்சியைப் புறக்கணிப்பதன்று. தன் சகோதர மனிதனிடம் அன்பு காட்டாதவனைப் பத்தன் என்று சொல்லிவிட முடியாது. சமுதாய அளவில் சகோதர மனிதர்களிடம் இதயக்கனிவு இல்லாதவர்களுக்கு இறைவனிடம் பத்தி பிறக்க முடியாது.[8]

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளிடத்தில் அதாவது பரமான்மாவிடத்தில் எல்லாம் வல்லதான ஜீவான்மா செலுத்தும் அன்பே 'பத்தி' எனப்படும்.[9]

இவ்வாறு பத்திநெறி பலவாறாகக் கூறப்படினும், பத்தி நெறிகளின் முடிந்தமுடிவு இறைவன்பால் அன்பு செலுத்துதலே என்பது போதரும். பத்திநெறி எனினும் அன்புநெறி எனினும் ஒன்றே. உயிர்களிடத்து அன்பு செலுத்துதலும் பத்திநெறியின் பாற்படும்.

பத்தர்களைப் பொறுத்தமட்டில் தம் பத்திவாழ்க்கைக்கு முதற்படியாகக் குறிப்பிட்ட ஓர் உருவ வழிபாட்டை மேற்கொண்டு, நாளடைவில் அவர்கள் வளர்ச்சியடைந்த நிலையில் தனிவடிவ வழிபாடு மெல்ல மறைந்து, உருவும் வடிவும் அற்ற பரம்பொருளுடன் ஒன்றிய நிலையைத்தான் பத்தி இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

தன்முனைப்பு, உடைமை போன்றவற்றை அழித்து இறைவனிடம் அன்பு செலுத்தி அவன் அருளை வேண்டி அவனிடம் அடைக்கலம் புகுந்தால், அனைவரும் இறைநியை அடையலாம் என்பது பத்தர்களின் நம்பிக்கை. இந்நம்பிக்கை மனிதனுக்கும், இறைவனுக்கும் இடையிலிருந்த தொடர்பை வெளிப்படுத்தும்.

சமயக்கருத்துக்களை அறிவின் துணைகொண்டு விளக்குவன சாத்திரங்கள்; உணர்வின் துணைகொண்டு உணர்த்துவன பத்திப் பனுவல்கள். ஆண்டவனை அறிவின் துணையால் ஆராய்தலைக் காட்டிலும், அன்பின் துணையால் அநுபவத்தில் ஆன்றோர்கள் பெரிதும் ஈடுபட்டிருந்த காரணத்தால் தமிழில் பத்திநூல்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

''உலக மொழிகளில் பத்தி இலக்கியங்கள் என்றால் முதலிடத்தைத் தமிழும், இரண்டாமிடத்தை ஈப்ருவும், மூன்றாமிடத்தைச் சமஸ்கிருதமும்பெறுகின்றது''[10] என்பார்.கருத்துஇவண் நினையத்தகும்.

## 2. முதலாழ்வார் மூவர் :

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரையும் முதலாழ்வார் என்பர். இவர்கள் வரலாறு பற்றிய விளக்கங்கள் கிடைக்கவில்லை. ஆனால் மூவரும் ஒருகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்றும், இம்மூவருக்கும் திருக்கோவலூரிலுள்ள இடைகழி ஒன்றில் பெருமாள் காட்சி கொடுத்து அருளினார் என்றும் சில அந்தாதிகள் பாடுவது கொண்டு அறியமுடிகின்றது.

கருமம், ஞானம், பத்தி யோகங்களைப் 'பத்திநெறி' என்று கூறுவர். இம்மூன்று நெறியினையும் முதலாழ்வார்கள் பேசுவதைக் காணமுடிகின்றது.

> ''சொல்லுந் தனையும் தொழுமின் விழுமுடம்பு
> செல்லுந் தனையும் திருமாலை — நல்லிதழ்த்
> தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்
> நாமத்தா லேத்துதிரேல் நன்று''[11]

எனும் பொய்கையார் பாடல் பொதுவாக இறைவழிபாட்டினைக் குறிப்பிடினும் கருமயோகக் கூறுகளையும் கூறிச்செல்கிறது எனலாம்.

கருமத்திற்கு அடுத்தநிலை ஞானநிலை. இந்த ஞானம் நிலையை,

> ''ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள்
> தானத்தால் மற்றவன்பேர் சாற்றினால், வானத்
> தணியமரர் ஆக்குவிக்கும்''[12]

என்று பூதத்தாழ்வார் பேசுகின்றார்.

ஞானநிலைக்கு அடுத்த நிலையே பத்தியோகம். இந்த நிலையிலும் தியானநிலை உண்டு. இந்தத் தியான நிலையில் ஆன்மா தனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பினை அறிகின்றது.

> '' உய்த்துணர் வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி
> வைத்தவனை நாடி வலைப்படுத்தேன்''[13]

என்ற பேயாழ்வாரின் பாசுரத்தில் இந்த நிலையினை அறிய முடிகின்றது.

ஞானமே பத்தி நிலையாக முதிர்கின்றதை ''ஞானம் கனிந்த கலம்''[14] என்று இராமாநுச நூற்றந்தாதி குறிப்பிடுகின்றது.

பரபத்தி, பரஞானம், பரமபத்தி என்று மூன்று பிரிவுகளாகவும் வேறுபடுத்திக் காட்டும் மரபு உண்டு. 'பரபத்தி' என்பது எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்கிற ஆவல். அவனை நேரில் காணல் 'பரஞானம்' பின்பு மேன்மேலும் இடையறாது அனுபவிக்கவேண்டும் என்னும் ஆவல் 'பரமபத்தி' எனப்படும்.

இந்த மூன்று நிலைகளுக்கும் முறையே பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களும் எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றனர். இம்மூவருடைய அருளிச் செயல்களினின்றும் இந்த நிலைகளைக் கண்டறியலாம்.

இறைவனுடைய திருவருளால் பரபத்தி நிலையை அடைந்த பொய்கையாழ்வார் மயக்கம் தரும் அஞ்ஞான இருள் நீங்கும்படி பூமியை அகலாகவும், பூமியைச் சுற்றியுள்ள கடலை நெய்யாகவும், வெப்பம் மிக்க கதிரவனை விளக்காகவும் உருவகப்படுத்திக் காட்டுகின்றார்.

எம்பெருமான் தலைவன் என்றும், அவனுக்கு அடிமையாக இருப்பதே ஆன்மாவின் இயல்பு என்றும் அவனது திருவடிகளில் செய்யும் அடிமைத்தொழிலே ஆன்மா அடையவேண்டிய குறிக்கோள் என்றும், அதனைக் கைப்படுத்தித் தரும் வழியும் அவன் திருவடிகளே என்றும் தம் முதல் திருவந்தாதியில் அறுதியிட்டு உரைக்கின்றார்.

பூதத்தாழ்வார் பொய்கையாழ்வாரோடு இருந்து எம்பெருமானின் குணங்களை அனுபவித்ததன் காரணமாக வந்த அவரது பரபத்தி, பரஞான நிலையை அடையுமாறு வளர்ந்தது. அந்தப் பேரன்பின் சிறப்பினால் எம்பெருமானின் தன்மைகள் முழுவதையும் நேர்காட்சியாகக்கண்டு அனுபவித்தார். உலகில் பொருள்கள் தெரிவதற்காக விளக்கேற்றுதல் வழக்கம். இவர் தம் ஆன்மாவின் நிலையும், பரமான்மாவின் நிலையும் தெளிவாகத் தெரிவதற்காக ஞானச்சுடர் விளக்கேற்றினார் என்பதை அவரது பாசுரங்கள் உணர்த்துகின்றன.

உலகத்தில் தோன்றியுள்ள எல்லாப்பொருள்களினுள்ளும் அந்தர்யாமியாய் நின்று அவ்வெல்லாப் பொருள்களையும் தன்னுள்ளே அடக்கியுள்ள வேதத்தால் உணர்த்தப்பெறும் முதற் பொருள் என்று கூறுகின்றனர்.

''பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரி யோனே''[16]

என்ற நற்றிணை வரிகள் இங்கு நினையத்தகும்.

பேயாழ்வார் இரண்டு ஆழ்வார்களுடன் இருந்து எம் பெருமானுடைய திருக்குணங்களை அனுபவித்ததனால் இறைவனதுஅருளால் 'பரமபத்தி' தலையெடுத்து வளர்ந்தது.

பொய்கையார் 'வையம் தகளி'[17] என்றும், பூதத்தாழ்வார் 'அன்பே தகளி'[18] என்றும் இரண்டு விளக்குகளை ஏற்றிக்காட்டினார்கள். அந்த ஒளியில் பேயாழ்வார் 'கண்டேன் கண்டேன்' என்று களிப்புடன் பேசுகின்றார்.

ஒவ்வொரு திருவந்தாதியிலும் முதற்பாசுரம் உள்ளீடான பொருளை ஆதாரமாகக்கொண்டு அமைந்துள்ளன.

முதலாழ்வார் மூவர் நிலையை வேதாந்ததேசிகர்,

'' பாட்டுக்குரிய பழையவர்
மூவரைப் பண்டொரு கால்
மாட்டுக் கருள்தரும் மாயன்
மலிந்து வருந்துதலால்
நாட்டுக் கிருள்செய நான்மறை
அந்தி நடைவிளங்க
வீட்டுக் கிடைக்கழிக் கோவொளி
காட்டும் மெய்விளக்கே''[19]

என்று சிறப்பித்துப்பேசுவர். மூன்று ஆழ்வார்களும் உலகிலுள்ள அஞ்ஞான இருளைப் போக்கிப் பத்தி, பிரபத்திகளாகிய நெறிகளை வெளியிட்டு உலகினை உய்வித்தனர் என்பதை இப்பாசுரத்தின் மூலம் விளக்குகிறார். இம்மூவரின் பத்தி நெறிக் கட்டுரையினகத்து மேலும் விளக்கப்படும்.

### 3. அந்தாதிகள் வெளிபடுத்தும் பத்திநெறி :

அந்தாதி ஆசிரியர்கள் அனைவரும் திருமாலின் பரத்துவத்தைப் பாடியவர்கள். அவர்கள் பாடிய பொருள் — தெய்வம்; பாடிய அனுபவம் பக்தி அனுபவம், ஞான அனுபவம். இவர்களில் சிலர் உள்ளொளி பெற்றுச் சிறந்த ஞானியர்கள் என்ற

நிலையிலேயே எல்லாப் பொருள்களிலும் இறைவனையே கண்டு அனுபவித்துப் பாடுகின்றனர். சிலர் இறைவனோடு கலந்துபெற்ற பேரின்ப அனுபவத்தைப் பாடுகின்றனர்.

தெய்வ அனுபவத்தை இறைவட்டத்தில் நின்று பாடியுள்ளார்கள். அவர்கள் எம்பெருமானை அனுபவித்தலைப் பல கோணங்களில் காணமுடிகிறது. எம்பெருமானின் திருவடியின் பெருமையைச் சொல்லி அனுபவித்தல், எம்பெருமானின் திருநாமங்களைச் சொல்லி அனுபவித்தல், வடிவழகைச் சொல்லி அனுபவித்தல், அவன் எழுந்தருளிய திவ்விய தேசங்களின் வளங்களைச் சொல்லி அனுபவித்தல், அடியவர்களின் பெருமையைப் பேசி அனுபவித்தல் என்றிவ்வாறு பலவகைப்பட்ட தெய்வ அனுபவத்தை அறியமுடிகின்றது.

இறைவன் அருளைப் பருகிய இவர்களது வாழ்க்கையில் முற்பகுதி உலகியல் வாழ்க்கை என்றும், பிற்பகுதி தெய்வீக வாழ்க்கை என்றும் பாகுபடுத்திச் சில பாசுரங்கள் இவர்களது உலகியல் வாழ்க்கையை எதிரொலிப்பதையும் காணலாம்.

இறைவனிடம் ஆன்மாக்கள் கொண்டுள்ள அன்புப் பிணைப்பை நாயக — நாயகி உறவை உவமையாகக்கொண்டும் பேசப்படுகின்றது. இறைவனைக் கூடுவதிலுள்ள உயிர்த்துடிப்பினையே இவர்கள் பாசுரங்களில் காண முடிகின்றது.

## திருவடியின் பெருமையைச் சொல்லி அனுபவித்தல்

பொதுவாக ஆழ்வார்கள் அனைத்துவகை உலக இன்பங்களின் நிலையற்ற தன்மையையும் தம் உண்மைநிலை வெளிப்பாட்டில் அடையப்பெறும் நிலைத்த மகிழ்ச்சியையும், இறைவனுடன் கூடி இருத்தலினால் உலகத்துன்பங்கள் யாவும் மறையும் என்பதையும் அன்புவழி மரபாவது அனைவருக்கும் உரியது என்பதனையும் உறுதியாக நம்பியவர்கள் எனலாம். இவர்கள் இறைவன் திருவடிப் பேற்றையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டவர்கள்.

''அவன் தலைவன் — நாம் அடிமை என்கிற தெளிவு உண்டாகும்படி நன்றாக அறிபவர்களுடைய மனமானது பெரிய பசுக்கூட்டத்தினிடையே தன் தாயைத் தேடிக்கொண்டு செல்கிற கன்றைப்போல எம்பெருமானது திருவடிகளையே விரும்பித் தானே சென்றடையும்'' என்கிறார் பொய்கையாழ்வார்[20].

"மாறையோர்க் கீந்த மணிவண்ணன் பாதமே
நீமறவேல் நெஞ்சே நினை"[21]

என்றும்,

"மதிக்கண்டாய் நெஞ்சே மணிவண்ணன் பாதம்
மதிக்கண்டாய் மற்றவன் பேர்தன்னை — மதிக்
கண்டாய்"[22]

என்றும் வேண்டுகிறார் பூதத்தாழ்வார்.

ஆசிரியர் தம் உள்ளத்துக்குத் தாம் உபதேசிப்பதுபோலச் சொல்லிப் பிறருக்கு ஞானம் ஊட்டுகிறார்.

"உடலும் உள்ளமும் சிறிது தளர்ச்சிடையும்படி நேருகிற பொறுக்கவொண்ணாத் துயர்தரும் அந்திமநேரத்தில் உன் திருவடிகளை நினைத்தல் அரிதாதலால் அப்பொழுது நீ எழுந்தருளி எனக்கு மறுபிறப்பில்லாதபடி முத்தி தந்து ஆட்கொள்ளுதற் பொருட்டு இப்பொழுதே யான் உன்னைச் சரணமடைந்தேன்"[23] என்று நம்மாழ்வார் பாடுவார். ஆழ்வார் வேண்டுவதெல்லாம் இறைவனின் அடியுறை வாழ்க்கையும் இறைவழிபாடுமே ஆகும்.

பொருளாசை கொண்டு திரிகின்ற உலகத்தாரைக் குறித்து அப்பொருளின் நிலையாமையை எடுத்துக்காட்டி, "நீங்கள் எம் பெருமானின் திருவடிகளைச் சரணமடைந்து உய்யுங்கள்" என்று அறிவுறுத்துகின்றபொழுது,

"பகரமு னாடும்பனிச் சோலைவெற் பினிற்பார்க்
குக்கஞ்சன்
றக்ரமு னாடுகைத் தார்க்கறிந் தீர்கள் சரண்புகுமே"[24]

என்று அழகரந்தாதி ஆசிரியர் பாடுகின்றார். நகரங்களையும், நாடுகளையும் ஆண்ட அரசர்கள் பகைவரால் துரத்தப்பட்டுக் காட்டையும் மலை உச்சியையும் தேடிச் செல்லும்படியான நிலையை இவ்வுலகில் பார்த்துத்துள்ளோம். இங்ஙனம் நிலையில்லாத செல்வத்தின்மீதுள்ள ஆசையைவிட்டு, அறிய வேண்டியவற்றை அறிந்த எம்பெருமான் திருவடிகளைச் சரணடையுங்கள் என்று வேண்டுகிறார்.

ஒரு பொருளின் வருணனை அமைகின்ற விதத்தில் இருந்து வருணிப்பவனின் மன உணர்வு பெறப்படும். இஃது பரமனுடைய புகழிலே அமிழ்கின்ற பத்தனின் அன்பு வெளிப்பாட்டினைக் காட்டும்.

மேலும், கற்றற்குரிய உறுதிநூல்களைக் கற்றவர்கள் அக் கல்வி அறிவின் பயனாக அந்நூலில் கூறியபடி எம்பெருமான் திருவடிக்கு அடிமைப்பட்டால், கருமம் ஒழிய வீடுபேறு அடைவாரே யன்றி வெறுங்கல்வி அறிவுமாத்திரத்தால் வினை யொழியப் பெறமாட்டார்கள் என்றும் அழகரந்தாதி ஆசிரியர் கூறுகிறார் [25] இக்கருத்தை வள்ளுவர்,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"[26]

என்று கூறுவது ஒப்புநோக்கத்தக்கதாகும்.

இறைவனின் திருவடிகளைச் சரணடையுங்கள் என்று உலகத்தார்க்குக் கூறிய அதே ஆசிரியர், "நானே உன்னைச் சரணமடைந்து ஏதேனும் ஒரு திருத்தொண்டைச் செய்தேனாயின் நீ அடியேன் மனத்தில் எழுந்தருளலாம். அவ்வாறு ஒன்று மில்லாது இருக்கையிலும் நீ உனது கருணையாலே அடியேனது மனத்தில் வந்து புகுந்தாய். நீ இவ்வாறு எழுந்தருளியது செய்யாமற் செய்த பேருதவியாதலால், அதற்குத்தக்க கைம்மாறு இல்லாவிடினும் எல்லாவிதத்தினாலும் பரிபூரணனான உனக்குப் போலியாய் இருப்பதொரு பிரதியுபகாரமும் காண்கின்றிலேன்"[27] என்று நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் கூறுகிறார்.

இப்பாசுரத்தில் பலன் எதிர்பாராது செய்யப்பெறும் கருமம் கூறப்பெறுகின்றது. இறைவனின் கருணையும் அவன் ஆராதனைக்கு எளியவன் என்பதும் பெறப்படுகின்றது.

திருமாலின் திருப்பதிகளில் அடியார் கூட்டங்களுடன் சென்று கூடி எம்பெருமானது திருவடித்தாமரைகளை, முடிக்கு அணியாகச் சூடிவரும்படி தமது நெஞ்சை நோக்கி,

"நாடுதும்வா நெஞ்சமே நாராயணன் பதிகள்
கூடுதும்வா மெய்யடியார் கூட்டங்கள் — சூடுதும்வா"[28]

என்றும் வேண்டுகிறார்.

வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவார் போலச் சரண்புகுந்த மாத்திரத்தில் அவர்களது கருமங்களை யெல்லாம் ஒழித்து முத்தி தருபவையான எம்பெருமானது திருவடிகள் இருக்க அவற்றையடைந்து பிறவிப் பெருங்கடல் கடந்து வாழாது உலகத்திற் பேதையார் பலர் கரும வசப் பட்டு வருந்துவது என்னேயென்று உலகத்தாரை நோக்கி இரங்குகிறார் திருவரங்கத்து அந்தாதி ஆசிரியர்[29].

நான் இடைவிடாது எம்பெருமானது திருவடிகளைத் தியானஞ் செய்யத் தொடங்கிக் கருமம் அனைத்தும் தொலையுமாறு அவனது கருணைக்கு இலக்காகிவிட்டேன். ஆதலால் இனி என்னைக் கருமத்தினால் வரும் வியாதிகளினால் ஒன்றும் நலிவு செய்ய முடியாது என்று துணிவுகொண்டு நோய்களை விளித்து "நீங்கள் என் உடலைவிட்டுத் தூரத்தில் போய்ப் பிழையுங்கள்" என்று கூறும்பொழுது.

"தூரவிரும் புண்டரிக்கு மிக்கா யத்தைச் சூழ்பிணிகாள்
நேரவிரும் புண்டரர்க் கருள்வா னெடுவேங் கடத்தான்"[30]

என்று ஆசிரியர் உறுதியோடு கூறுவதைத் திருவேங்கடத்தந்தாதியில் காணலாம்.

பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீரை வார்த்தால் அந்நீர் இரும்பால் ஈர்க்கப்பட்டு மீண்டும் வெளிப்படாது. காய்ந்த இரும்பு அக்காய்ச்சல் தீர, நீரை முற்றும் உட்கொள்வதுபோல் எம்பெருமான் திருவடிகள் என்னுயிரைத் தம்மிடத்து ஈர்த்துக் கொள்ளுமாறு எம் மனத்திலே சேர்ந்திட்டான் என்று கூறுவதன் வாயிலாக 'மீளாமை' வலியுறுத்தப்படுகிறது. மேலும் நோய்களால் எனக்கு எவ்வகைத் துன்பமும் நேராது என்பதும் சுட்டிக் காட்டப்படுகின்றது.

'இரும்புண் ணீரினும் மீட்டற் கரிதென'[31] என்ற புறநானூற்று அடி ஈண்டு நினையத்தகும்.

எவனொருவன் இறைவனுடைய திருப்பாதங்களைச் சரணாகதி அடைகின்றானோ அவன் மனத்தில் இறைவன் குடிகொள்வான் என்றும் அவ்வாறு இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவனை எந்த நோய்களினாலும் வருத்த முடியாது என்றும் கூறுவதின் வாயிலாகப் 'பிரபத்தி' வலியுறுத்தப்படுகின்றது.

இவ்வாறு உலகத்தாரைப் பார்த்துச் சரணடையுமாறு வேண்டுதலும், அதனால் விளைகின்ற பயனைக் கூறுதலும், பின் தம்மைச் சரணமடையுமாறு தன் நெஞ்சுக்குக் கூறுதலையும், பின் தாம் சரணமடைந்த நிலையினையும் கூறுவதன் வாயிலாக இறைவன் திருவடியின் பெருமைகளை இவ்வுலகத்திற்கு உணர்த்துதலை இவர்கள் நோக்கமாகக்கொண்டுள்ளனர் என்பது ஈண்டு கருதத்தக்கது.

"கோவர்த்தன கிரியால் ஆனிரைகளைக் காத்தவனே! பற்றற்று உன் திருவடிகளைச் சரணமடைந்தோம். உன்னை

நம்பியுள்ள உயிர்களைச் சிரமம் பாராது துயர்நீக்கிப் பாது காத்தருள வேண்டும்''[32] என்று வேண்டுகிறார் திருவரங்கப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர். எம்பெருமானது திருவடிகளைச் சரணமடைந்தார்க்கு அவன் உறுதியாக உதவிபுரிவான் என்பதை உலகத்தார்க்கு உணர்த்துகிறார்.

இறைவனின் அருளிச்செயல்களின் வரலாற்று நிகழ்ச்சி களை உவமையாகக் கூறிப் பத்திச்சுவையினை மிகுவிப்பது இவர்தம் இயல்பாகும்.

''எளியேன் திரிகரணங்களாலுஞ் செய்யும் வழிபாடுகளை ஏற்றுக்கொண்டு என்மீது அன்புகாட்டினை; ஆதலால் அந்த அன்பை முற்றச்செலுத்தி எனக்குப் பரமபதங் கிடைக்குமாறு என்னை உன் திருவடியிற் சேர்த்துக் கொண்டருள வேண்டு மென''[33] முறையிடுகிறார் திருவாய்மொழி நூற்றந்தாதி ஆசிரியர்.

எம்பெருமானுடைய திருவடிகள், என்னைப் பிறப் பொழித்துப் பரமபதத்தில் நித்திய முக்தர்கள் உடனிருந்து பல வகையான பகவத் கைங்கரியங்களைப் புரியச்செய்தன. ஆதலால் உலகத்திர்! நீர் விரும்பும் அவன் திருவடிகளை அடைந்து உய் யுங்கள் என்று வேண்டுகிறார் பெருமாளந்தாதி ஆசிரியர்[34].

''மரண வேதனை யுண்டாகிக் கபம் வரவும், ஐம்பொறி களும் தஞ்செயலற்றுப் போகவுமான நிலையில் அன்னையும் உற்றாரும் உறவுமில்லை. குடந்தையில் எழுந்தருளி இருக்கின்ற நின் பாதத்தாமரையின் நிழலல்லாது வேறு உறவில்லை''[35] என்று குடந்தையந்தாதி ஆசிரியர் எம்பெருமானின் திருவடியின் சிறப்பை இவ்வுலகிற்கு எடுத்து இயம்புகிறார்.

ஆசிரியரின் பத்தி வைராக்கியத்தையும், அவர் இறைவன்மீது கொண்டுள்ள ஈடுபாட்டினையும் இப்பாசுரம் உணர்த்தும்

கல்லைப் பெண்ணாக மாற்றிய எம்பெருமான் திருவடி களே தீவினையாகிய இருளைப் போக்கவல்லது என்று கூறுகிறார் நாராயண தீட்சிதர்[36].

சிற்றின்ப ஆசையால், ஆலையில் கரும்பு அவதியுறுவது போல மடவார்மீதில் ஆசைகொண்டு, மதிமயங்கி வாடித் துடிக்கின்றவர்களே எம்பெருமானின் திருவடிகளில் சரணடை

யுங்கள் என்று உலகத்தாரிடம் வேண்டுகிறார் புல்லையந்தாதி ஆசிரியர் 37.

காமம், பகை, பயம் முதலிய உணர்ச்சிகளை அடக்கி ஒழிக்கப்படுவது வேதநெறி. அவற்றை இறைவனிடத்தில் திருப்புவது பிரபத்திநெறி. இந்நெறி இப்பாசுரத்தில் வலி யுறுத்தப்படுகின்றது.

பத்தியின் முதிர்ச்சியால் இறைவனைப் புகலாக அடைந்து விடுபவர்களுக்கு அவனே 'இலட்சியம்' என்ற அளவில் நின்று விடுவதில்லை. அவனையே வழியாகவும், நெறியாகவும், குறியாக வும் அடியார்கள் கொண்டுள்ளனர் என்பதை உணரமுடிகின்றது.

இறைவனையன்றி வேறெவர்க்கும் வேறெதற்கும் தாம் அடிமையில்லை என்பதையும், அவனையன்றி வேறெவரையும் வேறெதனையும் இன்பமாகக் கருதேன் என்பதையும், அவனை யன்றி வேறெவரையும் வேறெதனையும் உபாயமாகக் கருதேன் என்ற உறுதியையும் காண்கின்றோம்.

திருமாலின் இயற்றன்மைகளை எடுத்துக்கூறி அவனது மலர்ப்பதங்கள் மனத்துள் புகுந்ததாகப் பாடியருளிய பாசுரங் களில் சரணாகதித்தத்துவம் போற்றப்பட்டுள்ளது.

பூரண பக்தியுடன் பகவான் திருவடிகளில் சரண்புகுவது ஒன்றே வீடுபேற்றிற்குரிய வழி என்பது வலியுறுத்தப்படுகின்றது.

எம்பெருமானின் திருவடிகளை அடைகின்றவர்களுக்கு நல்ல ஞானம் பிறக்கும். முன்செய்த பாவங்களும், பின் தம்மை வந்து அடைகின்ற பாவங்களும் நெருப்பிலிட்ட பஞ்சுபோல அழிந்து விடும். எனவே இறைவனுக்குத் தொண்டு செய்வதே மனித வாழ்க்கையில் பெறக்கூடிய பேறு என்று சுட்டிக்காட்டப்படு கின்றது.

கல்வி, குலம் முதலிய உலகப்பெருமைகள் இல்லாதவர்க்கும் பத்தியினால் பகவானுடைய அருளைப்பெறுதல் எளிதாகும் என்றும், அவனது திருவடிகளையே புகலாகப் பற்றினால் அவனது அருளால் பேரின்பப்பேற்றை அடையலாம் என்றும் கூறப்படு கின்றது.

எம்பெருமானது அவதாரங்களும் அவற்றில் அவன் நிகழ்த்திய அரிய செயல்களும் பல பாசுரங்களில் கூறப்பட் டுள்ளன.

இவ்வாறு இறைவனது திருவடிகளின் சிறப்புக்களை எடுத்துக்கூறுவது ‘பாதவகுப்பு’ எனவும், அதுபோல் தோள்களின் சிறப்பைக் கூறுவது ‘புயவகுப்பு’ எனவும் பிற்காலத்தில் பெயர் பெற்றன. அருணகிரியார் ‘சீர்பாதவகுப்பு’ என்றும் ‘புய வகுப்பு’ என்றும் பாடியுள்ளது ஈண்டு நினையத்தகும்.

எம்பெருமானின் திருவடிகளின் பெருமைகளைத் தம் அந்தாதிகளில் கூறாதவர்கள் இல்லை. எம்பெருமானின் திருவடியின் சிறப்பை எடுத்துக்கூறுவதில் பிள்ளைப்பெருமாளையங்கார் முதலிடம் பெறுகிறார். இவர் 52 பாசுரங்களில் திருவடியின் சிறப்பினை எடுத்துரைக்கின்றார்.

இறைவனது திருவடியின் பெருமையை உலகத்தார்க்கு உணர்த்துவதே இவர்களின் நோக்கமாக இருந்தாலும் அவர்கள் வாழ்ந்த காலநிலைக்கு ஏற்பக் கூறும் முறையிலும் சில வேறுபாடுகளைக் காணமுடிகின்றது.

முதலாழ்வார் மூவர் வாழ்ந்த காலம் சமயப்பூசலற்ற காலம் என்பதை, அவர்கள் பாசுரம் கொண்டு உணரமுடிகின்றது. இவர்கள் வேள்விகளையும், சடங்குகளையும்விட இறைவன் திருவடிகளை வணங்குதல் சிறப்புடையது என்று கூறுகின்றனர். எம்பெருமானின் திருவடியின் சிறப்பைக் கூறுமிடங்களில் வள்ளுவரின் தாக்கத்தைக் காணமுடிகின்றது.

திருமழிசையாழ்வார் வாழ்ந்தகாலம் சமயப்பூசல்கள் நிறைந்த காலம். இவர் பத்திச்சாரராக விளங்கியபோதிலும் சரணாகதியை வலியுறுத்துகின்றார். இவர் உலகத்தாரைப் பார்த்து எம்பெருமான் திருவடியைச் சரணடையுமாறு வேண்டுகிறார்.

நம்மாழ்வார் துறவு மனப்பான்மை கொண்டவர். மக்களின் சுகதுக்கங்களில் தாமும் பங்குகொண்டவர். பிறர் துன்பங்களைத் தம் நெஞ்சில் கொண்டு அவர்களுக்காக மன்றாடுவதைக் காண முடிகின்றது. தான் எம்பெருமானின் திருவடியைச் சரணடைந்ததாகவே கூறுகின்றார். உலகத்தாரும் தம்மைப்போல் இறைவன் திருவடியை நாடி நல்வாழ்வு பெறவேண்டும் என்று விரும்புவார்.

முதலாழ்வார்கள். தம்முடைய முயற்சியால் இறைவன் திருவடியை அடைய முயற்சி செய்யவேண்டும் என்கின்றனர். ஆனால், நம்மாழ்வார் அவன் நம்மைத்தாங்கிக் காத்துக்கொள்ளக் காத்துக்கிடக்கிறான். அவன் அருள்கொண்டு அவன் தாளை அடைவது நமக்கு எளிது என்று கூறுகிறார்.

பிற ஆசிரியர்கள் ஆழ்வார்களின் கருத்துக்களை ஏற்றுக் கொண்ட போதிலும், பத்தி நெறியை விட ஞான, கர்ம நெறி களையே பெரிதும் வலியுறுத்துகின்றனர். இறைவனது திரு வடிகளைத் தியானம் செய்து, தாம் செய்த கருமம் அனைத்தும் தொலையுமாறு எம்பெருமானின் திருவடிகளை மனத்தில் நினைக்க வேண்டுமென வலியுறுத்துகின்றனர்.

**திருநாமங்களைச் சொல்லி அனுபவித்தல்.**

ஆழ்வார்கள் தமது அன்பினால் இறை அருளைப்பெற்று அதனை உலகுக்கு அளித்தவர்கள் அவர்களது நோக்கம் உணர்ச்சி களின் அடிப்படையில் இறைவனிடம் அன்பு செலுத்துவதாகும். எனவே, இவ்விறை அன்பர்கள் அன்பு வழியையே இறைவனை அடையச் சிறந்த வழியாகக் கொள்கின்றனர். அன்புவழியில் இறைவனுக்கும் அவனது அடியவர்களுக்கும் தொண்டுசெய்ய விரும்புகின்றனர். இறையன்பே அவர்களிடம் முனைந்து நிற்கின்ற தைக் காணமுடிகின்றது. இவர்கள் தன்னிலும், இவ்வுலகப் பொருள்கள் அனைத்திலும் நாராயணனையே கண்டனர். தம் தமிழ்ப் பாசுரங்களால் அவனை எண்ணி வாழ்ந்தவர்கள். உயிர் இவ்வுடலைத் தன்னிருப்பிடமாகக் கொண்டது போன்று நாராயணன் இவ்வுலகைத் தன்னிருப்பிடமாகக் கொண்டுள்ளான் என்று எண்ணியவர்கள்.

நாராயணன் என்பது எட்டெழுத்து மந்திரம் என்றும், பரத்துவநிலையில் எம்பெருமான் பெறும் பெயர் என்றும் கூறுவர். இறைவனின் திருநாமத்தை வேதத்திற்கு இணையாக ஆழ்வார்கள் கருதியதை அவர்கள் பாசுரங்களைக் கொண்டு அறியலாம்.

இவ்வுலகில் எல்லோரும் நற்கதி பெறுவதற்கு யாதொரு தடையுமில்லை. எளிதில் கூறக்கூடிய இறைவன் திருநாமத்தைச் சொல்வதற்குக் கருவியான நாவும், இறைவனால் படைக்கப்பட் டிருக்கின்றது. இப்படி எம்பெருமானை ஏத்துவதற்கென்று ஏற்பட்ட நாவைக் கொண்டு எம்பெருமானை ஏத்தாது பயனற்ற செய்திகளைப் பேசுவதற்கு இதைக் கருவியாகக்கொண்டு, உலகத் தார் வீணே துன்பப்படுகின்றனரே என்று இரங்கிக் கூறுகின்றார் பொய்கையாழ்வார்.

எம்பெருமானை வாய்விட்டுப் புகழ்வதற்கேற்ற காலம் ஏராளமாகவுள்ளதே, இருந்தும் இவ்வுலகத்தார் வீணாகப் பொழுதைக் கழித்து, கொடிய நரகத்தை அடைவது ஏன் என்று பூதத்தாழ்வார் வினவுகின்றபோது,

"தாமுளரே தம்முள்ள முள்ளுளதே தாமரையின்
பூவுளதே யேத்தும் பொழுதுண்டே — வாமன்
திருமருவு தாள்மருவு சென்னியரே செல்வே
அருநரகம் சேர்வ தரிது"[38]

என்று பாடுவார்.

எம்பெருமானைத் துதித்து அவனருள் பெற்று அழிவில்லா வீட்டை அடைவதற்கு ஏற்ற சாதனமான நாவையும் கவனத்தையும் அவன் திருநாமத்தை உச்சரிக்கப் பயன்படுத்தாமல், நிலையில்லாத பொருளையும் சிற்றின்பத்தையும் பெறுதற்கு ஆசைப்பட்டு விலைமாதரை நயந்துரைக்கும் உலகத்தாரைப் பார்த்து,

"இல்லைகண் டீரின்பந் துன்பங்கண் டீர்கண்ட
வேந்திழையார்
சொல்லைக்கண்டு ஈரமுதென் றுந்தொண்டீர்
தொல்சுரன்நிறங்
கல்லைக்கண் டீரவத்தைத் திருவேங்கடக் காவலனை
மல்லைக்கண் தீர்தரத்தோய்ந் தானைவாழ்த்துமின்
வாழுகைக்கே[39]

என்று கூறும் ஐயங்காரின் கருத்து பொய்கையாழ்வாரின் கருத்தோடு ஒன்றியிருப்பது குறிப்பிடத்தகும்

இதே கருத்தை நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதியும் கூறுகின்றது. "எம்பெருமான் வாய் முதலிய உறுப்புக்களை அளித்து மானிடர்களைப் பிறப்பித்ததன் நோக்கம், இவர்கள் தன்னை அடைந்து வழிபட்டு நற்கதி பெறுதற் பொருட்டே. ஆதலால் அப்பெருமானது திருநாமங்களைச் சொல்லித் துதிக்குமாறு வாயையும், அவன் திருவுருவத்தைத் தரிசிக்குமாறு கண்களையும், அவனது வைபவங்களைக் கேட்குமாறு செவிகளையும், அவனது திவ்விய தேசத்தைக் கூப்பித் தொழுமாறு கைகளையும் படைத்துள்ளான்"[40] என்று கூறுகின்றது. அப்பரடிகளின் திருவங்கமாலை ஈண்டு நினையத்தகும்.

இறைவன்மீது அன்பு பெருகி, அதனால் மனங்கசிந்து கண்ணீர் பொங்க அவனை நினைத்துக்கொண்டு இருத்தலும், அவன் திருநாமங்களைக் கூறுதலும், அவனைத் தன் உயிராகக் கருதுதலும், அக்காரணத்தால் இறைவனுக்கு மிகவும் பிரியமாகத் தன்னை ஆக்கி, இறைவனது அருளைப் பெறுதலுமாகிய இவை யாவும் பத்தியுள் அடங்கும் என்பதை இப்பாசுரங்கள் உணர்த்துகின்றன.

கண்ட கண்ட தேவதைகளின் கால்களிலெல்லாம் விழுகிற அறிவு கேடர்களே! வேதமோதுவது நல்லது, அது செய்யச் சக்தியற்றவர்கள், திருமாலின் திருநாமங்களைச் சொல்லுவதே வேதங்களின் சாரமாகும் என்பதனை 'மாதவன் பேர் சொல்வதே வேதத்தின் சுருக்கு' என்று கூறுகிறார் பூதத்தாழ்வார்[41].

இறைவனது நாமத்தைச் சொல்லுதலும், வேதத்தை ஓதலும் பத்தியை வளர்க்கும் சாதனங்களிலெல்லாம் மிகச் சிறந்தவை என்பதை இப்பாசுரம் வெளிப்படுத்தும்,

ஒருநாளும் அழிவில்லாதவனாகிய எம்பெருமானுக்கு ஆட்பட்டு மறவாமல் அவன் திருநாமத்தை வாழ்த்தவேண்டும். அவ்வாறு வாழ்த்துவதால் கழிந்த நாள்களும், இனிமேல் வரப் போகிற நாள்களும், நிகழ்காலமுமாகிய எல்லாக் காலங்களும் நல்ல காலங்களாகும் என்பதை,

'' சென்றநாள் செல்லாத செங்மண்மா லெங்கள்மால்
... ... ... ... ... ... ... ... ... ...
மறவாது வாழ்த்துகவென் வாய்''42

என்பர் பேயாழ்வார். மேலும், அவன் திருநாமத்தை உலகத்தார் ஒன்றுகூடிப் போற்றி உரைக்கவேண்டும் என்பதைப், ''புவியினர் போற்றியுரைக்கப் பொலியுமே''43 என்று கூறுகின்றார்.

முதலாழ்வார் மூவர் தாம்பெற்ற பயனை உலகத்தாரும் பெறவேண்டும் என்று எண்ணுகின்றனர். இவ்வுலகத்தார் நற்கதியடைவதற்கும், வேதத்தை அறிந்துகொள்வதற்கும், வாழ்நாள் சிறப்புற அமைவதற்கும். கூற்றுவனும் கொடிய பாவங்களும் தீயசெயல்களும் அணுகாமல் இருப்பதற்கும், எம்பெருமான் திருநாமத்தை வாயார வாழ்த்தும்படி வேண்டுகின்றனர்.

கூற்றுவன் அணுகாமலும், கொடிய பாவங்கள் அணுகாமலும் தீயசெயல்கள் அணுகாமலும் இருக்க உபாயமாகிய எம்பெருமான் திருநாமத்தைக் கூற நான் அறிந்துகொண்டேன் என்பதை,

''கூற்றமும் சாரா கொடுவினையும் சாராதே
மாற்றமும் சாரா வகையறிந்தேன்''44

என்று திருமழிசைப்பிரான் கூறுகின்றார்.

'மற்று ஒரு தெய்வம் எண்ணேன்; உன்னை என் மனத்து வைத்துப் பெற்றேன். நாக்கினை உயர்த்தி அழுத்தி உன் திரு

நாமத்தைக் கூறுகின்றேன். சிறையிலிருந்து என்னை மீட்பாயாக, என்று வேண்டும்பொழுது, ''நாவை யண்ணாந் தலைசத்துன் திரு நாமம் நவில்வம்''45 என்று கூறுகின்றார், மகர நெடுங்குழைக் காதர் அந்தாதி ஆசிரியர். 'மற்றும் ஓர் தேவை எண்ணேம்' என்றவர் அடுத்த பாசுரத்தில் புருஷோத்தமனையே தஞ்சம் என்று பற்றின குகன் பெற்ற பேற்றினை எடுத்துக்காட்டி, அவன் திருநாமம் விளித்தால் அன்பர் இருக்கும் இடத்தைத் தேடிவந்தருள் பவன் எம்பெருமான் என்பதை,

''புராதனன் மாயன் புருஷோத்தமன் பரிபூர ணன்வெவ்
விராதனை மாய வதைசெய்த காரணன் விண்ணவர்கோன்
... ... .. ... ... ... ... ... கேசன்எம் கேசவனே''46

என்றும்,

''ஸ்ரீதரனே மதுசூதனே! சிலை ஏந் துபுய
பூதரனே புலவோர் அமுதேபுவி தாங்கியகா

மோதரனே! குலநாத! நிகரில்முகில் வண்ணனே''47

என்றும் எம்பெருமான் திருநாமங்களைக் கூறித் தம்மோடு சிறையில் இருந்தவர்களை ஆசிரியர் தேற்றுகின்றார். இப்பாசுரங் களில் ஆசிரியரின் அடிமனத்தில் முளைவிடும் பத்தி உணர்வினைக் காணமுடிகின்றது. பன்னிரு நாமங்களைக் கூறுதல் வைணவ மரபு என்பதும் கருத்தாகும்.

அழகருடைய திருநாமங்களைப் பத்தியோடு உச்சரிக்கும் அன்பர்களுடைய மனத்தைப் பத்தி மிகுதியினால் உருகச்செய்யும்; ஆனந்தத்தால் அவர்களுடைய உயிரை நெகிழப்பண்ணும்; தொன்றுதொட்டு வருகின்ற நீண்ட கருமங்களின் வஞ்சனையை அழிக்கும்; அவர்களுடைய பிறப்பை ஒழிக்கும் என்று அழகரந் தாதி திருநாமத்தின் சிறப்பையும் பயனையும் வலியுறுத்தும்48.

அவனது திருநாமங்களைச் சொல்லுகின்றவர்களுக்குப் பரமபதம் உண்டு என்பதைக் குடந்தையந்தாதி,

''மாதவ வச்சுதன் மாயன் முராரி வரதகண்ணன்
போதவ வச்சு தனத்தன் பிரான்பொன்னி சூழ்குடந்தை
யாதவ; னச்சுத கத்தடத் தாடிய விண்ணமுத
வோதவ வச்சுத னையனென் பார்க்குண் டுறுகதியே''49

என்று கூறுகின்றது.

இறைவன் ஒருவனே உயிர்களின் பொருட்டுப் பலவகையான தோற்றத்தையும், பல்வேறு நாமங்களையும் கொண்டு விளங்குகின்றான். அவனே எல்லாமுமாக உள்ளான். அவன் நாமம் கூறுவார் உய்வார் என்று இப்பாசுரத்தில் சுட்டிக்காட்டப் படுகின்றது.

'ஓம் நாமோ நாராயணாய' என்ற எட்டெழுத்தைக் கூறினேன். ஆதலால் என் வினைகளெல்லாம் தூளாகி விட்டன. இனி உலகத்தோடுள்ள உறவும் போயிற்று''[50] என்று கூறுகிறார் திருமுட்டப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர்.

ஆதிசேடன்மீது கண்துயிலும் எம்பெருமான், திருநாமங் களைக் கூறி வழிபடும் அடியார்களின் பிறவித்துன்பத்தை ஒழிப்பான். மேலும் வினைப்பயனால் மானிடராய்ப் பிறந்து, பின் புல்லாணிக்கரசனின் நாமம் கூறி வழிபடுவோர்க்கு இறப்பை நீக்கிப் பரமபதம் அளிப்பான் என்கிறார் புல்லையந்தாதி ஆசிரியர்[51].

அந்தாதிகள் சில புராணக்கதைகளின் வாயிலாகவும் எம் பெருமான் நாமத்தின் சிறப்புக்களை எடுத்துக் கூறுகின்றன.

அந்தாதி ஆசிரியர்கள் அனைத்து உலகின்பங்களின் நிலையற்ற தன்மையையும், தன் உண்மைநிலை வெளிப்பாட்டில் அடையப்பெறும் நிலைத்த மகிழ்ச்சியையும், இறைவனுடன் கூடியிருத்தலினால் உலகத்துன்பங்கள் யாவும் மறையும் என்பதனையும், அன்புவழி மரபானது அனைவர்க்கும் உரியது என்பதனையும உறுதியாக நம்பியவர்கள் என்பதை இவர்களின் பாசுரங்கள் வெளிப்படுத்துகின்றன.

தெய்வக்குணங்களில் 'தான்' என்ற உணர்வை இழந்து தெய்வ உணர்வால் கலந்து நிற்கும் அனுபவமே இங்கு பேசப் படுகிறது.

இறைவன் மீது அன்பு பெருகி, அதனால் மனங்கசிந்து, கண்ணீர் பெருக அவனை இடையறாது நினைத்துக்கொண் டிருத்தலும், அவனைத் தனக்கு உயிராகக் கருதுதலும், அக் காரணத்தால் இறைவனுக்கு மிகவும் பிரியமாகத் தன்னை ஆக்கி இறைவனது அருளைப் பெறுதலும் பத்தியுள் அடங்கும் என்பது பெறப்படும்

**வடிவழகைச் சொல்லி அனுபவித்தல் :**

வைணவ அடியார்கள் தங்கள் வழிபடுகடவுளையே முழு முதலாகக் கொண்டு வழிபட்டு வந்தனர். இவர்கள் இறைவனின் நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம் ஆகியவற்றை ஒன்றுபோல் மதித்துப் பத்தி செலுத்தினர். அழிவில்லாத பேரின்ப உலகைப் பற்றிய உணர்வு இவர்களிடம் எழுகின்றதைக் காண முடிகின்றது.

"பொங்கி அலையெறியுங் கடல்போன்ற எம்பெருமானது அழகிய திருக்கைகளில் சாரங்க வில்லினுடைய நாண் உராய்ந்ததனாலுண்டான காய்ப்பானது இருக்கின்றது. திருவடிகளில் சகடத்தை உதைத்ததனால் உண்டான காய்ப்பு இருக்கின்றது. இரணியாசுரனுடைய மார்பைக் கிழித்தெறிந்ததனால் உண்டான காய்ப்பு விரல்களில் இருக்கின்றது"[52] என்று எம்பெருமானின் அங்கங்களை விளக்குவதன் வாயிலாக அவனது அவதாரச் சிறப்புக்களை எடுத்துரைக்கின்றதை உணரலாம்.

திருவடிகளை உயரத்தூக்கியவனும் நமுசி முதலானவர்கள் நடுங்கும்படியாக உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு பார்க்கின்ற பார்வையிலேயே அவ்வெதிரிகள் சுருண்டு விழும்படிக் கண்கள் வட்டமிட, நெருப்பை உமிழ்கிற திருவாழியைத் தரித்தவனுமாகிய எம்பெருமானுடைய தாமரைமலர் போன்ற திருவடிகளைத் தஞ்சம் அடைந்தவர்கள் பரமபதத்தை அடைவார்கள் என்கிறார் பூதத்தாழ்வார்[53]

இறைவன் தன்மையையும் பிரபத்தியின் பெருமைகளையும் இப்பாசுரம் வெளிப்படுத்துகின்றது

கரிய பெரிய மேகம் போன்ற வடிவை உடையவனும், கரிய கடல்நீரின் நிறத்தை உடையவனும், நீலமணி போன்றவனுமான எம்பெருமானின் அழகை ஆராய்ந்து நோக்குமளவில், திருக்கால்கள் தாமரைமலர் போன்றவை, திருக்கைத்தலங்களும் அத்தாமரை மலர் போன்றவையே, உலகளந்த திருவடியும் அத்தாமரை மலர் போன்றவையே என்பதை,

"கண்ணுங் கமலங் கமலமே கைத்தலமும்
மண்ணளந்த பாதமும் மற்றவையே"[54]

என்கிறார் பேயாழ்வார்.

மற்றொரு பாசுரத்தில் திருத்துழாய் மாலையை அணிந்தவனும், திருவாழியை ஏந்தியவனும், சாரங்க வில்லை உடைய

வனுமான எம்பெருமானின் அங்கங்களின் பண்புகள் எப்படிப் பட்டவை எனில், பேசுகின்றவர்கள் அவரவர்கள் எவ்வளவு பேசுகின்றார்களோ அவ்வவ்வளவேயாம் என்பதை,

"பேசுவார் எவ்வளவு பேசுவார் அவ்வளவே
வாச மலர்த்துழாய் மாலையான்" [55]

என்று பேயாழ்வார் பாடுகின்றார்.

அழகிற் சிறந்த மன்மதனும் தனது வடிவழகைக்கண்டு தான் பெண்ணுருக் கொண்டு உனது அழகினை அனுபவிக்க எண்ணினான் என்கிறார் திருவரங்கத்து அந்தாதி ஆசிரியர். "வராகா! வாமனனே! வட்ட வடிவமான சக்கராயுதத்தை உடையவனே! இராமனாக அவதரித்தவனே! நினது திருமேனி யின் வடிவழகைப் பார்த்தால் மன்மதனும் உன்னைக் கூடுதற்கு மகளிராய்ப் பிறக்க ஆசைப்படுவான் என்பதை,

"வாராகவா மனனே யரங்காவட்ட நேமிவல
வாராகவா வுன்வடிவு கண்டான்மன் மதனுமட
வாராகவா தரஞ்செய்வனென் றாலுய்யும்வண்ணமெங்கே
வாராகவா சமுலையேனைப் போலுள்ள மாதருக்கே" [56]

என்கிறார். இறைவனைக் கூடுவதிலுள்ள உயிர்த்துடிப்பினையே இவரது பாசுரங்களில் கேட்க முடிகின்றது.

மற்றொரு பாசுரத்தில் உனது திருப்பெரு வடிவுக்கு முன் மிகச் சிறியதாகிற மண்ணுலகம், நீ உண்ணுங் காலத்தில் உனக்கு ஒரு கவளத்துக்கேனும் போதுமோ? என்றும், உனது பெருவடிவத்துக்கு முன் நட்சத்திரங்கள் மலர்கள் போலச் சிறியன வாயின என்றும் கூறுகின்றார் [57].

"தாங்கட லாழி வளைதண்டு வாள்வில்லிற் றானவரை
யீங்கட வீசிக் குறித்தடித் துத்துணித் தெய்துவெல்லும்
பூங்கடல் வண்ண னிலை" [58]

என்று திருவேங்கடத்தந்தாதி பாடும்.

இறைவன் தனதருளால் அத்தகைய தூயவடிவங்களில் தனது பூரணத்தன்மையை இழக்காமலேயே இருக்கின்றான் என் பதே இவ்வாசிரியரின் கருத்து.

தனது திருநாபியில் பிரமனையும், வலப்பக்கத்தில் சிவனை யும், திருமார்பில் திருமகளையும் கொண்ட மேனியை உடைய வராக விளங்குவதால் "தன்பங்களையும் படி மூவரை வைத்து" [59]

எனவும், "பல நீலோற்பல மலர்களின் இடையிடையே சில செந்தாமரை மலர்கள் பூத்தன போன்ற திருமேனியை உடையவன்" 60 என்றும் திருவேங்கடத்தந்தாதி ஆசிரியர் இறைவனின் திருமேனி அழகினை விளக்குகின்றார்.

நீண்ட மேகம் போன்ற நிறமுடையவன், சிவனை ஒரு பக்கத்திலுள்ளவன், உந்தித்தாமரையின்வழி பிரம்மனைத் தந்தவன் என்கிறார் திருஎவ்வுள் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர் 61.

"மேகம் போன்ற வடிவமுடைய பெருமானே! வலம்புரிச் சங்கும் சக்கரமும் உன் கையிலுள்ளன. பெரிய பிராட்டியார் உனது மார்பை விட்டுப் பிரியாது இருப்பவள், பிரம்மன் உனது உந்திக்கமலத்தில் உள்ளான், சிவபெருமான் உனது திருமேனியில் ஏகதேசம்" என்று எம்பெருமானின் வடிவழகைத் திருக்கடன் மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர் விளக்குகிறார் 62.

பிரம்மன் திருமாலின் உந்தியில் தோன்றியவன் என்பதைப் பல பாசுரங்கள் எடுத்துரைக்கின்றன. சிவபெருமானது சாபத்தைத் திருமால் போக்கியதாகவும், சிவபெருமானைத் தன்மேனியின் இடப்பக்கத்தில் கொண்டுள்ளதாகவும் இவ்வாசிரியர்கள் தங்கள் பாசுரங்களில் குறிப்பிட்டுத் திருமாலின் உயர்வையும் சிறப்பையும் போற்றியுள்ளதைக் காணமுடிகிறது.

"திருமேனி நிறத்தால் நீலோற்பலமலரையும் கடலையும் போன்றவன், திருத்துழாய் மாலையைத் தரித்த அழகிய மார்பை உடையவன், திருமலையில் உதித்த கதிரவன் போல் விளங்குகின்றவன், கறுத்த திருமேனியை உடையவன், மேலுலகத்தையும் பூமியையும் முன்பு அளந்தருளிய செந்நிறமான பாதங்களை உடைவன்" என்று திருவரங்கத்துப் பதிற்றுப்பத்தந்தாதி கூறுகின்றது 63.

திருவடிகளும், திருக்கைகளும் மலர்களை ஒத்திருக்கப் பெற்ற காளமேகம் போன்ற திருமேனி நிறத்தை உடையவன் என்கிறது திருவாய்மொழி நூற்றந்தாதி 64.

இவர்கள் கண்ட மலரும் கடலும் ஞாயிறும் திங்களும் பிறவும் இறைவன் வடிவங்களாம். இவர்கள் இயற்கையைக்கண்டு மகிழ்கின்றனர். அதன்கண் இறைவனைக் காண்கின்றனர். திருமாலின் நிறம், சாயல் போன்றவற்றையும், மார்பு, கண், திருக்கைகள் போன்றவற்றையும் பற்றிய வருணனைகள் அத்திரு

மாலின் திருவுருவம் அடியவர்கள் மனத்தில் நிலைத்திருக்கத் துணைபுரிகின்றன என்று கூறலாம்.

அழகிய முடியிலே பூமாலையை உடையவன் என்றும், திருமார்பில் திருமகளை உடையவன் என்றும், அலங்காரன் என்றும், சுந்தரத்தோளனென்றும், அழகன் என்றும் பெருமாள் அந்தாதி ஆசிரியரால் இறைவன் அழைக்கப்படுகின்றான்[65].

ஆபரணங்கள் தரிக்கின்ற மார்பில் அழகிய நெற்றியை உடையவளை வைத்துக்கொண்டவனும், மாணிக்கத்தால் விளங்குகின்ற முடி அணிந்த தலையை உடையவனும், தாமரை போன்ற திருவடிகளை உடையவனுமாகிய எம்பெருமானை யான் எனது துன்பங்கள் நீங்கும்படித் திருத்தொண்டுகளைச் செய்வது எந்நாளோ? என்று கூறுகிறார் அழகரந்தாதி ஆசிரியர்[66].

இப்பாசுரங்களில் திருமாலின் அழகிய தோற்றப்பொலிவு விளக்கப்பட்டுள்ளது.

எம்பெருமான் ஆன்மா, சூரியன், தீ, மண், நீர், வெளி, சந்திரன், காற்று ஆகிய எட்டின் மூர்த்தியாக வடிவம் கொண்டவன் என்கிறார் திருநாகைத் திரிபந்தாதி ஆசிரியர்[67] சைவசமயத்தில் சிவனை அட்ட மூர்த்தியாக வணங்குதல் ஈண்டு நினையத்தகும்.

தாமரைப்பூவாகிய கைகளைக் கொண்டவன்; காடுகளில் தங்கிய மேகம் போன்றவன்; ஒளிபொருந்திய ஆராவமுதன்; தோலாடையும் பீதாம்பரமும், சூலப்படையும், வெண்சங்கும், பாம்பும் கவுத்துவமணியும் உடையவன்; நெருப்பு நிறமும் மேகநிறமும் வெளிப்படக் காட்சி தருகின்றான் என்கிறார் குடந்தையந்தாதி ஆசிரியர்[68].

இப்பாசுரம் சங்கரநாராயணத் திருவுருவைவிளக்குகின்றது. ஒரே மூர்த்தியில் இரண்டு கோலங்களைக் கண்டு வழிபடும் தன்மையைக் காட்டுகின்றது.

சிவனை வலது பக்கத்தில் வைத்திருப்பவன், அருள் நிரம்பிய கண்களையுடையவன், களாம்பழத்தை ஒத்த கருநிறமுடையவன், கைநிறைய வெண்ணெய் வைத்திருப்பவன், தனக்குத் தொண்டு செய்து வழிபாடு புரிகின்றவர்களுக்கு அருள் செய்கின்ற சோதி மயமானவன் என்கிறார் சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர்.[69]

நீலமணி போல் விளங்குகின்றவனும், நீண்ட திருக்கைகளை உடையவனும். பிராட்டியைத் தன் திருமார்பில் உடையவனும், மாபலியைப் பாதாளத்தில் நீண்டநாள் வாழும்படியாகச் செய்த திருவடிகளை உடையவனின் அருள்நெறியை அறிவார் யார்? என்று வினவுகிறார் பெரிய திருவந்தாதி ஆசிரியர்[70].

திருமகளைவிட்டு என்றும் அகலாதவனும், திருமேனி நிறத்தால் நீலோற்பல மலரையும் கடல் நீரையும் போன்றவனும், திருத்துழாய் மாலையைத் தரித்த தோள்களை உடையவனும், சங்கை ஏந்தியவனும் ஆகிய திருத்தலைச்சங்க நாண்மதியமென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான், சூரியனும் சந்திரனும் ஆகாயமும் பூமியும் நீரும் காற்றும் நெருப்புமாய் எங்கும் பரவி நிற்கின்றான் என்கிறார் பிள்ளைப் பெருமாளையங்கார்[71].

"வடுவில் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த
கெடுவில் கேள்வியுள் நடுவா குதலும்
இந்நிலைத் தெரிபொருள் தேரின் இந்நிலை"[72].

என்ற பரிபாடல் வரிகள் இங்கு நினையத்தக்கன.

"அனைத்தும் நீ அனைத்துப் பொருளும் நீ"[73]

என்ற பரிபாடலின் அடியும் இதனை உணர்த்தும்.

காண்போருக்குக் குளிர்ச்சியும், மகிழ்ச்சியும் நல்க விளங்கும் நிறைமதி போன்ற திருமுகமண்டலமும், கஸ்தூரித்திலகமும், பொற்புயமும், நான்மறைகளும் இன்னும் அறியாது தேடிக் கொண்டே இருக்கின்ற திருவடிகளும் உடைய எம்பெருமானை, வழக்கம்போல் தொழ முடியாமல் தடைப்பட்டதற்குக் காரணம் என்ன? என்று வினவுகிறார் நாராயணதீட்சிதர்[74].

ஒளிசான்ற மார்பும், குண்டலமணிந்த காதும், மலர் போன்ற முகமும் சிறந்த தோளும் உடைய நீ, என் எதிரிற் தோன்றி என்பால் அன்பு கூர்ந்து என் மனத்தை விட்டு அகலாது என்றும் தங்குவாய் என்று வேண்டுகிறார் புல்லையந்தாதி ஆசிரியர்[75]

மற்றொரு பாசுரத்தில் துளசிமாலை தரித்த அழகிய மார்பும், தண்டு, சக்கரம், சங்கு, வில், வாள் என்னும் பஞ்சாயுதங்களை ஏந்திய திருக்கரங்களும், தாமரை மலர் போன்ற திருமுகமும், மேகம் போன்ற திருமேனியும், குழையணிந்த காதும், மலர் போன்ற திருவடியும் ஆகிய இவ்வுறுப்புக்களைக்



கீழ்த்திருப்பதி என்று அழைக்கப்படும் திருவண்பரிசாரத்தில்
எம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலம் (கோபுரவாயில்)

கண்டு வழிபட்டால் புல்லைப்பதியான் நமக்குப் பிறவியைக் காட்டான் என்று பாடுகிறார்[76].

இறைவனின் திவ்விய மங்கள சொரூபம் இப்பாசுரங்களில் போற்றப்படுகின்றது.

எல்லா அந்தாதிகளும் இறைவனின் மூன்று திருக்கோலங்களையும், அவன் எழுந்தருளியிருக்கும் தலங்களில் சிறப்புக்களையும் விளக்குவதை காணமுடிகின்றது. குறிப்பாக நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் இறைவன் குடிகொண்டிருக்கும் கோலமும் எடுத்துக்கூறப்படுகின்றது.

108 திருப்பதிகளில் மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருவண்பரிசாரத்தில் குடிகொண்டிருக்கும் எம்பெருமானின் கோலத்தைக் கவிஞர் கூறும்பொழுது,

''வண் பரிசாரங் கிடந்த மாற்கு''[77] என்று இறைவன் பள்ளிகொண்டிருக்கும் கோலத்தை விளக்குகிறார். இப்பாசுரம் முரணாக அமைந்துள்ளது. திருவண்பரிசாரத்தில் எம்பெருமான் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறார். நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில்,

''வருவார் செல்வார் வண்பரி
சாரத்து இருந்தஎன்
திருவாழ் மார்பற்கு என்திறம்
சொல்வார் செய்வது ஏன்?''[78]

என்று எம்பெருமான் இருந்த கோலத்தைக் குறிப்பிடுகின்றார்.

அத்தங்கி தாதாரியர் தொண்டன் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் இறைவனது 'இருந்தகோலமே' கூறப்பட்டுள்ளது. இவ்வந்தாதிக்கு உரையெழுதிய ஸ்ரீ நிவாசையர் தம் உரையில் கீழ்க்கண்ட குறிப்பினைத் தருகின்றார்[79].

| | | |
|---|---|---|
| பெற்றோர் | — | காரி, உடையநங்கை |
| தீர்த்தம் | — | திருப்புனல், இலக்குமி தீர்த்தம் |
| விமானம் | — | கல்யாண விமானம் |
| பிராட்டியார் | — | திருமார்பணங்கு |
| சந்நிதி | — | கிழக்கு |
| கோலம் | — | **வீற்றிருக்கும் கோலம்** |
| எம்பிரான் | — | திருவாழ்மார்பன் |

"திருவண்பரிசாரம் என்ற பெயர் 'திருப்பரிசாரம்' என்று திரிந்து இப்போது 'திருப்பதிசாரம்' என்றே மருவி வழங்கி வருகின்றது. திருவண்பரிசாரத்து எம்பெருமானைத் தொழுதால் திருப்பதி சாரத்திலுள்ள எம்பெருமானைச் சேவிக்கும் பலன் உண்டு என்ற நம்பிக்கையும் இப்பகுதி மக்களிடம் வேரூன்றிக் கிடக்கின்றது. இந்த நம்பிக்கையால் 'திருவண் பரிசாரம்' என்ற திவ்விய தேசத்தின் பெயர் 'திருப்பதிசாரம்' என்றே அவர்களிடம் நிலைத்துவிட்டது. திருப்பதியில் நின்ற களைப்புத் தீரத் 'திருப் பதிசாரத்தில்' இருந்த திருக்கோலத்தி லிருந்துகொண்டு சேவை சாதிக்கின்றான்"80 என்பர் ந. சுப்புரெட்டியார்.

இவையன்றி ஆய்வாளர் இத்தலத்திற்கு நேரில் சென்று பார்த்தபொழுது, எம்பெருமானின் இருந்த கோலத்தையே காணமுடிந்தது. இக்கோலம் இடையில் ஏற்பட்ட மாற்றமன்று என்பதையும் ஆய்வாளரால் அறியமுடிந்தது.

ஆசிரியர் இத்திருப்பதிக்குச் சென்று இறைவனை வணங்கி இப்பாசுரத்தைப் பாடினாரா? அல்லது செவிவழிச்செய்தியை வைத்துக்கொண்டு பாடினாரா? என்ற ஐயத்துக்கு இடமளிக்கும் வகையில் இப்பாசுரம் அமைந்துள்ளது.

ஆழ்வார்களும், ஆச்சாரியர்களும் எம்பெருமானது உருவத் திருமேனியின் பொலிவில் ஈடுபட்டுப் புகழ்ந்துள்ள பாசுரங்கள் பல. அவை இவர்களது உருவத்தியானப் பெருமையையும் அன்புப்பெருக்கையும் வெளிப்படுத்துகின்றன. இறைவனின் இயல்புகளை வெளிப்படுத்த விரும்பிய இவர்கள் அவனது வடிவழகை, இயற்கைப் பொருள்களோடு அப்பொருள்களின் தன்மையால் இறைவனின் பண்புகளை வெளிப்படுத்துவதையும் உணரமுடிகின்றது.

இறைவனின் வடிவழகால் கவரப்பெற்ற இவ்வாசிரியர்கள் பேசியது ஒரு பொருளே என்பதை இவர்களது பாசுரங்கள் உணர்த்துகின்றன. இவர்கள் தன்னிலும், இவ்வுலகப் பொருள்கள் அனைத்திலும் எம்பெருமானைக் கண்டனர் என்பதையும் காண் கின்றோம்.

இறைவனால் கவரப்பெற்று இறையனுபவத்தில் திளைத்துப் பாடிய இறையனுபவப் பாடல்களே இவர்களுடைய பாசுரங்கள்

என்று கூறலாம். இறைவனோடு கலந்து பெற்ற பேரின்ப அனுபவத்தையே பத்திமை உணர்வாய் இவர்களது பாசுரங்கள் பேசுகின்றன.

**திவ்விய தேசங்களின் வளங்களைச் சொல்லி அனுபவித்தல்**

கவிஞர்கள் தாம் பெற்ற மெய்யுணர்வு அனுபவத்தைத் தன்மயமாக நின்று உணர்வுக்கு விருந்தாகப் படைப்பவர்கள். இவர்கள் ஏதேனும் ஒரு பொருளில் அழகினைக் கண்டு அனுபவித்துத் தாம் கண்ட அழகனுபவத்துக்குச் சொல்வடிவு தந்து கவிதையினைப் படைப்பர். இவ்வாசிரியர்களும் எம்பெருமான் குடிகொண்டிருக்கும் தலங்களின் இயற்கை அழகினில் ஈடுபட்டு அனுபவித்துத் தாம் கண்ட இயற்கை அழகினைப் பற்றி உணர்வுடன் கூடிய சொல்வடிவமாகப் படைத்து உள்ளனர்.

நாடு, ஊர்களின் இயற்கைச்சூழல் வருணிக்கப்படினும், இறைவனிடம் செலுத்தும் பத்திக்குப் பின்னணியாகவே அவ் வருணனைகள் அமைந்துள்ளன.

திருவேங்கட மலையிலுள்ள புனங்களைக் காக்கின்ற குறவர்கள் பரண்களிலிருந்தபடியே, வனத்தில் மேய்கின்ற யானைகளைத் துரத்துவதற்காகத் தங்கள் கையிலுள்ள பெரிய மாணிக்கக்கட்டியை யானையின் மீது எறிகின்றனர்; அங்குள்ள மலைப்பாம்புகள் யானையின் மேற்பட்ட இரத்தினத்தை மின்னலாகப் பிறழ உணர்ந்து இனி இடியிடிக்குமே என்று அஞ்சிப் புற்றினுள்ளே புகாநின்றன. இத்தன்மை வாய்ந்த திருமலையில் உள்ள எம்பெருமானது திருவடிகளை அடைந்தவர்கள் தங்கள் துன்பத்திலிருந்து விடுபடுவார்கள் என்கிறார் பொய்கையாழ்வார்[81].

மலைகளில் நவமணிகள் நிரம்பிக்கிடப்பதும், விலை மதிக்க முடியாத இம்மணிகள் குறவர்களுக்குச் சாதாரணமாகக் கற்களாதலால் யானையைத் துரத்த இப்பெரு மணிகளை விட்டெறிந்தனர் என்றும், இத்தகைய வளமுடைய மலையில் இருக்கும் எம்பெருமானை அடைகின்றவர்கள் மிகுந்த செல்வத்தைப் பெறுவார்கள் என்றும் இப்பாசுரம் சுட்டிக்காட்டும்.

மதப்பெருக்கால் செருக்கித் திரிகின்றது ஆண் யானை ஒன்று. அது தன் பெண் யானையைக் காண்கின்றது. அதற்கு

இனிய உணவு ஈந்து அதன் மனம் நிறைவிக்க விரும்புகின்றது. அந்த ஆண் யானை அருகிலிருந்த மூங்கிற் குருத்தைப் பிடுங்கி மலையிலுள்ள ஒரு தேனடையில் தோய்த்து அப்பிடியின் வாயில் ஊட்டுவதை,

''பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்நின்று
இருகண் இளமூங்கில் வாங்கி — அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்''82

என்று இரண்டாந்திருவந்தாதி பாடும். இதே கருத்தை,

''................ அலைமடு தேன் தோய்த்துப்
பிரச வாரிதன் இளம்பிடிக் கருள்செய்யும்''83

என்று பெரியதிருவந்தாதியும் பேசும்.

''முருகு நாறுசெந் தோளினை முழைநின்றும் வாங்கி
பெருகு சூழ்இளம் பிடிக்கு ஒருபிறை மருப்பியானை''84

என்று கம்பரும், இக்காட்சியை வருணிப்பது நினையத்தக்கதாகும்.

பாகவதர்கள் நன்மை தீமைகளில் விருப்பும் வெறுப்புங் கொள்ளாதிருக்கும்படி எம்பெருமான் பல திவ்யதேசங்களில் எழுந்தருளியிருக்கின்றதனால், அப்படிப்பட்ட திவ்யதேசங்களில் சிலவற்றைப் பேசி அனுபவிக்கின்றனர். திருவரங்கம், திருக்கோட்டியூர், திருவேங்கடம், திருநீர்மலை என்னும் இத்திருப்பதிகளின் பழமையினைப் பலபாசுரங்களின் வாயிலாக உணர முடிகின்றது.

பரமபதத்தை இருப்பிடமாகக்கொண்ட எம்பெருமானுக்குத் திருப்பாற்கடலும், திருமலையும், வண்டுகள் திரளாக இருக்கின்ற பரந்த சோலைகளை உடையதாய், விளங்குகின்ற திருக்கடிகைக்குன்றும், விண்ணகரமாகிய இத்திருப்பதிகள் எல்லாம் முன்பு அவனுக்குக் கோயில்களாக இருந்தனபோலும். இப்போது என் நெஞ்சமொன்றே அவனுக்குக் கோயிலாக இருக்கின்றது என்று தனது பத்தி நிலையினைப் பேயாழ்வார் வெளிப்படுத்துகின்றார்85.

ஆழ்வார் இப்பாசுரத்தில் திருக்கடிகைக்குன்றைச் சிறப்பித்துக் கூறுவதாய்ப் பொருள் கொள்வதற்குப் பாசுரம் இடமளிக்கின்றது.

'' பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவாற்குக் கோயில்போல் — வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன் றன்விண் ணகர்''86

என்பது பாசுரம். பண்டு திருவேங்கடம், திருப்பாற்கடல், திருவைகுண்டம் போன்றவற்றைத் தன்னிருப்பிடமாகக் கொண்டு உறைந்தவர்க்குத் தற்பொழுது வண்டுகள் திரளாக இருக்கின்ற மலர்மிகுந்த சோலைகளை உடைய அழகிய திருக்கடிகைக் குன்றையே ஆதாரமாகக் கொண்டுள்ளான் என்று பொருள் கொள்ள இப்பாசுரம் இடமளிக்கின்றது. இத்திருக்கடிகை — தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் ஒன்றென்பது குறிப்பிடத் தக்கது.

ஆசிரியரின் பத்திப்பெருக்கினை வெளிப்படுத்தும் நோக்கில், 'தன் நெஞ்சம் ஒன்றையே கோயிலாகக் கொண்டிருக்கிறான்' என்று கூறுவது சிறப்புடையதாக அமைந்துள்ளது.

அழகிய சோலைகளைச் செழித்து வளரச் செய்கின்ற யமுனா நதிக்கும், கங்கா நதிக்கும் தெளிவான அமுதம்போல் இனிதாகிற மேன்மையுள்ள காவிரி நதிக்கும், சமுத்திரத்திற்கும் தலைவனான எம்பெருமானது அழகிய திருவரங்கத்தை ஒரு தரமேனும் வாயினாற் சொல்லி அன்பு செலுத்தாமல், கருப்பஞ் சாறுபோலினிய சொற்களையுடைய மகளிர் திறத்திலே தீப்பட்ட மெழுகுபோல உருகுகின்ற உங்களுடைய பிறப்பை எம்பெருமான் ஒழிப்பது எவ்வாறு என்று இரங்கிக் கூறுகிறார் திருவரங்கத் தந்தாதி ஆசிரியர்[87].

வறுமையினால் வருந்தினாலும் நம் பெருமானைச் சேவிக்கத் திருவரங்கம் செல்லுதலும், அத்தலத்தை வாயால் சொல்லுதலும், கொடிய பழவினையை ஒழித்து முத்தி பெறுவதற்குச் சாதன மாகும் என்பதை இப்பாசுரம் சுட்டிக்காட்டுகின்றது.

உழவர்கள் வயல்களை உழவேண்டிய நிலையில்லாது சங்குகள் ஊர்ந்து செல்கின்ற வளங்கொண்ட குருகூரின் பெயரை உங்கள் வாழ்நாள் முடிவுறும் அத்தருணத்திலாவது பிறவி நோய்கள் அழியும் வண்ணம் சொல்லுங்கள் என்று நம்மாழ்வார் உலக மக்களை வேண்டுகிறார்[88].

''கரும்பும், நெற்பயிரும், பாக்கு மரங்களும் தங்களுக்குள் முந்திக்கொண்டு வளர்ந்து வருகின்ற வளப்பத்தை உடையதும், அலையுடன் கூடிய கடலானது காவிரியுடன் ஊடல் கொள்ளவும், கார்மேகங்கள் இங்குக் குழுமியுள்ளன என்று வான்மேகங்கள் தன்னிடம் வரும்படியாக விளங்குவதுமாகிய குடந்தையில்

எழுந்தருளியிருப்பவனே! என்னோடிருந்து கொண்டு துன்பத்தை உண்டாக்குகின்ற என் ஐம்பொறிகள் என்னை அடிமையாக்கி ஆட்டி வைக்கின்ற நிலையினின்றும் என்று ஓழியப்பெறுவேன்![89]" என்று குடந்தையந்தாதி ஆசிரியர் வேண்டுகிறார். "வயல்களில் முத்தும் நெல்லும் ஒளியுற்றுப் பிரகாசிக்கும் திருப்புல்லாணிப் பெரியோனைப் போற்றுவீராக" என்று மக்களிடம் வேண்டு கிறார் புல்லையந்தாதி ஆசிரியர்[90]

அலைகள் எறிகின்ற தெளிந்த நீரையுடைய தாமிரவருணி நதியின் கரையில் அமைந்தது திருப்பேரெயில் என்றும், இசை நான் மறையின் சங்கமம் என்றும், திங்களும் நாளும் விழா அறாத தென்திருப்பேரெயில் என்றும், பொதிப் பருவமாகிய செந்நெற் பயிர்கள் செழித்து வளரும் நஞ்செய் நிலங்களும் சந்தனச்சோலைகளும் செண்பகத்தோப்பும் சூழப்பெற்ற தென் திருப்பேரை என்றும் அழைக்கப்படுகின்ற வளப்பேரை வாழ் வாமனன் இன்றும் என்றும் காப்பான் என்று தன்னுடன் சிறையிலிருந்தாரைத் தேற்றுகின்றார் மகரநெடுங்குழைக்காதர் அந்தாதி ஆசிரியா[91].

தாமிரவருணி நதியின் கூடுபுனல் தீர்த்த மகிமையும், தென் திருப்பேரையில் வடமொழி, தென்மொழிப் புலவோர் நிரம்பி யிருந்ததையும் இப்பாசுரத்தின் வாயிலாக உணரமுடிகின்றது.

நிலவுலகத்திலுள்ளாரும், எட்டுத்திசைகளிலும் உள்ளாரும், மேலுலகத்திலுள்ளாரும் வணங்கும்படி உயர்ந்து, மலையாடுகள் பல எழும்பிக் குதிப்பதனால் தேன்கூடுகளினின்று தேன்பெருகிப் பாயப்பெற்ற திருமாலிருஞ்சோலை என்ற இப்பதி எம் பெருமானது திருவுள்ளத்துக்குப் பாங்கான தலம் என்று அழகரந்தாதி ஆசிரியர்[92].

இவற்றைப்போன்று பல பாசுரங்கள் ஊர் அல்லது பதி எனப்படுகின்ற பிரபந்தத் துறையமையக் கூறப்பட்டுள்ளன. 'இன்ன சிறப்புடையது பிரபந்தத் தலைவனது வாழிடம், என்று கூறுகிறார் பொருள் பொருந்தக் கூறப்பட்டுள்ளன.

எங்கெங்கெல்லாம் அழகுள்ளதோ அங்கங்கெல்லாம் இவறவன் இருப்பதாகக் கொள்வது சமயக்கொள்கை. இக்கொள்கையை ஒட்டியே பத்தர்களும் இயற்கையில் தோய்ந்து இறைவனை அனுபவிக்கிறனர். எல்லா இடங்களிலும் காணும் இயற்கை அழகில் எம்பெருமானின் அழகுக்கூறுகளில் மனத்தைப் பறி

கொடுக்கின்றனர். இத்தகைய மனநிலையைக்கொண்ட ஆழ்வார் களும் பிற ஆசிரியர்களும் இயற்கை அழகினைத் தம் உள்ளத்து அழகுடன் குழைத்துத் தம்மனம் விரும்பும் கடவுள் வடிவத்தின் தெய்வீக அழகாகக் கொள்கின்றனர்.

இறைவனாகிய திருமால் நிலைபெற்று இருக்கின்ற தலங் களுக்குச் செல்லுதலும், அத்தலத்தை நாவால் சொல்லுதலும் நம் கடன் என்பது வலியுறுத்தப்படுகின்றது. அவன் பாதங்களே தஞ்சம் என்று தம்மை அடைக்கலப்படுத்தும் 'பிரபத்தி நெறியும்' மிகுதியான பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளமையை அறிய முடிகின்றது.

இறைவன் என்றும் எவ்விடத்தும் நீக்கமறக் கலந்துள்ளான் என்றும் இறைவனின் சர்வந்தார்மியத்துவத்தை இப்பாசுரங்கள் தெரிவிக்கின்றன.

எல்லாம் இறைவனுடையதே என்றும், நாம் பற்றற்ற நிலையில் இறைவனோடு சேரவேண்டும் என்றும் வலியுறுத்தப் படுகின்றது.

**அடியவர்களின் பெருமையைப் பேசி அனுபவித்தல் :**

பத்தி ஒன்றிலேயே திளைத்தெழும் ஆழ்வார்கள் உலகத் தையும் உலகத்தாரையும் மறந்துவிடவில்லை. எனவே ஆங்காங்குப் பிறருக்கு அறிவுரையாகச் சில பாசுரங்களையும் அருளிச்செய் துள்ளனர். மனித வாழ்க்கையில் காணப்பெறும் ஏற்றத்தாழ்வுகள், தீக்குணங்கள்—இவற்றால் அவதியுற்றிருக்கும் மக்களின் துயரங் கள் போன்றவற்றைப் பாசுரங்கள் மூலம் விரிவாகக் காண்பித்து 'இறைவனையும், இறைவனடியார்களையும் பணிந்து வணங்கி வாழ்க்கையை வகுத்துக் கொள்ளுங்கள்' என்று அறிவுரை பகர் வனவாகச் சில பாசுரங்கள் அமைந்து உள்ளன.

செங்கழுநீர் மலர்களைச் சூடிய மாதர்களுடைய அசுத்த மான உடம்பினிடத்திலே விருப்பம் வைத்து, அக்காமத்தினால் காமோத்தீபகப் பொருள்களான மாலைப்பொழுதுக்கும் சந்திர னுக்கும் வருந்தி நிற்பாரேயன்றித் தங்களை அழியச் செய்வதற் கான ஒப்பற்ற காம மயக்கத்தைக் களைந்தொழிக்க மாட்டார் கள். தாமரைமலர் போன்ற திருவடிகளையுடைய எம்பெரு மானையும், அவர்தம் அடியார்களையும் கைகூப்பி வணங்க

மாட்டார்கள். இது என்ன பேதமையோ என்று இரங்குகிறார் திருவேங்கடத்தந்தாதி ஆசிரியர்[93].

மூன்று உலகங்களிலுள்ளாரும் யமனுக்கு அஞ்சுவர் அந்த யமன் திருமாலடியார்க்கு அஞ்சுவன். ஆதலால், மக்கள் அனைவரும் எம்பெருமானுக்கு அடியராகி உய்யக்கடவர் என்று அடியவர்களின் பெருமைகளைக் கூறுகிறார் திருவரங்கத்தந்தாதி ஆசிரியர்[94].

இவ்வுலகத்தில் எதிரற்ற தனியரசாட்சி கிடைப்பதாயினும் அது முத்திப் பெருஞ்செல்வத்தை நோக்கப் பெரிதும் அற்பமாதலால் அதனை விரும்பாதே; சிறிது பொழுதேனும் எம்பெருமானின் அடியவர்களுக்கு அடிமை செய்ய விரும்புவாயாயின் சகல கருமங்களையும் போக்கி எல்லாச் செல்வங்களினும் மேலான முத்திப்பேற்றைத் தவறாமல் அடைதல் கூடும் என்று நம்மாழ்வார் அறிவுறுத்துவார்[95].

இறைவனையும், இறையடியார்களையும் வழிபட்டு வீடுபேற்றையடைய விருப்பங்கொண்டு முயலவேண்டும் என்று ஆசிரியர் மக்களை வேண்டுகிறார்.

இனி, தங்களுக்குப் பிறப்பு இல்லையாம்படி நாவினால் துதிக்கின்ற அடியவர்களுக்கு இணையாக ஒன்பது கண்டங்களிலும் எவருமில்லை என்பதை ''நாப்பல னந்தப் புகழ்வார்க்கொப்பில்லை நவகண்டத்தே'' என்கிறார் அழகரந்தாதி ஆசிரியர்[96].

இவர் இறைவனுக்கு இணையாக அடியவர்களையும் கருதியதை இப்பாசுரம் உணர்த்துகின்றது.

எம்பெருமானது அடியவர்கள் பலவகைத் துன்பங்கட்கும் இடமாகிய தமது உடம்பு நிலைத்து இருக்குமாறு முயற்சி செய்ய மாட்டார்கள். இளமகளிரது மோக வலையிற் சிக்கிக் கலங்க மாட்டார்கள், சுவர்க்கலோக இன்பத்தையும் விரும்பமாட்டார்கள், அகங்காரமான சொற்களைக் கூறமாட்டார்கள் என்று அடியவர்களின் பெருமைகளை அடுக்கிக்கொண்டு செல்கிறார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி ஆசிரியர்[97].

திருமாலின் திருப்பதிகளிற் சென்று அடியார் கூட்டங்களுடன் கூடி எம்பெருமானது திருவடித் தாமரைகளை முடிக்கு அணியாகச் சூடுமாறு இணங்கி வரும்படித் தமது நெஞ்சை அழைக்கின்றார் பெருமாளந்தாதி ஆசிரியர்[98]



திருவிண்ணகர் என்று அழைக்கப்பெறும்
கும்பகோணத்தில் அமைந்துள்ள
ஒப்பிலியப்பன் கோவில்

எம்பெருமான் அடியாரின் அடியார்க்கு அடியவராகி அவரது குணங்களைப் பாடித் துதித்தால் அதன் பயனாக நீங்கள் வீடுபேறு அடையலாம் என்கிறார் திருஎவ்வுள் பதிற்றுப் பத்தந்தாதி ஆசிரியர் 99.

காட்டிலெரியும் நிலாப்போலவும், பொன்னைக் கடல் நடுவில் கொட்டினால் போலவும். புல்லரது வீடுதோறும் சென்று அவர்கள் மீது கவிதை புனைந்து மனம் புண்ணாகிப் பரிசு பெற்ற புலவர்களே! எம்பெருமானின் புகழையும், அவனது அடியவர்களின் புகழையும் பாடுவீர்களானால் எல்லா நலங்களையும் எய்துவீர்கள் என்கிறார் திருக்கடன்மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர் 100.

ஆதியும் அந்தமுமில்லா அரும்பொருளாகி அடியார் கோயிற்கு ஏற்றும் ஒளிவிளக்காய் விளங்கும் எம்பெருமான் திருவடியைப் பற்றியவர்கள் எத்தகைய பாவத்தையும் பெறமாட்டார்கள்; பெருஞ்செல்வம் பெறுவர்; பரமபத நாட்டைத் தம் இருப்பிடமாகப் பெறுவர் என்று கூறுகிறார் புல்லையந்தாதி ஆசிரியர் 101.

அடியாரைத் தெய்வமெனப் போற்றி வந்தமையை இப் பாசுரங்களால் உணரமுடிகின்றது. இவர்களது விரிந்த அறிவையும் உலகியல் உணர்வையும் இவர்களது பாசுரங்களில் காண முடிகின்றது.

உலகிலுள்ள அனைவரும் ஆண்டவனுக்கு அன்பராக, அடியவராக, உரிமையுள்ளவர்களாக இருக்க வேண்டும் என்பதே இவர்களின் உட்கிடக்கை என்று கூறலாம்.

அடியார் வணக்கம் என்பது வைணவத்தில், மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைப் பரவும் காலத்திலே தொடங்கி விட்டது.

இப்பாசுரங்கள் திருமால் அடியவர்களின் பண்பட்ட பத்தி உணர்வினையும், அடியவர் வேண்டுவது பேரின்பமே என்பதனையும் மெய்ப்பிக்கின்றன.

**திருக்கலியாண குணங்களைச் சொல்லி அனுபவித்தல் :**

இறைவன் திருக்கலியாண குணங்களை உடையவன். அவன் நிர்க்குணவல்லன். அவன் கலியாண குணங்களே ஆன்மாக்களைக் கவர்ந்து அவனுக்கு அடிமையாக்குகின்றன. அவன் கலியாண

குணங்களில் ஈடுபடும்பொழுது நம் மயக்கம் அகல்கிறது, மதி நலமும், ஞானமும்தோன்றுகின்றன, அழிவில்லாதபேரின்பஉலகைப் பற்றிய உணர்வு எழுகின்றது. அதனை நாம் அடைவதற்கு இவ்வுலகில் இறைவன் திருமேனி கொண்டு வந்துள்ளான் என்ற எண்ணத்தை உடையவர்களாக இவ்வாசிரியர்கள் திகழ்கின்றனர் என்பதை அவர்தம் பாசுரங்கள் உணர்த்துகின்றன.

வைணவர்கள் மிகுதியாகப் பயன்படுத்தும் 'பகவான்' என்ற சொல்லும் பல கல்யாண குணங்களும் நிறைந்தவன் என்ற பொருளைத் தருகின்றது[102]

கன்றுக்குட்டியானது ஓரிடத்திலிருந்து சொண்டு தன் தாயைக் காணாமல் 'அம்மே' என்று கத்தினால் அவ்வொலி தன் செவிப்பட்ட மாத்திரத்தில் தாய்ப்பசு இரங்கிக் கன்றின்பக்கத்தில் வந்து நிற்பது போலவே எம்பெருமானை உள்ளபடி அறியாவிட்டாலும் அவனது திருநாமத்தை வாய்வந்தபடி பிதற்றினால் அவன் வந்து அருள்புரிவான் என்று எம்பெருமானது அருள் குணத்தை எடுத்துக்கூறுகின்றார் பொய்கையார்.[103] இக் கருத்தை, ''சிற்றஞ்சிறுகாலே வந்து உன்னைச் சேவித்து''[104] என்று தொடங்கும் திருப்பாவையின் பாசுர உரை மேலும் தெளிவுபடுத்துகின்றது.

பெருஞ்செல்வத்தைத் தங்களுடையதாக நினைத்து மனச் செருக்குக் கொண்டிராமல் தேவர்களின் வாயினால் துதிக்கத்தக்க உயர்ந்த பழமையான குணங்களையுடைய எம்பெருமானே சரணம் என்று துணிந்திருக்கும் நெஞ்சை உடையராய், அத்திரு மாலின் திருநாமங்களை நாவினால் ஓதுங்கள் என்று வேண்டு கிறார் பூதத்தாழ்வார்[105] .

நம்மாழ்வார் பல பாசுரங்களில் அருளிச்செய்த செல்வ நிலையாமையை இவர் ஓரடியில் சுருங்கக்கூறி உள்ளார்.

பேசப்பட்டுள்ள இறைவனைப் பற்றிய சிறப்புக்கள், பேசியவனின் பத்தி உணர்வினைப் புலப்படுத்துகின்றது. இறை வனிடத்தில் அன்புகொண்ட மனம் இறைவனைப் பற்றிப் பல வாறு சிந்திக்கின்றது.

எம்பெருமானது அருள், ஆற்றல், எளிமைத்திறம் முதலிய திருக்கல்யாண குணங்களில் ஈடுபட்டுத் துதிப்பவர்கள் முத்தி யடைவர். அவ்வாறன்றி அவ்வவதாரங்களை இகழ்பவர் நரக மடைவர் என்பதனையே இப்பாசுரம் வெளிப்படுத்துகின்றது

பத்தி பாசுரங்களில் எல்லாம்எம்பெருமானின்குண நலன்கள் எடுத்துக்கூறப்படுகின்றன. பத்தி நிறைந்த ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் தமது உள்ளத்தில் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனின் எண்ணற்ற கலியாண குணங்களையும், அவன் அடியார்க்கு எளியனாய் இருக்கின்ற தன்மையையும் நினைந்து, அவனது பேரருளைத் துய்ப்பதாகப் பாடியுள்ள பாசுரங்கள் இறைவனின் குணங்களை வெளிப்படுத்துகின்றன.

இவர்களது பாசுரத்தில் வைணவத் தத்துவத்தை விளக்கி நிற்கும் பிரபத்தி எங்கும் இழையோடி இருக்கின்றதையும், இத் தெய்வ அனுபவம் மட்டுமன்றிப் பல்வேறு பத்தி நெறிகளையும் இவர்களின் பாசுரங்களில் காணமுடிகின்றது.

பத்தியின் பயன், வழிபடாதவர் நிலை, மறுமை இன்பம், கரும வினை, மனிதனிடம் இடம்பெறவேண்டிய தன்னடக்க நிலை, பெண்ணாசை ஒழித்தல், இறைவன் ஆட்கொண்டு அருளும் நிலை, இருவினைப்பயன், பிறவாமை, ஐம்புலன்களின் பயன்பாடு, உலகவாழ்க்கை, ஆராதனையின் பயன், செல்வ நிலையாமை, இறைவனின் அவதாரங்களின் பெருமை போன்றவை இவர்களது பாசுரங்களின் வாயிலாக வெளிப்படுத்தப்படுகின்றன.

உலகத்து வழங்குகின்ற சாத்திரங்களைப் பயிலுதல் வேதத்தின் நுண்ணிய பொருளை உணர்தற்பொருட்டே ஆதலால், வேதப்பொருளாகிய எம்பெருமானை அறியாது சாத்திரங்களைப் பயில்வது பயனற்றது என்றும்; அதனால் அதனைவிட்டு எம்பெருமானை வணங்குதலே அறிவுபூர்வமானது என்றும் உலகத்தாருக்கு இவர்கள் சுட்டிக்காட்டுகின்றார்கள்.

இறைவனது சகல கலியாண குணங்களையும் அவன் அடியார்க்கு எளியனாம் தன்மையையும் நினைந்து அவனது பேரருளைத் துய்ப்பதாகக்கூறும் பாசுரங்கள் படிப்போர் உள்ளத்தை உருக்கும் தன்மையன.

பரம்பொருளை நாடி அடையக்கூடிய முயற்சிகள் பல்வேறு நிலைகளிலும் பல்வேறு வழிகளிலும் வெளிப்படுத்தப்படுகின்ன.

இவர்களது பாசுரங்களில் துறவறம் பழிக்கப்பெறவில்லை, இல்லறம் வெறுக்கப் பெறவில்லை. நிலையாமை உணர்த்தப் பெறுகின்றது. உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பத்திசெலுத்தலாம் என்றும் வலியுறுத்தப்பெறுகின்றது.

இழிந்த மனிதரைப் பாடி உங்கள் ஞானத்தை விலை பேசாதீர்கள் என்று கூறும்பொழுது, கவிஞர்கள் சமுதாயத்திற்கு ஓர் உயர்ந்த இலட்சியத்தை அறிவுறுத்துகின்றனர். இவ்வாறு உயர்ந்த இலட்சியத்தை வற்புறுத்தும்போது சமகாலச் சமுதாயத்தையும் சுட்டிக்காட்டியே வற்புறுத்துகின்றார்கள்.

இறைவனுக்கு முன்னர் எல்லோரும் சமம். இறைவன் ஒருவனே மக்கள் தலைவன் என்ற கருத்தைப் பரப்ப இவர்களது பாசுரங்கள் துணையாக நிற்கின்றன. மன்னர்களையும், செல்வர்களையும் போற்றிப் பாடுவதற்குப் பயன்பட்ட தமிழ், இறைவனைப் பாடுவதற்கு மட்டுமே பயன்படவேண்டும் என்ற இவர்களது கொள்கை வெளிப்படுத்தப்படுகின்றது.

தெய்வத்தோடு ஒன்றிப் பிணைந்த பிணைப்பிலே அவர்கள் பெற்ற அனுபவத்தையே தங்கள் பாசுரங்களில் வெளிப்படுத்துகின்றனர்.

இவர்கள் தன்முனைப்பற்று இறையுணர்வில் நின்று பாடுகின்றனர். 'தான்' என்ற உணர்வை இழந்து தெய்வ உணர்வில் கலந்து நிற்கும் அனுபவமே இவர்களது பாசுரங்களில் பேசப்படுகிறது.

இறைவனே தம்பாடற் பொருள் என்பதோடு பாடல் முழுவதும் அவனே கலந்துள்ளான் என்ற கருத்து வெளிப்படுகின்றது. திருமால் உணர்வு தம் சொற்களில் கலந்தும் மேம்பட்டும் விளங்குவதாகவும் தம் பாசுரங்களில் வெளிப்படுத்துகின்றனர்.

பரம்பொருளைப் பற்றி நாம் அறிந்துகொள்ள முயலும் முயற்சியும்,பரம்பொருளை நாம் நாடி உயரும் முயற்சியும் சீரான வகையில் அமைதல் வேண்டும் என்று சுட்டிக்காட்டுகின்றனர்.

மனம், மொழி, மெய் மூன்றையும் அடக்கி அவற்றைத் திருமாலின் திருவடிக்கே ஆக்குதல் வேண்டும் என்று கூறுவதால் திருமாலின் பரத்துவம் வெளிப்படுத்தப்படுகின்றது.

இறை அனுபவத்தை இன்பத்திளைப்பு, பிரிவாற்றாமை என்னும் நிலையில் பாடும்போது, தமிழிலக்கிய மரபுக்கேற்ப அகவிலக்கிய மரபை ஒட்டி நின்று உணர்ச்சி வேகத்தை வெளிப்படுத்திப்பாடும் பாசுரங்களை மிகுதியாகக் காணமுடிகின்றது.

இறைவனின் இனிய இயல்புகளையும், அவன் அவதார நிகழ்ச்சிகளையும், இறைத்தன்மைகளையும் இவர்களது பாசுரங்கள் எடுத்துக்கூறுகின்றன.

பரம்பொருளை நாடி அமையக்கூடிய இனத்தினுடைய முயற்சிகள் பல்வேறு நிலைகளிலும் பல்வேறு வழிகளிலும் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

பத்தி ஒன்றிலேயே திளைத்தெழுந்த இவர்கள் உலகத்தையும் உலகத்தோரையும் மறந்துவிடவில்லை. ஆகையால், ஆங்காங்கு பிறருக்கு உபதேசமாகச் சில பாசுரங்களையும் அருளிச் செய்துள்ளனர். இவ்வுபதேசமும் மனித வாழ்க்கை, அதில் காணப்பெறும் ஏற்றத்தாழ்வுகள், தீக்குணங்கள், இவற்றால் அவதியுற்றிருக்கும் மக்களின் துயர்கள் போன்றவற்றையும் வெளிப்படுத்துகின்றன. "இறைவனையும், இறைவனடியார்களையும் வணங்கி வாழ்க்கையை வகுத்துக் கொள்ளுங்கள்" என்று அறிவுரை பகர்வனவாகச் சில பாசுரங்களை அமைத்துள்ளனர்.

போகப்பொருள்களைப் பெற்றவுடன் மகிழ்ச்சி அடையும் மனம் இறைவனை நினைக்கும்போதும், தொண்டு செய்யும் போதும் மகிழ்ச்சியடையுமானால் அதுவே உயர்ந்த பத்திநெறி என்றும்; மாதரைப் பிரிந்து துடிக்கும் மனம் இறைவனைப் பிரியும்போதெல்லாம், இறைவனைக் காணாதபோதெல்லாம், துடிக்குமாயின் அது மிக உயர்ந்த பத்திநிலையாகும் என்றும் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

உடலின் மீது செலுத்தும் கவனத்தைவிட, உள்ளத்தின் மீது செலுத்தும் கவனத்தை இவர்கள் வற்புறுத்துவர்.

ஆழ்வார்களும் பிற ஆசிரியர்களும் மக்கள் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய அன்றாடக் கடமைகள் பற்றியும், ஒழுக்க நெறிகளைப் பற்றியும் போதித்து, அவற்றைக் கடைப்பிடித்து ஒழுக வழிகோலினர் எனக்கூறலாம்.

இவர்கள் தமது அன்பினால் இறைநுகர்வுகளை நேரடியாகப்பெற்று அதனை உலகுக்கு அளித்தவர்கள். அவர்களது நோக்கம் உணர்ச்சிகளின் அடிப்படையில் இறைவனிடம் அன்பு செலுத்துவதாகும். இவர்கள் அன்பு அல்லது பத்தி வழியையே இறைவனை அடைய சிறந்த வழியாகக் கொள்கின்றனர். அன்பு

வழி இறைவனுக்கும், அவனது அடியவர்களுக்கும் தொண்டு செய்வதையே நோக்கமாகக் கொண்டுள்ளதை உணரமுடிகின்றது.

பொதுவாக இவர்கள் அனைத்துவகை உலகியலின்பங்களின் நிலையற்ற தன்மையையும், தம்உண்மைநிலை வெளிப்பாட்டில் அடையப்பெறும் நிலைத்த மகிழ்ச்சியையும், இறைவனுடன் கூடி இருத்தலில் உலகத்துன்பங்கள் யாவும் மறையும் என்பதனையும், அன்புவழி மரபானது அனைவருக்கும் உரியது என்பதனையும் உறுதியாகக்கொண்டு விளங்கினர் என்பதை அவர்தம் படைப்புகள் உணர்த்துகின்றன.

# 2. மெய்பொருள் கருத்துக்கள்

மக்களின் அன்றாட வாழ்க்கை ஒழுங்குபெற நடத்துவதற்கு அமைத்துக்கொண்ட நன்னெறிகளின் தொகுதியே சமயம் என வழங்கப்பெறும். திருமாலை முழுமுதற் கடவுளாகக்கொண்டு பல உயரிய கொள்கைகள் கொண்ட சமயம் வைணவ சமயம் ஆகும். இச்சமயத்தின் கொள்கைகளைத் தத்துவம், இதம், புருஷார்த்தம் என்று வகைப்படுத்திப் பேசுவர்[106]. அந்தாதிகளில் இம்மூன்று கொள்கைகளும் ஆங்காங்கே அமைந்து கிடக்கின்றன.

தத்துவங்கள் மூன்று. அவை சித்து, அசித்து, ஈஸ்வரன் என்பன. சித்து என்பது உயிர்களின் தொகுதி. அசித்து என்பது மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதியாகும். ஞானத்திற்கு இடமான ஆன்மா சித்து என வழங்கப்பெறும். அசித்து என்பது அறிவில்லாத பொருள். இது விகாரத்திற்கு இடமானது. முன்னைய நிலையை விட்டு வேறுவேறு நிலைகளை அடைவதாகின்ற வேறுபாட்டிற்கு இடமாய் இருக்கும். ஈசுவரன் சத்தியம், ஞானம், ஆனந்தம், அனந்தம் இவற்றின் சொரூபமாக இருப்பவன். இடத்தாலும், காலத்தாலும் அளவிடப் பெறாதவன்; எங்கும் நிறைந்திருப்பவன்[107].

வீடுபேற்றிற்குச் சாதனமாகப் பின்பற்றப்படும் வழியே "இதம்" எனப்படும். இது கருமயோகம், ஞானயோகம், பத்தி யோகம், பிரபத்தியோகம், ஆசாரிய அபிமானம் எனப் பாகு படுத்தப்படுகிறது[108].

'புருஷார்த்தம்' ஆன்மா அடையவேண்டிய குறிக்கோள் நிலையைக் குறிப்பிடுவது.[109].

எது பொருள்? என்ற வினாவை எழுப்பித் தத்துவத்தை ஆராய்வர். எது நெறி? என்ற வினாவை எழுப்பி இதத்தை விளக்குவர். எது பயன்? என்ற வினாவை எழுப்பிப் புருஷார்த் தத்தை விளக்குவர்[110].

உபநிடதங்களையும், பிரம்ம சூத்திரங்களையும் ஆதார மாகக் கொண்டு அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்ற மூன்று பெரும் பிரிவுகள் ஏற்படலாயின. ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்று என்பது அத்வைதம்; வேறு என்பது

துவைதம். வேறாக இருந்தாலும் சில நிலைகளில் ஒன்றே என்பது விசிஷ்டாத்வைதம்[111].

உபநிடதம், பிரம்மசூத்திரம், பகவத்கீதை என்னும் நூற்களை அடிப்படையாகக்கொண்டே வைணவ சித்தாந்தம் நிறுவப் படினும், ஆசாரியர்களின் விளக்கத்திற்கு ஆழ்வார் பாடல்களும், வைணவ சம்கிதைகளும் சிறந்த கருவி நூற்களாக உள்ளன[112].

வைணவக் கோட்பாட்டினைத் திறம்பட நிறுவியவர் இராமானுசர் என்பதை,

"பேதையர் வேதப்பொருள் இதென்றுன்னிப் பிரமம் நன்றென்று
ஓதிமற்றெல்லா உயிரும் அஃதென்று, உயிர்கள் மெய்விட்டு
ஆதிப்பரனோடு ஒன்றாமென்றுசொல்லும்அவ்வல்லலெல்லாம்
வாதில் வென்றான் எம்இராமாநுசன் மெய்மதிக் கடலே"

என்று இராமாநுச நூற்றந்தாதி பகரும்.

அந்தாதி இலக்கிய ஆசிரியர்கள் பொதுவாகப் பலரும் புகலும் வருணாசிரம தருமங்களைக் கூறினாலும், 'இதம், புருஷார்த்த'ங்களையே சிறந்த தருமமாகக் கருதுகின்றனர்.

**இதம் :**

இது கருமயோகம், ஞானயோகம், பத்தியோகம், பிரபத்தி யோகம், ஆசாரிய அபிமானம் எனப் பாகுபடுத்தினாலும் இவ் வைந்தனையும் பத்தி, பிரபத்தி என்ற இரண்டில் அடக்கிக் கூறுவதுண்டு. கருமம், ஞானம், பத்தி யோகங்களைப் 'பத்தி நெறி' என்றும்; பிரபத்தி, ஆசாரிய அபிமானம் என்னும் இரண் டனையும் 'பிரபத்தி நெறி' என்றும் கூறுவர். பரம்பொருளிடம் காட்டும் பத்தியின் — வழிபாட்டின் ஒரு பகுதியாகவே கரும யோகத்தைக் கூறுவர். இதனை விளக்கும்போது விரதம் இருத்தல் புண்ணியத்துறைகளில் நீராடுதல், வேள்வி செய்தல், மந்திரம் ஓதல் முதலியவற்றைக் குறிப்பிடுவர்.

பலனை எதிர்பாராது இறைவனுக்குச் செய்யப்பெறும் கருமத்தால் மனம் தூய்மை அடைகிறது. இக் கருமயோகத்தால் மனம் ஒடுங்க, ஒடுங்கிய நிலையில் ஞானயோகம் தோன்றுகிறது என்பர். இறைவனிடம் பெரும் பத்தியை விளைவிக்கும் தன்மையையே 'ஞானயோகம்' என்கின்றனர்.

ஞானமானது எல்லாவற்றையும் ஒரேகாலத்தில் அறியும் படியான வல்லமை. இதனை, "ஞானத்தால் நன்குணர்ந்த நாரணன்" என்று பூதத்தாழ்வார் கூறுகின்றார்.

குற்றம் செய்தவனிடமும் பொறை, சிரிப்பு, உகப்பு, அன்பு வேண்டும் என்பர். இப்பிரிவு சமுதாய உணர்ச்சியால் விளைவ தன்று; ஞானத்தின் விளைவால் தோன்றுவது.

ஞானத்தைப் போல் பத்தியிலும் தியானநிலை உண்டு. இந்தத் தியான நிலையில்தான் ஆன்மா தனக்கும் இறைவனுக்கு முள்ள தொடர்பினை அறியும் என்பதனை,

"உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி
வைத்தவனை நாடி வலைப்படுத்தேன்"

என்று பேயாழ்வார் முறையிடுகின்றார்.

ஞானமே பத்திநிலையாக முதிர்கின்றது என்பதனை,

"ஞாலம் கனிந்த நலங்கொண்டு நாள்தோறும் நைபவர்க்கு
வானம் கொடுப்பது மாதவன் வல்வினை யேன்மனத்தில்
ஈனம் கடிந்த இராமானுசன் தன்னை யெய்தினர்க்கு"

என்று இராமாநுச நூற்றந்தாதி விளக்கும். பத்தி முதிர்ந்த முழு நிலையினை அடையுங்கால் ஆன்மா இறைவனையே காண்கிறது என்பதும் பெறப்படும். அந்தாதிகளில் இந்நிலை ஆங்காங்கு சுட்டியுரைக்கப் பெறுவதைக் காணலாம்.

பத்தியோகம் என்பது அடிப்படையான மனித உணர்ச்சியைப் புறக்கணிப்பதன்று. தன் சகோதர மனிதனிடமும் அன்பு காட்டாதவனைப் 'பத்தன்' என்று சொல்லிட முடியாது என்ற சகோதர நேயத்தை இவர்களது பாசுங்களில் சுட்டிக் காட்டு கின்றனர்.

சமுதாய அளவில் சகோதர மனிதர்களிடம் இதயக்கனிவு இல்லாதவர்களுக்கு இறைவனிடம் பத்தி பிறக்க முடியாது என்ற உறுதியினை இவர்கள் கொண்டிருப்பது புலப்படுகின்றது.

ஆர்வத்தால் இடையறாத சிந்தனையாகிய ஞானயோகத் தாலே விளையும் அனுபவத்தை, அன்பின் வடிவாக மாற்றுதல் பத்தியோகம் என விளக்குவர். ஞானசிந்தனையால் விளையும் பத்தியே ஞான ஒளியைப் பெருக்கும் என்பதனை,

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்"

எனும் பூதத்தாழ்வார் பாசுரம் உணர்த்தும்.

பத்தியோகம் வீடுபேறு எய்தும்வரை கடைப்பிடித்துக் கொண்டே இருத்தல் வேண்டும். பலன்பெற நெடுங்காலம் கழிய வேண்டும். மேலும், பத்தி வழியை எல்லோரும் பின்பற்ற இயலாது என்ற காரணத்தால் இதற்குப்பதிலாக எல்லோரும், எல்லா நிலையினரும் மேற்கொள்ள எளிதாக இருக்கின்றதை 'பிரபத்தி' என்பர். 'சரணாகதி நெறி' இவர்களால் வலியுறுத்தப் படுகிறது. இவர்கள் பத்திநெறியை ஆங்காங்கு வலியுறுத்தி னாலும், அதிகமாக வலியுறுத்தப்படுவது 'சரணாகதி நெறி' ஆகும்.

பத்தியின் பயனைப்பெற நெடுங்காலமாகும் என்பதைத் திருமழிசையாழ்வார்,

"தொழில் எனக்குத் தொல்லைமால் தன்னாமமேத்த
பொழுதுஎனக்கு மற்றதுவே போதும்"[120]

என்றும்,

"வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது"[121]

என்று பாடுவதாலும் இதனை அறிகிறோம்.

பத்தி சாரராகிய திருமழிசையாழ்வாரும் பிரபத்தி நெறியை வலியுறுத்தியவர் என்பது,

"அடைக்கலம் புகுந்த என்னை
'அஞ்சல்' என்ன வேண்டும்"[122]

என்ற பாசுரவரியாலும்,

"புனித; நின்
இலங்குபாதம் அன்றி மற்றோர்
பற்றிலேன் எம் ஈசன்"[123]

என்ற பாசுரவரியாலும் புலனாகும்.

பிரபத்திக்குரியவன் நாராயணனே என்ற தெளிவோடு பிரபத்தி செய்வதற்கேற்ற எளிய இடம் 'அர்ச்சாவதாரமே' என்ற சிந்தனையையும் இவர்களிடம் காணலாம். காமம், பகை, பயம் முதலிய உணர்ச்சிகளை அடக்கி ஒழிக்கப் பாடுபடுவது வேதநெறி என்றும், அவற்றை இறைவனிடத்தில் திருப்புவது 'பிரபத்தி நெறி' என்றும் விளக்குகின்றனர்.

பிரபத்திகளை ஒன்பது உறவுகளில் விளக்கும் முயற்சியும் மேற்கொள்ளப் படுகின்றது[124].

| இறைவன் | | ஆன்மா |
| --- | --- | --- |
| 1. தந்தை | — | மகன் |
| 2. காப்பவன் | — | காக்கப்படுபவன் |
| 3. ஆண்டான் | — | அடிமை |
| 4. நாயகன் | — | நாயகி |
| 5. அறிபவன் | — | அறியப்படுபொருள் |
| 6. உடையவன் | — | உடைமை |
| 7, சரீரி | — | சரீரம் |
| 8, தாங்குவோன் | — | தாங்கப்படுபொருள் |
| 9. நுகர்பவன் | — | நுகரப்படுபொருள் |

இறைவனை அடைய அவன் இன்னருளே வழி. தன் முயற்சியின்றி அவனது உடைமையாகிய உயிரைப்பெற அவனே முயல்கிறான். அதற்கிசைவதொன்றே வேண்டுவது என்னும் கருத்தே பிரபத்தி நெறியின் அடிப்படை உணர்வெனக் கொள்ளலாம்.

**புருஷார்த்தம் :**

இந்துக்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினையும் புருஷார்த்தம் அல்லது உறுதிப்பொருள் என்பர். வைணவர்கள், இதனை ஏற்றுக் கொண்டாலும் வீட்டினையே புருஷார்த்தம் என்பர் [125].

வீடுபேறு என்பது பற்றிச் சமயநூல்கள் பலவகையாகப் பகரினும், வைணவ சமயக் கோட்பாட்டின்படி வீடு என்பது ஒரு தனி உலகமாகக் கருதப்படுகிறது. இதனை இவர்கள் பல இடங்களில் குறிப்பிட்டுச் செல்கின்றனர்.

''கல்லும் கனைகடலும் வைகுந்த வான்நாடும்''[126]

என்று கூறிகிறது பெரியதிருவந்தாதி.

இறைவனை அடைதலையே வீடுபேறு' என்று வழங்குவர். இதனை,

"வீடாக்கும்
மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள்தான் விண்ணவர்க்கு நற்பொருள்தான் நாராயணன்'' [127]

என்ற நான்முகன் திருவந்தாதிப்பாசுரப் பகுதியால் உணரலாம்.

புருஷார்த்தத்தை வீடாக விளக்குவதோடு 'கைங்கர்யம்' என்ற நிலையிலும் விளக்குகின்றனர். இக்கைங்கர்யம் பகவத்

கைங்கர்யம், பாகவத கைங்கர்யம் என இரண்டு நிலைகளில் விளக்கப்படுகின்றது.

பகவத் கைங்கர்யம் என்பது இறைவனுக்குச் செய்யும் தொண்டு. இதனை இவர்கள் பல பாசுரங்களில் வற்புறுத்துவர்.

''வாயவனை யல்லது வாழ்த்தாது கைஉலகம்
தாயவனை யல்லது தாம்தொழா''[128]

என்கிறார் பொய்கையார்.

பாகவத கைங்கர்யத்தைப் பல ஆசிரியர்கள் வலியுறுத்து கின்றனர். பொதுவாகப் பகவத், பாகவத கைங்கரியத்துக்காகச் செய்யப்படும் அனைத்தும் 'பரமபுருஷார்த்தம்' என்பதே இவர் களின் கருத்து.

திருவாராதனத்தில் பரமபுருஷார்த்தமாகிய வீடு பேற்றை யன்றி இம்மை நலனும் கிடைக்கும் என்று வலியுறுத்துகின்றனர்.

''மனமாசு தீரும் அருவினையும் சாரா
தனமாய தானேகை கூடும்''[129]

எனும் பொய்கையாழ்வார் பாசுரம் திருவாராதனம் இம்மை நலன் தருவதைப் பேசுகிறது.

யோக நெறியினை எல்லோரும் ஏற்று வாழாது போயினும் அதற்கு அடிப்படையாக விளங்கும் 'புலனடக்கம்' சமய சாதனை கள் பலவற்றுக்கும் வேண்டப்படும் ஒன்று என வலியுறுத்து கின்றனர். புலனடக்கம், மன அடக்கத்தாலே ஒருவனுக்கு நன்மை கைகூடும் என்பதனை,

''வாரி சுருக்கி மதக்களிறு ஐந்தினையும்
சேரி திரியாமல் செந்நிறீஇ''[130]

எனும் பொய்கையாழ்வார் பாடல் உணர்த்தும்.

வெறும் உணர்ச்சிவயப்பட்ட ஒன்றாக இவர்கள் பத்தியை விளக்கவில்லை. உள்ளத்தையும், அறிவையும் பண்படுத்தி நிற்கும் சாதனமாகப் பத்தியைக் கருதினர். சமுதாய அளவில் சகோதர மனிதர்களிடம் இதயக்கனிவு இல்லாதவர்களுக்கு, இறைவனிடம் பத்தி பிறக்க முடியாது என்ற உறுதியினை இவர்கள் கொண் டிருந்ததை உணரமுடிகின்றது. பிற மக்களிடம் பகைமை உணர்ச்சி தவிர்க்கப்படவேண்டும் என்பதை வலியுறுத்துவதையும் காணமுடிகின்றது. இவர்களது பாசுரங்களில் தெய்வீக ஞானம்

விளக்கம் பெறுகிறது. 'சரணாகதி' தத்துவத்தை மிகுதியாக வலியுறுத்துகின்றனர். 'பிரகலாதன் வரலாறு' 'விபீஷணன் இராமனிடம் அடைக்கலம் புகுந்த நிலை' பல அந்தாதி களில் எடுத்தாளப்படுகின்றன.

**தத்துவம் :**

உபநிடதங்களையும், பிரம்ம சூத்திரங்களையும் ஆதார மாகக்கொண்டு அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்ற மூன்று பெரும் பிரிவுகள் தோன்றின. சில இடங்களில் உபநிட தங்களில் ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்று என்றும், சில இடங்களில் வேறு என்றும், சில இடங்களில் ஜீவாத்மாவும், பரமாத்மாவும் வேறாக இருப்பினும் ஒரு நிலையில் ஒன்றே என்றும் கூறப்பட்டுள்ளது[131].

துவைதம், கடவுள் கொள்கையை மெய்பொருளியல் முறையில் மிகவும் சிறப்பாக விளக்கும். இதில் சில சித்தாந்தங் கள் பிடிவாதமாகக் கடைப்பிடிக்கப்படுகின்றன. அத்வைதம், வேதாந்தமாகக் கருதப்படுகிறது. விசிஷ்டாத்வைதம், அன்புநெறி யிலே ஒருமைக்கொள்கையையும், இறைஉண்மைக் கொள்கையை யும் ஒற்றுமைப்படுத்தி விளக்குவதாகும்[132]

விசிஷ்டாத்வைதம் சித்து, அசித்து, ஈசுவரன் என மூன்று தத்துவங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றது[133].

இறைவன், உயிர், உலகு என்ற இம்மூன்றனுள் உலகம் மாயை, உண்மையன்று ஒரு தோற்றமே. உயிர் இறைவனுக்கு அன்னியமானதன்று, அழிதலின்றி உண்மையாக விளங்குவது இறைவனே. இறைவனுக்கு அடிமையாக உள்ள ஆன்மா, ஆன்மாவை விட்டுப் பிரிந்திராத உடலைப்போல, இறைவன் ஒழியவும் தான் வேறாகக் காணப்படுவதில்லை. ஒவ்வோர் ஆன்மாவும் ஈசுவரனின் உடலாக இருக்கும் என்பர்[134] .

உயர்வற உயர்ந்த அன்பு, ஆன்மாவின் இயலையும் அதற்கும் பரம்பொருளுக்கும் உரிய ஒழிக்க ஒழியா உறவையும் ஞானக்கண்ணால்காணப்பெற்றவர்க்கேஉண்டாவதாம்என்பதை,

'' அறிந்தைந்தும் உள்ளடக்கி யாய்மலர்கொண்டு ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே—அறிந்தவன்றன்
பேரோதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல்''[135]

என்று பூதத்தாழ்வார் விளக்குவர்.

இவ்வுலகில் நலன்கள் எல்லாவற்றையும் அவனைப் பூசித்துப்பெறலாம் என்றும், பூசையின்போது அவனைப் புலனடக்கத்துடன் நின்று வழிபடுதலே எல்லோருக்கும் உரிய பூசை என்பதனை,

" அரியபுல னைந்தடக்கி ஆய்மலர்கொண்டு ஆர்வம்
புரியப் பரிசினால் புல்கில்"[136]

என்றும்,

" எண்மர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர்
வண்ண மலரேந்தி வைகலும் நண்ணி"[137]

என்றும் பொய்கையாழ்வார் வெளிப்படுத்துகின்றார்.

ஆன்மாவும் பிரகிருதி சம்பந்தப்பட்ட பொருள்களின் தன்மைகள் ஒன்றும் இல்லாமல், அவற்றோடு அறத்தேய்ந்து அற்று இருக்கும் என்பதை, "யாதுமன்றித் தேய்ந்தற்று"[138] என்று கூறுகிறார் நம்மாழ்வார்.

அசித்தாகிய இவ்வுலகப் பொருட்கள் மாறுபாடு அடைவதற்கும் இறைவனே காரணம் என்கின்றனர்.

அசித்து அறிவில்லாத சடப்பொருளைப் பொதுவாகக் குறித்தாலும் உலகப் பொருள்களுக்கெல்லாம் காரணமான மூலப் பகுதியாகிய பிரகிருதியினையே குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்

இவர்கள் இறைவனை உணர்த்தப் பகவான் என்ற சொல்லைப் பெரிதும் பயன்படுத்தினும், தத்துவத்தை விளக்கும் போது 'ஈசுவரன்' என்ற சொல்லையே மிகுதியும் பயன்படுத்து கின்றனர். உலகெங்கும் வியாபித்திருந்தாலும் உலகிற்கு வேறானவன் என்பதையும் வற்புறுத்துகின்றனர்.

முதலாழ்வார்கள் அந்தாதிகளில் ஒரேதொடர் பல இடங் களில் எடுத்தாளப்படுகின்றன. இம்மரபு வாய்மொழி இலக்கியக் கூறுகளில் ஒன்றாதலால் முதல் மூன்று அந்தாதிகளையும் வாய் மொழி இலக்கியமாக அறிஞர்கள் கருதுகின்றனர்[139]. இக்கருத்து மேலாய்வுக்குரியது.

எம்பெருமானே முழுமுதற் கடவுள். இவன் எப்பொழுதும் மாறுபடாத தன்மையுடையவன், ஞானவடிவானவன், இங்கு தான் உள்ளான் என்று அளவிட்டுக் கூறமுடியாதவன், இப் பொழுது உள்ளான் என்று காலத்தாலும் கணிக்க முடியாதவன், இன்ன பொருளில் தான் உள்ளான் என்று பொருளாலும்

எல்லையிட்டுப் பேசமுடியாதவன். சித்து, அசித்து ஆகிய இரண்டும் இவனுடைய உடலாய்த் திகழும். இத்தன்மையை,

" நீயே உலகெல்லாம் நின்னருளே நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும் — நீயே
எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்து
இருசுடரும் ஆய இவை"[140]

என்று விளக்குகிறது நான்முகன் திருவந்தாதி. மேலும், இவனே முழுமுதற் கடவுள் என்பதை,

" தேருங்கால் தேவன் ஒருவனே யென்றுரைப்பர்;
ஆரும் அறியார் அவன்பெருமை"[141]

என்ற பாசுர வரிகளால் புலப்படுத்துவர்.

இறைவன் தனதருளால் தூய வடிவங்களில் தனது பூரணத் தன்மையை இழக்காமலேயே எழுந்தருளியிருக்கிறான் என்பதே மெய்யன்பர்களின் கண்களுக்குத் தோன்றும் உண்மை என்பர். இட்ட தெய்வமாக அடியவர்களை எந்த உருவில் வழிபட்டாலும் திருமால் அருள்செய்வான் என்பதை,

" தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்"[142]

என்கிறார் பொய்கையாழ்வார்.

இறைவனுக்கு உலகமாகிய அசித்தும். உயிர்களாகிய சித்தும், உயிருக்கு உடல் அடங்கி நிற்பதுபோல அடங்கி நிற்கும் என்றும் விளக்குவர். உயிர்களும் உலகும் இறைவனுடைய உடலாக, அவனோடு ஒட்டிய நிலையில் நிலைகொள்ளும் என்று கூறுவர். இவ்வாறு உயிர்களையும், உலகையும் உடலாகக் கொண்டு நின்றாலும், உயிர் வினை காரணமாக உடலைப்பற்றி நிற்பதுபோல், இறைவன் வினை காரணமாக அவற்றைப்பற்றி நிற்பதில்லை, தன் இச்சை அளவிலேயே பற்றி நிற்கிறான் என விளக்குவர். எனவே, உடப்பு அடையும் மாற்றங்களும், உயிர்கள் அனுபவிக்கும் இன்ப துன்பங்களும் இறைவனைப் பாதிப்ப தில்லை என்றும் கூறுவர். உலகெங்கும் வியாபித்திருந்தாலும் உலகிற்கு வேறானவன் என்பதை,

" உலகுதன்னை நீபடைத்தி, உள்ளொடுக்கி வைத்திமீண்டு
உலகுதன்னு ளேபிறத்தி ஓரிடத்தை அல்லையால்"[143]

என்று திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் கூறுகிறார்.

இறுதிப்பேற்றைத் 'திருமால்பேறு' என்பர். இப்பேற்றில் ஆன்மாவும் இறையும் ஒன்றாதல் இல்லை; ஆன்மா அழிதலும் இல்லை; அவனைச் சென்றடைந்து அவனுக்குக் கைங்கர்யம் செய்கிறது என்ற கருத்தையே வற்புறுத்துவர்.[144]

முப்பொருள்களுள் இறைவனுக்கும் மற்ற இரு பொருள் களுக்குமிடையே உள்ள உறவுமுறையினை அறிவிப்பதில் விசிஷ்டாத்வைதத்தின் உயிர்நிலையே இருக்கிறது எனலாம். இதனை விளக்குவதே உடல்—உயிர் கொள்கை ஆகும். இக்கொள்கை விசிஷ்டாத்வைதத்தின் அடிப்படைக் கொள்கையாகக் கருதப் படுகிறது.

இறைவனின் திருமேனி பரத்துவம் (விண்ணாட்டு நிலை), வியூகம் (அணிவகுப்பு நிலை), விபவம் (பிளப்புநிலை), அந்தர் யாமித்துவம் (உள்ளுறை நிலை), அர்ச்சை (வழிபடு நிலை) என்று ஐந்துவகையாகப் பேசப்படுகிறது.

இறைவன் தனதருளால் அத்தகைய தூய வடிவங்களில் தனது பூரணத்தன்மையை இழக்காமலேயே எழுந்தருளியிருக் கிறான். இட்ட தெய்வமாக அடியவர்கள் எந்த உருவில் வழி பட்டாலும் திருமால் அருள்புரிவான் என்பதை,

'' எவ்வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே
அவ்வண்ணம் ஆழியான் ஆம்''[145]

என்று கூறுகிறார் பொய்கையாழ்வார்.

வைதிகநெறி என்றஅளவில் வேதம் ஓதலுக்கு வைணவர்கள் சிறப்பளித்தாலும் வேதம் ஓதுதல் ஒன்றே பயன்தந்துவிடாது; திருவாராதனம் செய்தலே முதன்மையானது என்பர். இதனை,

'' தொழுது மலர்கொண்டு தூபம் கையேந்தி
எழுதும் எழுவாழி நெஞ்சே — பழுதின்றி
மந்திரங்கள் கற்பனவும் மாலடியே கைத்தொழுவான்
அந்தரம் ஒன்றில்லை அடை''[146]

என்ற பொய்கையாழ்வார் பாசுரம் உணர்த்தும். திருவாரா தனத்தினால் பரம புருஷார்த்தமாகிய வீடு பேறேயன்றி இம்மை நலனும் பெறலாம் என்பது இவர்கள் கருத்து.

'மறந்தும் புறந்தொழாமை' இவர்களது கொள்கைகளில் ஒன்று. இதனைப் பிள்ளைப் பெருமாளையங்கார் மிகுதியாக வலியுறுத்துகின்றனர்.

"............உலகமுண்ட
திருக்கந் தரத்தனை அல்லாது எண்ணேன் ஒரு
தெய்வத்தை"14.

என்றும்,

"ஆவின்பின் போந்தாரை யன்றித் தொழேன்"148

என்றும்,

"உனையன்றி நான்மறந்துந் தீதாகவந்தனை செய்யேன்"149

என்றும் மறந்தும் புறந்தொழாமையை வலியுறுத்துகின்றதைக் காணமுடிகின்றது.

'ஆண்டவனுக்கு மேலாக, அடியவர்களுக்கு அடிமையாதலே சிறப்பு, என்ற கொள்கையை உடையவர்கள் என்பதை உணரமுடிகிறது.

மனமாசற்ற நிலையில் பெய்டன்புடன் எம்பெருமானைச் சரண்அடைந்தால்முத்திபெறலாம் என்பது இவர்களின்'கொள்கை.

புலனடக்கம் இறைவனை அடையும் வழிகளில் சிறந்தவழி என்பதை,

"அவையாப் பொறிபுலன்கள் ஐந்தும் நவையாமல்
ஆகத்து அணைப்பார் அணைவரே ஆயிரவாய்
நாகத்து அணையான் நகர்"150

என்று கூறுவர் பொய்கையார். 'அறிந்தைந்து முள்ளடக்கி, என்பர் பூதத்தார். எனவே புலன்களை அடக்கி நன்னெறியில் நின்றால் ஆத்மாவை நன்குணர்ந்து இறைவனது பெரும்பாதத்தை பெறலாம் என்பது இவர்களது கொள்கையாகும்.

இறையனுபவம் அல்லது இறைவனோடு ஒன்றுதல் என்ற புது எண்ணத்தை அறிமுகப்படுத்தியவர்கள் இவர்கள்.

இறைவன் பெருமைகளையும் அவன் திருவடியினை அடைவதற்கு நாம் செய்தற்குரிய செயல்களையும், திருவடியை அடையாதவர் படும் அல்லல்களையும் விரிவாக எடுத்துக்கூறிய இவர்கள் இறையருளை அடைவதற்குத் துணைசெய்யும் கருவியாக இருப்பது மனமே என்பதை வலியுறுத்துகின்றனர்.

பொய்யறிவைப் போக்கி மெய்யுணர்வை மக்களுக்குஊட்டி அவர்களும் தம்மைப்போல் இறைவனை நாடி நல்வாழ்வு பெற வேண்டும் என்பது இவர்களது உயர்ந்த எண்ணமாகும்.

நல்வினை தீவினைகளிலிருந்து விடுபடுவதே இறைப் பேற்றுக்கு உதவுவது என்பதனையும், இறைவனே வினைகளி லிருந்து விடுவிக்க வல்லவன் என்பதனையும் வலியுறுத்துகின்றனர்.

திருமாலடியராக இருப்பின் அவர் எக்குலத்தோராயினும் வணங்குதற்குரியவர் இறைவனுக்கு முன் உயர்வு தாழ்வு கிடை யாது என்ற உயர்ந்த கொள்கையை உடையவர்கள்.

இறைவன் நாம் சென்றடைகின்ற குறியாக உள்ளான் என்பதோடு, அவனே இலட்சியத்தை அடையும் நெறியாகவும் உள் ளான் என்ற உறுதியோடு அவனை அடைதல் வேண்டும் என வேண்டுகின்றனர்.

ஒவ்வொருவரும் தெய்வத்தோடு தொடர்பு கொண்டு வாழ வேண்டும் என்பதனையும், எளிய முறையிலேனும் அன்போடு அவனைப் பூசித்தல் வேண்டும் என்பதனையும் வலியுறுத்து கின்றனர்.

இவர்கள் பத்திமை உணர்வோடு பாடினாலும் மெய்ப் பொருள் கருத்துக்களைத் தாங்கியே இவர்களது பாசுரங்கள் பொலிகின்றன.

# 3. புராணக்கூறுகள்

இந்திய இலக்கியத்தில் புராணம் என்பது பழங்காலக் கதைகளைத் தன்வடிவமாகக்கொண்டு வளர்ந்த இலக்கிய வகையாகக் கொள்ளலாம். இறைவனின் அருட்செயல்களையும் பேராற்றலையும் புலப்படுத்த இப்புராணங்கள் வழியமைத்தன. இப்புராணங்கள் பெரும்பாலும் இறையொடு தொடர்புடைய கதைகளாகவே இருக்கின்றன.

புராண மரபுக்கதை என்பது மனிதன், மனிதனுக்கு அப்பாற்பட்டவர் ஆகியோரின் அடிப்படைக் கூறுகளை உள்ளுறைக் குறியீடாகக்கொண்டு விளக்கும் கதை அல்லது கதைக்கூறுகளின் தொகுதி என விளக்கப்படும்.[151]

புராணங்கள் சமயக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றியனவாகும். தொடக்கத்தில் செவிவழியாக வழங்கி வந்த சமயத் தொடர்பான வரலாறுகளே புராணங்களாகக் கருதப்பட்டன. பின்பு நாளடைவில் அவைகள் நூல் வடிவில் உருவாயின.[152]

நம்பமுடியாத கூறுகளடங்கிய பழங்கதைகளின் தொகுதியே புராணமரபுக் கதைகள். நடப்பியல் அற்புத நவிற்சியாக மாறி, இயற்கையிறந்த கூறுகளைப் பெற்றுச் சமய நம்பிக்கையில் கால் கொண்டு, சடங்குமுறைகளில் வெளிப்பட்டுத் 'தொன்மை, வடி வெடுக்கிறது.[153]

''இந்திய தரிசனங்களின் வரலாற்றையும் சமயக்கோட்பாடுகளையும் அறிவதற்குப் புராணங்கள் மிகப்பயனுடையன. இந்திய நாகரிகத்தின் கருவூலம் புராணங்களே''[154] என்று கூறுகிறார் நடராசன்.

சமய உணர்வைச் சாமானிய மக்களுக்கு ஊட்டி, அவர்களை ஆன்மீகப் பாதையில் வழிநடத்திச் செல்லும் நோக்கத்தில் இப்புராணங்கள் தோன்றியிருக்கக்கூடும்

கவிதைகளின் மூலமும், கதைகளின் மூலமும் ஆன்ம வாழ்க்கையில் நிகழும் போராட்டங்களைப் புராணங்கள் சித்திரித்துக் காட்டுகின்றன. அன்றாட வாழ்வில் ஒழுக்க உணர்வைத் தூண்டவும், வாழ்வுக்கெனவொரு குறிக்கோளை அமைத்துக் கொள்ளவும் புராணங்கள் வழிகாட்டியாக விளங்குகின்றன.

''நம் நாட்டில் ஆயிரமாயிரம் ஆண்டுக்காலமாக மக்களின் ஆன்மீக வாழ்க்கையில் நம்பிக்கையை உருவாக்கிக்கொண்டு வருபவை புராணங்கள். மேலும், நாம் வேதங்களின் பொருள் களை விளங்கிக்கொள்வதற்குப் புராணங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்',[155] என்று கூறுகிறார் சுவாமிபிரபவானந்தா.

புராணங்களில் கலை, அரசியல், சமூகம், ஆட்சியியல், சமயம், நீதித்துறை, தத்துவம் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. எனவேதான் இந்திய நாகரிகம், பண்பாடு, வரலாறு இவற்றை விரிவாக விளக்குவதற்குப் புராணங்கள் மிகுதியாகப் பயன்படுகின்றன[156].

**சொற்பொருள் விளக்கம் :**

பழைய வரலாறுகளைக் கூறும் நூல்களே புராணங்கள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. அப்பழைய வரலாறு பெரும்பான்மையும் தெய்வஅருள்தொடர்புடையசெய்திகளாகவே இருப்பது இயல்பு. ''புராணம் என்ற வடசொல் புராதனம் என்னும் வடசொல்லின் திரிபாகும். அது புரா - நவ என்ற இரு வேர்களிலிருந்து பிறந்தது. புரா— ந இரண்டும் சேர்ந்து புராணம் என்றாயிற்று. இவற்றில் நிலைமொழியிலுள்ள ரகரத்திற்கேற்ற வாறு, வருமொழியிலுள்ள நகரம் ணகரமாக மாறிவிடும்''[157]

புராணம் என்பது பழங்கதை. பழைய வரலாறு என்று பொருள்படும். புரா - பழமை; ந - புதுமை. இவ்வாறாகப் பிரித்துப் பொருள் கூட்டிப் பழமையும் புதுமையும் சேர்ந்து வருவது புராணம் என்பர் வடமொழியாளர்கள்[158].

புராணம் என்பது பழமை என்னும் பொருளையுடையது என்பதை, ''காதல் கொண்டு கடல்வணன் புராணம் ஓதினன்''[159] என்ற மணிமேகலை வரியால் அறியமுடிகின்றது. இங்குப் புராணம் என்றசொல் பழமையைக் குறிக்கின்றது.

''எது தொன்று தொட்டு இன்றுவரை பரவியிருக்கின்றதோ அதுவே புராணம்''[160] என்று வாயுபுராணம் கூறுகிறது.

தொன்மை என்ற சொல் பழமை என்ற பொருளைத் தருகின்றது. பழம்பெருமையைப்போற்றிய அரசனை,''தொன்மை சுட்டிய வன்மையோன்''[161] என்று மதுரைக் கணக்காயனார் குறிப்பிடுகின்றார்.

''தொன்மை தானே
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே''
என்ற நூற்பாவிற்கு உரை எழுதிய பேராசிரியர், ''பழமைய வாகிய கதைப் பொருளாகச் செய்யப்படுவது. அது பெருந் தேவனார் பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன'' என்று விளக்குவர்[162].

திருவாசகத்தில் முதற்பகுதி சிவபுராணம் எனப்பெயர் பெற்றுள்ளது. அச்சொல் பழமை என்ற பொருளிலேயே ஆளப் பெற்றுள்ளது. மேலும், ''பூரணன்காண் புண்ணியன் காண் புராணன்தான் காண்''[163] என்றுதிருநாவுக்கரசர் தேவாரத்திலும், ''புராண பூதங்கள்''[164] என்றும் ''புராண சிந்தாமணி''[165] என்றும் திருவிசைப்பாவிலும் பயின்று வருவதைக்கொண்டு புராணம் என்ற சொல்லின் ஆளுமையை உணரலாம்.

இராமன் சீதையோடு காட்டிற்குச் சென்று கடுந்துயர் உழந்தான் என்பதை, ''நெடுமொழி'' என்று இளங்கோவடிகள் சொல்லியதை அடியார்க்கு நல்லார், ''நெடுமொழி புராணக் கதை''[166] என்கிறார்.

சிலப்பதிகாரத்தில் நாடுகாண் காதையில் அருகதேவனின் பெருமை புலப்படக் கூறும்பொழுது, ''பொருளன் புனிதன் புராணன் புலவன்'' என்று கூறப்பட்டுள்ளது. ''புராணன்'' என்ற சொல்லுக்குப் பழமையானவன் என்றே அடியார்க்கு நல்லார் பொருள் கொள்கிறார்[167].

மணிமேகலையில் மணிமேகலா தெய்வம் உலகப்பெண்டிர் வடிவந்தாங்கி மணியறைப் பீடிகை வலங்கொண்டு புத்த தேவனை வணங்கும்போது, ''புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்''[168] என்று புகலும். இங்கும் புராணன் என்பது பழமையானவன் என்ற பொருளிலேயே ஆளப்பெற்றுள்ளது.

எனவே பழமையான வரலாறுகள் புதுமை பெற்றிலங்கும் நிலையில் புராணம் எனப்பெயர் பெறலாயின எனத்தெரிகிறது.

## 2. புராணம் - பொருள் வரையறை :

சொற்பொருள் அளவில் புராணம் என்பது 'பழமை யானது' என்பதால், புராண நூற்கள் பழமையானவை எனக் கருத வேண்டுவதில்லை. பழஞ்செய்திகள் பற்றிய உரையாடலின்

தொகுப்பு என்று கருதுவதே பொருந்தும். தொன்மைச்செய்திகள் அல்லது பழையமரபுகளின் நூல்வடிவம் என்றும் கொள்ளலாம்.

இத்தொன்மைச் செய்திகளுக்கு இருநிலையில் புதுமைத் தொடர்பு கிடைக்கின்றது, ஒன்று, இத்தொல் மரபுகள் காலந் தோறும் வழங்கிவரும் நிலையில் எல்லாக்காலக் கருத்துகளும் உணர்வுகளும் அவற்றுடன் கலந்து வருகின்றன. மற்றொன்று காலந்தோறும் புதுமை உறவுகள் பெறாத தொன்மை மரபுகள் தம் வலுவால் காலமாறுதலுக்கு இயைந்த மிக நெருக்கமான தொடர்புடைய ஞானக்குரல் கொடுத்து நிற்கின்றன. எனவே, தொன்மைச் சிறப்புடன் புதுமை, பொலிவு, இணைந்தது எனும் பொருளில் ‘புரா அபிநவம்' என்னும் வழக்கு ஏற்பட்டிருக்க லாம்[169].

மனித வாழ்வுக்குப் பயன்படக்கூடிய தத்துவக் கருத்துக் களைத் தம் அனுபவத்தில் உணர்ந்த நம் முன்னோர்கள், அக் கருத்துக்களை மக்களுக்குச் சொல்ல எண்ணினர். தத்துவக் கருத்துக்களை வெறுமனே சொன்னால் மக்களின் மனத்தில் பதிந்து பயன் விளைவிக்காது என்று உணர்ந்தனர். ஆனால் கதைகளைக் கேட்பதிலோ, படிப்பதிலோ மக்களுக்கு என்றுமே ஆர்வம் அதிகம். எனவேதான் அக்கருத்துக்களைக் கதைகளில் உள்ளடக்கிக் கூறியிருக்கலாம்.

''தத்துவ நுட்பங்களை மக்கள் மனத்தில் எளிதில் உணருமாறு கதை வடிவமாக எழுதப்பட்ட நூல்களே இப்புராணங்கள்''[170] என்று கூறுகிறார் திரு. வி. கலியாணசுந்தரனார். எனவே தத்துவங்களைக் கருப்பொருளாகக் கொண்ட கதைகள் பழங் கதைகளாக இருந்ததலால் அவற்றைப் புராணங்கள் என்று அழைத்தனர் என்பதை உணர முடிகின்றது.

இப்புராணங்களில் திருத்தலப்பெருமை, தீர்த்தச்சிறப்பு, நோன்புகள், மந்திரங்கள், இறைவன் சிறப்பு, அடியார்கள் பெருமை முதலியன எடுத்துரைக்கப்படுகின்றன. பக்தி, ஞானம், கர்மம், யோகம் எனும் நெறிகளும் விளக்கம் பெறுகின்றன.

**வடமொழிப் புராணங்கள் :**

வடமொழியினர் புராணங்களைப் பதினெண் புராணங் களாகப் பகுத்துள்ளனர். புராணங்களைச் சிவபெருமான் நந்திக்குக்கூறத், தாம் கேட்ட அப்புராணங்களைச் சனத்குமார

முனிவர்க்குக் கூற அவர் வியாசர்க்குக் கூறினர் என வாய்மொழி இலக்கியமாகப் புராணம் வளர்ந்த கதை புலப்படும்.[171] முக்கடவுளர்க்கேற்ப முக்குணத்தன்மைக்குகந்த வண்ணம் புராணங்களைப் பகுப்பர்[172].

வடமொழியில் 'புராணம்' என்றசொல்' பண்டைக்கதைகள், உலக வரலாறுகள் எனும் பொருள்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது[173]. சுருங்கக்கூறின் வடமொழியாளர்கள் வேதக் கருத்துக்களைப் பரப்பும் ஒரு கருவியாகவே புராணங்களைக் கொண்டுள்ளனர் எனத் தெரியவருகின்றது.

**தமிழில் புராணங்கள் :**

தமிழில் புராண இலக்கியவகை தோன்றுவதற்கு முன்பே, புராணம் என்றசொல் தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளதை அறியமுடிகின்றது, 'புராணம்' என்றசொல் தமிழ் இலக்கியங்களில் காணப்பட்டாலும் கி. பி. 9-ஆம் நூற்றாண்டிலும் அதற்குப்பின்பும் தோன்றி வளர்ந்த புராணங்கள்தாம் இன்று நமக்குக் கிடைப்பனவாக உள்ளன.

தமிழில் உள்ள புராணங்களில் முதன்முதலில் 'புராணம்' என நாம் அறியக்கிடப்பன 'புராண சாகரம்', 'சாந்தி புராணம்' என்பவையாகும்[174].

புராண சாகரத்தின் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு என யாப்பருங்கலவிருத்தி தெளிவுறுத்தும். இவ்விரு நூல்களும் மறைந்துவிட்டன. சாந்தி புராணப் பாடல்கள் சில புறத்திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளன[75].

புராணமாகிய பழங்கதையை உயர்ந்ததெனப் போற்றிச் சமணர்கள் பிராகிருதமொழியில் ஆதிபுராணம் என்ற நூலினைப் படைத்தனர். சிந்தாமணி கூறும் சீவகன் கதையும் சூளாமணி கூறும் திவிட்டன் கதையும் அந்தப் புராணத்தில் கூறப்பட்டனவே யாகும்[176]. சான்றோர் வரலாற்றைப் புராணம் என்று வழங்கும் வழக்கு இந்தச் சமயவாழ்க்கையை ஒட்டித் தமிழ்நாட்டில் வளர்ந்தது எனலாம்.

தமிழில் சைவநாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறும் நூலாகப் பெரியபுராணம் விளங்குகின்றது. சுந்தரரின் திருத்தொண்டத் தொகையையும், நம்பியாண்டார் நம்பியின் திருத்

தொண்டர் திருவந்தாதியையும் பின்பற்றியே சேக்கிழார் தமது பெரியபுராணத்தை இயற்றினார்[177].

சம்பந்தர் தேவாரத்தில் பதினெண்புராணங்கள் பற்றிய குறிப்பினை,

"பங்க மில்பதி னெட்டொரு நான்குக் குணர்வுமாய்
அங்க மாறுஞ்சொன் னானுமை யாறுடை யையனே[178]"

என்ற வரிகளால் அறியமுடிகின்றது.

**புராணங்களும் வகைமையும் :**

இறைவனது பெருமையை வெளிப்படுத்துவதற்கு ஆன்றோர் கையாண்ட நெறிமுறைகள் பலவற்றுள் புராணங்களும் ஒருவகை என்றுகூறலாம். புராணங்கள் இருவகையாகப் பகுத்துப் பேசப்படும். அவற்றை மகாபுராணங்கள் என்றும் உபபுராணங்கள் என்றும் கூறுவர். இவையன்றித் தலங்களுக்குரிய புராணங்களைத் தலபுராணம் என்று கூறுவர்.

**அ. புராணங்களின் நோக்கம் :**

வேதங்களின் உட்பொருளை வெளிப்படுத்துவதே புராணங்களின் நோக்கம் என்று கூறலாம்.

கடவுள் அனுபவத்தினை மக்கள் மனத்தில் இத்தகையது என உணர்த்துவதற்கும், அவ்வனுபவத்தை நோக்கி அவர்கள் மனங்களைக் கிளர்ந்தெழச் செய்வதற்கும் அருளாளர்கள் எடுத்துக்கொண்ட முயற்சியில் இப்புராணங்கள் பெரிதும் பயன் பட்டிருக்கலாம்.

சமய உணர்வைச் சாமானிய மக்களுக்கு ஊட்டி, அவர்களை ஆன்மீகப்பாதையில் வழிநடத்திச் செல்லும் நோக்கத்தில் எழுந்த கதைகள்தாம் புராணங்கள் என்று கருதலாம்.

சிறந்த சமயத்தத்துவ உணர்வையும், நிறைந்த அருளனுபவத்தையும் தருவனவற்றுள் புராணங்கள் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன என்று கருதுகிறார் அருணந்திசிவாச்சாரியார்[179].

இறைவனுடைய சங்கற்பம் அல்லது இயற்கை நீதிகளையும் ஒழுக்கங்களையும் எடுத்துக்காட்டுவதும் புராணத்தின் நோக்கமாகும்[180].

இப்புராணங்கள் வேதங்களுள்ளும் ஆகமங்களுள்ளும் விதி நிஷேதங்களாகக் கூறப்பட்டனவற்றைத் திருஷ்டாந்த மூலமாக விளக்கிக்காட்ட வெழுந்தனவாம் 181.

சமுதாயத்தில் புராண இலக்கியம் பற்றியுள்ள பொதுவான கருத்தினைப் புறந்தள்ளி, இலக்கியத்தன்மை, சமயம், தத்துவம், கலைகள், சமூகநெறிகள் ஆகியவற்றை வெளிப்படுத்துவது புராணங்களின் நோக்கமாகும்.

**வைணவ அந்தாதி இலக்கியங்களில் புராணக்கூறுகள் :**

வைணவ அந்தாதி இலக்கியங்களில் மிகுதியான புராணக் கதைகளில் கூறுகளைக் காணமுடிகின்றன. தொடக்ககால அந்தாதிகளில் மிகுதியான கூறுகளையும் பிற்கால அந்தாதிகளில் மிகக் குறைவான கூறுகளையும் காணமுடிகின்றன. பாகவதம், இராமாயணம், மகாபாரதம் போன்றவற்றில் காணப்படும் புராணங்களையும், வரலாற்றுச் செய்திகளையும் வெளிப்படுத்தும் வகையில் இவை அமைகின்றன.

ஆய்வாளர் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட அந்தாதிகளில் அறுபத்தெட்டுப் புராண வரலாறுகள் ஆயிரத்தெட்டு இடங்களில் பேசப்படுகின்றன. இவற்றில் அதிகமான இடங்களில் எடுத்தாளப் படுகின்ற செய்தி உலகளந்த வரலாறு, கசேந்திரனுக்கு அருளிய வரலாறு, உலகுண்டுமிழ்ந்த வரலாறுகளாகும். இவற்றில் உலகளந்த வரலாறு தொண்ணூற்றுமூன்று இடங்களிலும், கசேந்திரனுக்கு அருளிய வரலாறு எழுபத்து நான்கு இடங்களிலும் உலகுண்டுமிழ்ந்த வரலாறு அறுபது இடங்களிலும் பேசப்படுகின்றன. அதிகமான புராணக் கூறுகளைக் கொண்ட அந்தாதிகள் முதல்மூன்று திருவந்தாதிகளும் திருவேங்கடத்தந்தாதியுமாகும். முதல் திருவந்தாதி எழுபத்தெட்டுக்கூறுகளையும், இரண்டாம் திருவந்தாதி அறுபத்தொன்பது கூறுகளையும், மூன்றாம் திருவந்தாதி எண்பது கூறுகளையும், திருவேங்கடத்தந்தாதி எண்பத்தொன்று கூறுகளையும் கொண்டுள்ளன.

இறைப்பண்பை இறைச்செயல்களில் வெளிப்படுத்தல், சமயத்தின் அடிப்படையில் வேரூன்றி நிற்றல், போற்றிப்புகழ் தரும் அற்புதச்செயல்களாக அமைதல், நிகழ்நிலைப் பேறெய்தி நிற்றல், கீற்றுக்களாக அமைத்து சொல்லோவியம் படைத்தல்

எனும்வகையில் இப்புராணக்கூறுகள் வெளிப்படுகின்றன. மேலும் இறைவன் வெவ்வேறு வடிவங்களில் வெவ்வேறு காலங்களில் தோன்றும் அவதார நிலைகளும் உணர்த்தப்படுகின்றன. அந்தாதிகளில் இடம்பெறுகின்ற புராணக்கூறுகள் விளக்கப்பட்டு, ஒவ்வோர் இடத்தும் அக்கதை வாயிலாகப் புலப்படுத்தப்படும் நோக்கம் வெளிப்படுத்தப்படும். இறுதியில் அந்தாதியில் எடுத்தாளப்பட்டுள்ள அவதாரக் கோட்பாடுகளும் நோக்கமும் ஆராயப்படும்.

**கசேந்திரனுக்கு அருள் புரிந்த வரலாறு :**

இப்புராண நிகழ்ச்சியில் 22 ஆசிரியர்கள் ஈடுபாடு காட்டியுள்ளனர். 22 அந்தாதிகளில் இப்புராணக்கூறு 74 பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன'82.

பிள்ளைப்பெருமாளையங்கார் இந்நிகழ்ச்சியைத் தம் நூல்களில் பதினேழு இடங்களில் குறிப்பிடுகின்றார். ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வொரு கோணத்தில் இந்நிகழ்ச்சியைக் கையாளுகிறார். திருவேங்கடத்தந்தாதியின் முதல் பாசுரத்தில்.

''உருவேங்க டத்துக் குளத்தே யிருந்தன வுற்றழைக்க
வருவேங்கடத்தும்பியஞ்சலென் றோடின மால்கழலே''183

என்று கூறுகிறார்.

மதத்தையுடைய யானையாகிய கசேந்திராழ்வான் முதலையால் பற்றப்பட்டுத் துன்புற்று 'ஆதிமூலமே'' என்று அழைக்க அதன் துன்பந் தீர்த்துப் பாதுகாத்தற்பொருட்டு 'யாப் இதோ வருகிறோம் நீ அஞ்சவேண்டா' என்று சொல்லிக்கொண்டு திருவைகுண்டத்திலிருந்து அவ்யானையினிடத்து விரைந்த திருமாலின் திருவடிகளின் சிறப்பு, இப்புராணக்கூற்றின் வாயிலாக எடுத்துரைக்கப்படுகின்றது. எம்பெருமான் பொருள்கள் எல்லாவற்றினுள்ளும் மறைந்திருத்தலையும் அடியார்கள் மனத்தில் வீற்றிருத்தலையும் குறிக்கும் வகையில், 'அஞ்சலென் றோடின மால்கழல்' என்று குறிப்பிடுகிறார்.

மற்றொரு பாசுரத்தில்,

''... ... ... ... ... ... ... ... ... தாழ்கயத்து
ளாங்கடத் தாரை விலங்குமன்றோ சொல்லிற் றையமற்றே''184

என்று இப்புராணத்தை எடுத்தாள்கிறார். ''ஆழ்ந்த தடாகத்தில் முதலைவாயில் அகப்பட்டுக் கொண்ட மதநீர்ப் பெருக்கையுடைய

மிருக சாதியாகிய யானையும் அன்றோ ஸ்ரீமந் நாராயணனை 'ஆதிமூலம்'என்று கூப்பிட்டு உண்மைப் பொருளை உணர்த்திற்று. திருமாலே பரம்பொருள் என்பது, கசேந்திராழ்வார் மற்றைய பெயர்களால் குறியாமல் திருமாலை ஆதிமூலமே என்று குறித்து விளித்ததனால் இனிது வெளியாயிற்று என்பது இறுதி வாக்கியத்தின் கருத்து' 185 என்று உரையாசிரியர் விளக்கம் தருவர்.

கசேந்திராழ்வார் 'ஆதிமூலமே' என்று பொதுப்பட அழைத்த போது எம்பெருமான் அல்லாத பிற தேவர் எல்லோரும் தாம்தாம் அச்சொல்லுக்குப் பொருளல்லர் என்று கருதி ஒழிய அச்சொல்லிற் குரிய திருமால் தானே வந்து அருள்செய்தான். இதனால் திருமாலே மும்மூர்த்திகளுக்குள்ளும் பரம்பொருளாக, ஆதிமூலமாக விளங்குகின்றார் என்பது உரையாசிரியர் கருத்து.

புராண வரலாற்றைக்கொண்டு நோக்கும்பொழுது இவ் விளக்கம் ஏற்புடையதாக அமையவில்லை. மேலும், பாடலை உற்றுநோக்கினால் இவ்விளக்கம் முரண்பட அமைந்துள்ளதையும் உணர முடிகின்றது.

கசேந்திரன் என்ற யானை சாபம் பெறுவதற்கு முன்னால் மிகுந்த விஷ்ணு பக்தியுடைய ஓர் அரசன் என்பதைப் புராண வரலாறு கூறுகின்றது. யானையாக மாறிய பின்பும் திருமாலை வணங்கிப் பூசைசெய்வதற்காகத்தான் தடாகத்தில் இறங்கியதாகவும் புராணம் சுட்டிக்காட்டுகின்றது. அரசனாக இருந்த பொழுதும், சாபத்தால் யானையாக மாறியபொழுதும் கசேந்திரனை ஒரு விஷ்ணு பக்தனாகவே புராணம் காட்டுகின்றது. எனவே 'யானை பொதுப்பட ஆதிமூலம் என்று அழைத்தது' எனக்கூறும் உரையாசிரியர் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாக அமையவில்லை.

உரையாசிரியர் 'ஐயம் அற்று சொல்லிற்று'186 எனும் தொடரைக் கொண்டு 'ஐயமின்றி நாராயணனை ஆதிமூலமே என்று கூப்பிட்டு உண்மைப்பொருளை உணர்த்திற்று' என்று கூறுகிறார். பாடல் முழுவதையும் உற்றுநோக்கினால் அத் தொடருக்குரிய பொருள் புலப்படும்.

நூலாசிரியர் இச்சமுதாயத்தை நோக்கி, சிறியீர்!உங்களைப் பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றிப் பாதுகாத்தற் பொருட்டு எம்பெருமானை வணங்காது, உங்கள் துயரை நீக்கமாட்டாத சிறுதெய்வங்களை வணங்குகின்றீர்கள். எம்பெருமான் தன்னை

இடைவிடாது நினைக்கின்றவர்களுக்கு ஓடிவந்து அருள்புரிவான் என்பதைக் கசேந்திரவாழ்வான் ஐயம் அற உணர்த்திற்று என்று கூறுகிறார்.

ஒரு விலங்கினாலே மற்றொரு விலங்கிற்கு நேர்ந்த துன்பத்தைத் தான் இருந்த இடத்தில் இருந்தே தீர்ப்பது எளிதாயினும், எம்பெருமான் அங்ஙனம் செய்யாமல் நேரடியாக வந்து உதவின தன்மையைப் பாராட்டுமுகமாகவும், எம்பெருமானை இடைவிடாது எண்ணுகின்றவர்களுக்குத் துன்பம் ஏற்பட்டபொழுது அத்துன்பத்தை நீக்குவான் என்ற காரணத்தால் அவனை இடைவிடாமல் நினைக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தவும் இப்புராணத்தை ஆசிரியர் எடுத்தாண்டிருக்கலாம்.

'ஒரு விலங்கின் குரலுக்கே ஓடிவந்து அருளிய எம்பெருமான், உங்கள் குரலுக்கு வரமாட்டானா? ஏன் நீங்கள் அவனை எண்ணாது இருக்கின்றீர்கள்!' என்று ஆசிரியர் கூறுவதாகவே இப்பாசுரம் அமைந்துள்ளது. இக்கதை, திருமாலின் பரத்துவத்தைச் சுட்டிக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.

அன்பர்க்கோர் ஆபத்து எனின், தன் நிலையிலிருந்து இறங்கிவந்து மனமிரங்கி உவந்து அருள்புரியும் அருளாளராகிய திருமால் தன்பால் அன்புகொண்டோர்க்கு அறக்கருணை காட்டுவார். தருமத்தை மதித்து நடக்காதவர்க்கு மறக்கருணை புரிவார் என்ற கருத்தும் உணர்த்தப்படுகிறது.

சாதுக்களாகிய சான்றோரைப் பாதுகாத்தலும், கொடியவராகிய தீயோரைக் கடிந்துத் திருத்தி நல்வழிப்படுத்தலும், தரும நெறியை உலகில் நிலைநாட்டுதலும் திருமாலின் செயல்கள். இச்செயல்களைச் செய்யவே இறைவன் இவ்வுலகில் வந்து திருவவதாரம் செய்கிறார் என்பதையும் இக்கதை அறிவுறுத்துகின்றது.

மேலும், இப்புராணத்தை எடுத்தாளுகின்ற பிற ஆசிரியர்களும் இக்கருத்தை வெளிப்படுத்தும் நோக்கில்தான் இப்புராணத்தை எடுத்தாளுவதைக் காணமுடிகின்றது.

புல்லையந்தாதியில்,

"கரிக்கன் றுதவும் பெருமானைக் கருத்தாய்த் துதிப்போர்க்
கின்பமெல்லாம்
தெரிக்குந் திருப்புல் வாணியனைத் தெரிசித் தேசற்
றொழியாமல்"[187]

என்று கூறப்பட்டுள்ளது. யானைக்கு அன்று உதவிய பெருமானை உள்ளத்தில் எண்ணியோர்க்கு எல்லா இன்பங்களையும் தரவல்ல வன் திருப்புல்லாணிக்கு அரசன். இவ்விறைவனை வழிபடாமல் பரத்தையரது வலைக்குட்பட்டுத் துவண்டொழிவது ஏன்? என்று சமுதாயத்தைப் பார்த்து வினவுகிறார்.

''மகளிரது கொங்கையழகுக்கும், கண்களின் அழகுக்கும் ஏங்கி அம்மாதர்களின் தொடர்பினால் எந்நாளும் துன்பமடைகின்றவர்களே! தடாகத்தில் கசேந்திராழ்வானைப் பாதுகாத்தருளியவனின் இடத்தில் உங்கள் மனத்தைச் செலுத்துங்கள்''[188] என்று அழகரந்தாதி கூறுகின்றது

''கசேந்திராழ்வான் அன்று ஆதிமூலமே என்று கூவி அழைத்த அக்காலத்தில் அஞ்சல் என்று கூறிப் பாதுகாத்தருளியவனே எதை அந்திமகாலத்தில் நீ என் கண்முன் தோன்றி 'அஞ்சாதே' என்று அபயமளித்துக் காப்பாற்றுவாய்''[189] என்று திருவரங்கத்தந்தாதி ஆசிரியர் வேண்டுகிறார்.

''கசேந்திரனென்னும் யானையை முதலையிடமிருந்து காப்பாற்றிய எம்பெருமானே! மூங்கிலைப்போன்ற தோள்களையுடைய மாதரிடத்தில் கொண்ட ஆசை என்னும் சமுத்திரத்தில் யான் வீழாது என்னையும் பாதுகாப்பாய்''[190] என்று திருமழிசையந்தாதி ஆசிரியர் வேண்டுகிறார். சேடமலைப்பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியரும் மேற்கூறிய கருத்தை வலியுறுத்தவே இப்புராணத்தை எடுத்தாள்கிறார்.

'' அன்று கைக்கிரி மூலமென் றோலிட
வாழி யோச்சிக் காரங்கடிந் தாண்டவா''[191]

என்று கூறுகிறார்.

திருவெவ்வுளூர்த்திரிபந்தாதி ஆசிரியரும் இக்கருத்தையே வலியுறுத்துகிறார். மேலும்,

'' மூலமென் றோதின் மாமத யானைக்கு முன்னின்றருள்
சாலமன் றோதின மென்றொளி காலெவுட்
டாத்தானோ''[192]

என்றும் கூறுகிறார்.

இப்புராணக் கதை எடுத்தாளப்பட்டுள்ள பாடல்களை நோக்கும்போது இறைவனை நினையாது, பெண்களையே எண்ணி ஏங்குகின்றவர்களைத் திருத்தும் நோக்கில், மக்களைப் பார்த்துக் கூறுவதாகவும், சில பாடல்களில் தன்மேல் ஏற்றிக்கூறுவதாகவும்

காணப்படுகின்றன. முதலையின் பிடியில் சிக்கிய யானையை மீட்டது போலக் காமப்பிடியிலிருந்து இம்மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் தம்மேல் ஏற்றிப்பாடுவதை உணர முடிகிறது. மேலும் இச்சமுதாயத்தைப் பார்த்து, நீங்கள் எம் பெருமானை இடைவிடாது எண்ணினால், நீங்கள் அப்பிடியி லிருந்து விடுபடலாம் என்பதைக் கசேந்திராழ்வான் என்ற யானை ஐயமற உணர்த்திற்று என்று நூலாசிரியர் கூறுகிறார் என்று கொள்வதே ஏற்புடையதாக கருதலாம்.

சிற்றின்பத்தில் ஈடுபட்டுப் பேரின்ப நிலையை மறந்து மாதரின் வலைக்குட்பட்டுத் துவண்டு வாடுகின்ற மக்களின் நிலையைப்பற்றிக் கூறும்பொழுது இப்புராணக்கூறு, புல்லையந் தாதி, திருவரங்கத்தந்தாதி, திருமழிசையந்தாதி, அழகரந்தாதி ஆகியவற்றில் எடுத்தாளப்படுகின்றது. திருமால், தன்னை இடையறாது நினைக்கின்ற அடியவர்கள் துன்புறும்போது, ஓடி வந்து அருள்புரிவான் என்ற கருத்தை வலியுறுத்த இப்புராணக் கூறு 20 அந்தாதிகளில் எடுத்தாளப்பட்டுள்ளன.[193]

**திருவடியின் சிறப்பு :**

திருமாலின் திருவடியின் சிறப்பைக் கூறவந்த சில ஆசிரி யர்கள் இப்புராணத்தை எடுத்தாளுவதையும் காணமுடிகின்றது.

திருமாலின் திருவடியின் பெருமையினைக் கூறவந்த பொய்கையார் உண்மையான பக்தி ஞானத்தால் எம்பெருமானை உள்ளபடி உணரவல்லவர்கள், முன்பொரு காலத்தில் கசேந்திராழ் வாழ்வானைக் காத்தவனான அப்பெருமான் திருவடிகளைக் கண்டு அனுபவிக்கப் பெறுவார்கள் என்பதை,

> "மெய்ஞ்ஞானத் தாலுணர்வார் காண்பரே மேலொருநாள்
> கைந்நாகங் காத்தான் கழல்"[194]

என்று குறிப்பிடுகின்றார். இந்திரியங்களை அடக்கி ஆள்பவர் களே எம்பெருமான் திருவடியைப் பணிதற்குப் பாங்குடையவர் என்று கூறுகிறார். இந்திரியங்களை அடக்கியாளுதல் மிகவும் அரிது என்பது தோன்ற, அவ்விந்திரியங்களை மதம் பிடித்த யானையாகக் கூறுகிறார் யானைகள் நீர்நிலையில் புகுந்தால் முதலை போன்ற உயிரினங்களால் துன்பம் நேர்வது இயற்கை. எனவே, அங்கு செல்வதைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு இந்திரியங்களை வென்று பக்தி ஞானத்தால் அவனை உள்ளபடி உணர்கின்றவர்கள் யாரோ, அவர்கள் அவனுடைய

திருவடிகளை அடையமுடியும் என்று திருமாலின் திருவடியின் சிறப்பைக் கூறுவதுடன், புலனடக்கம் என்ற நெறியினையும் இப்புராணக்கூறு கொண்டு வலியுறுத்துவதை அறியமுடிகின்றது.

திருமாலின் திருவடிகளின் சிறப்பைக் கூறவந்த 12 பாசுரங்களில் இப்புராணக்கூறு எடுத்தாளப்படுதலையும் காணமுடிகிறது[195].

**வினைப்பயன் :**

மக்களின் பேதமையையும் வினைப்பயனையும் குறித்து இரங்குகின்றபோதும் இப்புராணக்கதை எடுத்தாளப்படுகின்றது. கசேந்திராழ்வான் ஆதிமூலமேயன்று கூவியழைத்து முறையிட்ட ஓலம் அடங்குவதற்கு முன்னே, தடாகத்தில் இருந்த முதலையானது இறக்குமாறு தன் சக்கராயுதத்தால் அதனைத் துணிக்கக் கண்டும், ஞானக்கண் குருடரான பேதையர்கள் தங்கட்குத் துன்பம் நேர்ந்தகாலத்து, அதனை நீக்குமாறு உன்னை அழையாமலிருப்பர் என்பதை,

> '' அந்தக ராசலம் வந்தா லுனையழை யாதிருப்பார்
>
> ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
>
> அந்தக ராசலத் தேதுஞ்ச நேமியறுக் கக்கண்டே ''[196]

என்று திருவரங்கத்தந்தாதி பாடும். இவ்வாறு மக்களின் பேதமையும், முதலை அழிக்கப்பட்ட விதமும், அதனால் அம்முதலை தன் சாபத்திலிருந்து விடுபட்ட நிலையும் பல அந்தாதிகளில் பேசப்படுகின்றன.

**பிறப்பின்மை :**

உனக்கு ஆட்பட்ட அடியேனது கர்மம் முதலிய குற்றங்களைப்போக்கி இனிப் பிறப்பில்லாதபடி முத்தியளித்தருள வேண்டும் என்று வேண்டியிரங்கும்போதும் இப்புராணத்தை எடுத்தாளுவதைக் காணமுடிகின்றது.

> '' துன்று பூங்குழல் வேசியர்க் கீந்துளஞ்
> சோம்பி னேன்பொறுத் தாளினி யண்ணலே''[197]

என்று சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர் வேண்டுகிறார்.

**ஏற்றத்தாழ்வின்மை :**

ஏற்றத்தாழ்வின்மையை இச்சமுதாயத்திற்கு உணர்த்த விரும்பிய சில ஆசிரியர்கள் இப்புராணத்தை எடுத்தாளுகின்றனர்.

''யானையின் தாழ்வைக் கவனியாமல் ஓடிவந்து காத்தருளிய ஆதிப்பிரானே''198

என்று மகர நெடுங்குழைக்காதர் அந்தாதி கூறுகிறது.

திருமகள் அந்தாதியின் 5 வது பாசுரத்திலும், சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதியின் 21வது பாசுரத்திலும், சடகோபர் சதகத்தந்தாதியின் 66வது பாசுரத்திலும் ஏற்றத்தாழ்வின்மையினை உணர்ந்த இப்புராணம் எடுத்தாளப்பட்டுள்ளது.

முதல் திருவந்தாதியின் 97வது பாசுரத்திலும், இரண்டாம் திருவந்தாதியின் 22-வது பாசுரத்திலும், குடந்தையந்தாதியில் 83-வது பாசுரத்திலும், நான்முகன் திருவந்தாதியின் 12-வது பாசுரத்திலும், சடகோபர் சதகத்தந்தாதியில் 41வது பாசுரத்திலும், கசேந்திராழ்வான் அகத்திய முனிவரால் சாபம் பெற்ற வரலாறும் கூறப்பட்டுள்ளது.

அந்தாதி ஆசிரியர்கள் எடுத்தாளுகின்ற இப்புராணத்தின் வாயிலாக, தேவாந்தரங்களை வழிபடுதலை விட்டுப் பர தேவதையை வழிபட்டுக் கசேந்திராழ்வான் போல் துயர் தீர்ந்து முத்தி பெறுங்கள் என்று வேண்டுவதையும், ஐயறிவுயிராகிய விலங்குகளுக்கு இருந்த விவேகந்தானும் ஆறறிவுயிரான மாந்தர்க்கு இல்லையே என்று சுட்டிக்காட்டுவதையும், பகவத் விஷயத்தில் ஈடுபடாது விஷயாந்தரத்தில் ஈடுபட்டவர்களுடைய பிறவி வீண் என்பதும், மனிதன் பிறவி எடுத்ததன் பயனான நற்கதிப்பேற்றை அவர்கள் அடையாமல் அவர்களது வாழ்க்கை பழுதுபட்டது என்றும் கோடிட்டுக் காட்டப்படுகின்றது. அடிமைப்பட்ட உயிர்களை அன்போடு துயர் தீர்த்துப் பாதுகாத்தருள்கின்ற எம்பெருமானது கருணைத்திறத்தை விளக்குவதையும், ஒரு விலங்கினால் மற்றொரு விலங்கிற்கு நேர்ந்த துன்பத்தையும் பொறாமல் தனது பேரருளினால் தடாகத்தில் நேரில் தோன்றி உதவின உயர்ந்த பண்பினைச் சுட்டிக்காட்டுவதையும் இப்புராணத்தின் வாயிலாக உணர முடிகின்றது.

நாம் அப்பெருமானை வணங்கவே துக்கங்கள் எல்லாம் தொலைந்து போகும். அத்துக்கம் கசேந்திராழ்வனைத் தொடர்ந்த முதலைப்பட்டது போன்று போய்விடும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றது.

கல்லாதவர்களுக்கும் கடைநிலையிலுள்ளவர்க்கும், இறைவன் முத்தியினை நல்குவான் என்ற கருத்தும் மனித உயிர்

கட்கு மட்டுமின்றி விலங்குகட்கும், தாவரங்கட்கும் கூட இறைவன் முத்தியினை நல்குவன் என்ற கருத்தும் இப்புராணத்தின் வாயிலாக விளக்கப்படுகின்றது.

**குவலயாபீடமென்னும் யானையின் மருப்பொசித்த வரலாறு :**

கம்சனால் வரவழைக்கப்பட்ட கிருஷ்னண பலராமர்கள் கம்சன் அரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனை வாயில் வழியில் தம்மைக் கொல்லும்படி கம்சனால் ஏவி நிறுத்தப்பட்ட மதயானை கோபித்துவர, கண்ணன் அதனை எதிர்த்து அதன் தந்தங்கள் இரண்டையும் பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு, அவ் யானையைக் கொன்று விட்டு அரண்மனையின் உள்ளே சென்றான் என்பது புராணக் கதை[199].

பிள்ளைப்பெருமாளையங்கார் இப்புராணத்தை ஐந்து இடங்களில் எடுத்தாண்டுள்ளார். திருவரங்கத்தந்தாதியில்உலகத்தின் பெரும்பான்மையான மக்களின் பேதமையைக் குறித்து இரங்கிப் பாடும்போது,

> ''வருந்து வரைப்பட்ட வேழமட் டானை மறந்துலகோர்
> வருந்து வரைப்பட்ட வீப்போன் மடந்தையர் மால் வலைக்கே''[200]

என்று கூறுகிறார்.

வஞ்சனையுடைய பகைவர் தன்னை நோக்கிச் செலுத்திய குவலயாபீடமென்னும் யானையைக் கொன்றவனான திருமாலை மறந்து, உலகத்து மக்கள் 'ஐபட்டஈபோல்' மீளவொண்ணாதபடி மகளிர் பக்கம் கொள்ளும் மோகமாகிய வலையில் அகப்பட்டு மீளமாட்டாது வருந்துவர் என்று கூறுகிறார்.

எம்பெருமானை இடையறாது எண்ணுகின்றவர்களுக்குத் தம் பகைவர்களால் ஏற்படும் துன்பத்தை அவன் நீக்குவான். எனவே உங்களுக்கு அவனின்றி வேறு துணையில்லை என்று கூறவந்தபோது இப்புராணத்தை எடுத்தாளுகின்றார். மேலும் எம்பெருமானை நினையாதவர்கள் காமம் என்னும் மதயானையிடமிருந்து மீளமுடியாது என்றும் கூறுகிறார்.

மதங்களைச் சொரிகின்ற குவலயா பீடமென்னும் யானையின் மருப்பொடித்த பலம் பொருந்திய கையினை உடையவனே; என்னுடைய அறிவின்மையை அகற்றி அறிவைத்

தருவாய்., திருக்கடன் மல்லையில் விளங்குகின்ற தேவனே! என்று வேண்டுகிறார் திருக்கடன் மல்லைப்பதிற்றுத் தத்தாந்தாதி ஆசிரியர்.

" கடம்பொழிவெங் களிற்றினுயர் மருப்பொசித்த
திறற்கரச்செங் கண்ணாமுதுத்
...............
மடமகற்றிப் புலமருள்வாய்"201

என்று கூறுகின்றார். மதமிக்க யானையின் மருப்பொசித்த உன்னால் இவ்வுலக மக்களிடம் படிந்திருக்கின்ற அறியாமையை அகற்றமுடியும் என்று இறைவனிடம் முறையிடுவதைக் காண முடிகின்றது. இறைச்சிந்தனையின்றி அலைகின்றவர்களுக்கு மத யானையையும், அவர்களின் அறியாமைக்கு யானையின் மருப்பை யும் உவமையாகக் கூறியுள்ளார்.

" நிறஞ்சாடி முரண்தீர்த்த நீண்மருப் பெழில்யானை
............ மால்போல் தாள்"202

என்று குறிஞ்சிக்கலியின் கூற்றும் இவண் நினையத்தகும்,

மதங்கொண்ட யானையின் மருப்பை அதனிடமிருந்து நீக்கியதுபோல், பெண்களின் அழகைக்கண்டு மயங்குகின்ற காம மயக்கத்திலிருந்து தன்னை விடுவிக்க வேண்டும் என்று திருக்கடன் மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர் வேண்டும்போது,

" தந்த வாரண மாகன் றினைப்பொருந் தற்ப ராமட
வாரெழிற்கண்டற்பு
தந்த ரப்படர்ந் தேயுழ லாதுநின் றாட்ச ரோகுக
மூழ்த்த வருளன்"203

என்று குறிப்பிடுகின்றார். மற்றொரு பாசுரத்தில் 'மதங்கொண்ட யானையின் மருப்பினை அதனிடமிருந்து அகற்றியது போல், உமது அடிமையாகிய எமது பாவங்களை அகற்ற வேண்டும்' என்று வேண்டுகிறார்204.

"எம்பெருமானே நீ, தம் அடியவர்களுக்கு அருள்காட்ட வேண்டும் என்று மனம் வைத்துவிட்டால் அருமையான காரியங் களையும் எளிதாகச் செய்து முடிப்பவன். பாகவதர்களுக்கு உயிரான உன்னைக் கொல்லுமாறு கம்சனால் ஏவி நிறுத்தப் பட்டிருந்த மதயானையைக் கொன்று முடித்தாய்"205 என்று பூதத்தாழ்வார் கூறுகிறார்.

இவ்வுலக மக்களிடம் காணப்படுகின்ற ஆணவத்தை அகற்றவும், பாவத்தை அகற்றவும், அறியாமையை அகற்றவும்

எம்பெருமானிடம் முறையிடுகின்றபோது, மதயானையின் மருப்பு அகற்றிய இப்புராணக்கதையை ஆசிரியர்கள் எடுத்தாளுகின்றதைக் காண்கின்றோம். ஆய்வாளர் ஆய்விற்கு எடுத்துக்கொண்ட அந்தாதிகளில் இப்புராணக்கூறு 17 அந்தாதிகளில் 42 பாசுரங்களில் பேசப்படுகின்றது[206].

மக்களுக்கு ஆன்மீக உணர்வுகள் தோன்றி வளரத் துணை செய்யும் வகையில் இப்புராணக் கருத்து அமைகின்றது.

இறைவன் திருமுன்னர் அன்பு ஒன்றுதான் மதிக்கப்பெறும் என்பதும், மற்றவை எல்லாம் கருத்திற்குரியன அல்ல என்பதும் இப்புராணத்தின் வாயிலாகத் தெளிவுறுத்தப்படுகின்றது.

யானையின் கொம்பொசித்த கதை வடிவில் தரும் செய்திகள், இறையருள் மண்ணுலகினை நோக்கிப்பெருகி நிற்றலை உணர்த்துகிறது.

எம்பெருமானை இடைவிடாது எண்ணுகின்றவர்களுக்குத் தம் பகைவரால் ஏற்படும் துன்பத்தை நீக்குவான் என்றும், இறைச்சிந்தனையின்றி அலைகின்ற மக்களின் அறியாமையைச் சுட்டிக்காட்டுவதற்கு யானையின் மருப்பை அதனிடமிருந்து நீக்கியது போல் காம மயக்கத்திலிருந்தும், பாவங்களிலிருந்தும் விடுவிப்பான் என்றும் கூறவந்தபோது இப்புராணக்கதை எடுத்தாளப்பட்டுள்ளது.

இப்புராணக்கூறு மக்கள் கருத்தழிந்து சாகாதவாறு ஊக்கங் கொடுத்துத்தட்டி எழுப்பிப் புத்துயிரோடும், புத்துணர்வோடும் வாழ வழிவகை செய்கின்றது எனக்கூறலாம்.

**கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த வரலாறு :**

திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங்கூடி மழையின் பொருட்டாக, இந்திரனை ஆராதித்தற்கென்று வழக்கப்படி சமைத்த சோற்றைக் கண்ணபிரான் அவனுக்கிடாதபடி விலக்கிக் கோவர்த்தன மலைக்கு இடச்சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அமுது செய்தருள. அவ்விந்திரன் கோபத்தோடு பல மேகங்களை ஏவி கண்ணன் விரும்பி மேய்க்கின்ற கன்றுகளுக்கும், பசுக்களுக்கும், இடையருக்கும், இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படிக் கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்த பொழுது, கண்ணன் கோவர்த்தனம் என்னும் மலையை எடுத்துக்

குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் காத்தருளினான் என்பது புராண வரலாறு207.

அகப்பொருள் பாசுரங்களில் இப்புராணக்கூறு மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளமையும் கருதத்தக்கது. அழகரந்தாதியில் 3 பாசுரங்களில் இப்புராணக்கூறு எடுத்தாளப்பட்டுள்ளது. அம் மூன்றும் அகத்துறையைச் சார்ந்த பாசுரங்களாகும்,

தலைவனைப் பிரிந்த தலைவி மேகத்தைத் தூது அனுப்புகிறபோது, "முன்பு கல்மழையைத் தடுப்பதற்காக உயர்ந்த சிகரத்தையுடைய கோவர்த்தன மலையை எடுத்துக் குடையாகப் பிடித்தவரிடம், என் காதலைச் சொல்லி, அவர் சொல்லும் மறுமொழியை எனக்குச் சொல்லுங்கள்" என்று கூறுகின்றாள்.

ஆநிரைகளையும் ஆயர்களையும் மழையிலிருந்து காத்தவன், தன்னையும், தன் காதல் நோயிலிருந்து காப்பாற்றுவான் என்று எண்ணுகின்றாள் தலைவி.

ஒரு மலையைக் கையிலெடுத்தும், மற்றொரு மலையில் தாம் நின்றும் ஆநிரைகளைப் பாதுகாப்பவர், அரியன செய்து அடிமைகளைக் காத்து அடியவர்க்கு எளியராய் நிற்பவர், இந்திரன் கல்மழை பொழிவித்ததனால் அதனைக் கல்மலை கொண்டு தடுத்திட்ட வர். செயற்கரியன செய்யுந் திறமுடையவர் என்று எம்பெருமான் தாற்பரியம் இப்பாடலில் பேசப்படுகின்றது.

மேலும் எம்மை முன்பு ஒருகால் தடுத்திட்டலர் என்று மேகங்கள் கண்ணன் அருகில் செல்லுவதற்கு அஞ்சிடாமைப் பொருட்டு, "அவர் முன்பு இடைச் சாதியில் வளர்ந்தது பற்றி அச்சாதி தருமத்திற்கு ஏற்பப் பசுக்களைக் காக்கும் பொருட்டு அவற்றிற்கு இடையூறு செய்யத் தொடங்கிய உங்களுக்கு (மேகங்களுக்கு) எதிராக இடையூறு ஒன்றும் செய்யாது, தம்மையும், தம்மைச் சார்ந்த உயிர்களையும் பாதுகாத்த அளவோடு நின்றருளினர். ஆதலால், அதுகுறித்து நீங்கள் அஞ்ச வேண்டுவதில்லை" என்று கூறும்பொழுது,

"... ... ... ... பண்டுகன் மழைக்காக
கோட்டோ திமமெடுத்தார் சோலை மாமலைக்
கோவலனார்
மாட்டோ திமஞ்சினங் காளுரைப் பீர்மறு வாசகமே"208

என்று கூறுகிறார். ஆநிரையைக் காப்பாற்றிய எம்பெருமான்

தன் அடியவர்களுக்குத் துன்பம் வருகின்றபோதும் காப்பாற்று வான் என்ற கருத்தை வலியுறுத்த இப்புராணம் எடுத்தாளப் பட்டிருக்கின்றது.

மற்றொரு பாசுரம், "ஆக்களிடத்தும் ஆயரிடத்தும் அன்பு கொண்டு, எடுத்துப்பிடித்த கோவர்த்தன மலையாகிய குடையை யுடையவனே! எனது வெவ்விய காதலாகிய மேன்மேற் பரவுகின்ற நெருப்பானது நினது திருத்துழாய் மாலைக்குத் தணியுமே அன்றி நீரினால் தணியாது"[209] என்று தலைவியின் கூற்றாக அமைந் துள்ளது.

இங்கும் ஆநிரைகளை மழையிலிருந்து காப்பாற்றியதுபோல், காதலாகிய வெம்மை நோயிலிருந்து தம்மைக் காப்பாற்றும்படி வேண்டுகிறாள் தலைவி.

தேவேந்திரன் நிரபராதியாயுள்ள சில உயிர்களுக்கு நலிவு செய்தவிடத்து, எம்பெருமான் தன் அருள்கொண்டு பாதுகாத்தான் என்பதை விளக்குவதற்கு இப்புராணக்கூறு எடுத்தாளப்படுகிறது.

மற்றொரு பாசுரத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி தன் தோழியரை நோக்கி, "கோவர்த்தன மலையால் ஆநிரைகளைக் காத்த அழகரது திருவடிகளைக் கழுவியதனால் வருகிற சிலம் பாற்றின் அருகே கொண்டுபோய் என்னை விடுங்கள்"[210] என்று கூறுகின்றாள்.

இம்மூன்று பாடல்களிலும் ஒரே கருத்தை வலியுறுத்த இப்புராணம் எடுத்தாளப்பட்டுள்ளது

திருவரங்கத்தந்தாதியில் நான்கு பாசுரங்களில் இப்புரா ணக்கூறு எடுத்தாளப்பட்டுள்ளது. தமக்கு முத்தி தந்து அருள வேண்டும்போது, "அஞ்சி நடுங்கிய ஆநிரைகளைக் காத்தற் பொருட்டு வெற்பெடுத்தவனே; நிலையற்றஇவ்வுலக வாழ்க்கைக்கு அஞ்சி நீயே தஞ்சமென உன்னைச் சரணடைந்தோம் எமக்குத் தந்தருள்வாய்"[211] எனப் பிள்ளைப்பெருமாளையங்கார் வேண்டு கிறார்.

மேகங்கள் ஆரவாரித்துக் கொண்டு எழுந்த காலத்தில் பசுக்கள் துன்பமடைய அத்துன்பத்தை நீக்கும் பொருட்டுக் கோவர்த்தன கிரியைக் குடையாக எடுத்துப்பிடித்தான் என்பதை ஐயங்கார்,

"ஆதவனந் தரந்தோன் றாமறகன் மழையார்த் தெழுநாள்
ஆதவனந் தரவெற் பெடுத்தா னடியார் பிழைபார்"[212]

என்று கூறுகிறார். பிறப்பு அநாதியாய் வருதலின் ஒருவன் முற்பிறவிகளில் எவ்வளவு கருமம் செய்திருப்பினும், அவன் தன்னைத் திருவரங்கநாதனது அடியவரென்று கருதுதல் மாத்திரஞ் செய்வானாயின் அவனது பழவினையனைத்தும், விளக்குமுன் இருள் போல இருந்த இடம் தெரியாதபடி விரைவில் அழிந்துவிடும் என்ற கருத்தை வலியுறுத்த இப்புராணம் எடுத்தாளப் பட்டுள்ளது.

மற்றொரு பாசுரத்தில் மழையினால் கலக்கமடைந்துள்ளவனான அடியேனுடைய பிறப்பையொழித்துக் கருணைசெய்வாய் என்று வேண்டும்போது,

"சிந்தா குலமுய்யக் குன்றெடுத் தாய்தென் னரங்கசுற்றஞ்
சிந்தா குலமடைந் தேவடி யேன்சென்மந் தீர்த்தருளே"[213]

என்று ஆசிரியர் முறையிடுகிறார்.

மேகங்களினால் பெய்த மழை ஆநிரைகளுக்கு வருத்தத்தை விளைவித்ததோடு, மேகத்தினால் தோன்றிய பேரிடிகளின் ஓசையும் ஆநிரைகளுக்கு அச்சத்தையும் வருத்தத்தையும் விளைவித்தன என்பதை, "கல்மழை யார்த்தெழுநாள் ஆதவனந்தர" என்ற தொடரால் அறியமுடிகின்றது.

"எம்பெருமானே விரோதிகளை அழிப்பதற்கு உன்னிடம் திருவாழி இருக்கின்றதே, அத்திருவாழியை ஏவினால் இந்திரன் தலையறுபடுமே, கல்மழை ஓயுமே, ஆயர்களும் ஆநிரைகளும் இனிது வாழ்ந்திருக்குமே, மலையை எடுத்துச் சிரமப்பட்டிருக்க வேண்டாமே" [214] என்று பொய்கையார் எம்பெருமானது அரிய செயல்களில் ஈடுபட்டுப் பேசுகின்றார்.

மற்றொரு பாசுரத்தில் "கோவர்த்தன மலையை வேரோடு பிடுங்கியெடுத்துச் சொரிகிற மழையை மேலே விழாமல் தடுத்த குணசாலியே! திருக்கோவலூரில் திருவாசலுக்கு வெளியே வெளிப்பட்டுப் போகாமலும் உள்ளே புகாமலும் நடுக்கட்டான இடைகழியிடத்தைப் பொய்கை, பூதம், பேய் என்ற நாங்கள் மூவரும் தங்கியிருந்ததனால் விரும்பிய இடமாகக் கொண்டு நீயும் பிராட்டியும் நின்றருளினாய்"[215] என்று கூறுகின்றார்.

பொய்கையார், பூதத்தார், பேயார் மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதி பாடின தலம் திருக்கோவலூர் என்று கூறப்படும் வரலாற்றுக்குச் சான்றாக இப்பாசுரம் அமைந்துள்ளது.

பொய்கையாழ்வாரைப் போன்று பேயாழ்வாரும் எம்பெருமானது அருட்குணத்தைப் பாராட்டுகின்றார். இடையர்கள் வழக்கமாகத் தமக்கு இடுஞ்சோற்றைக் கண்ணபிரான் விலக்கினான் என்ற காரணத்தால் மேகங்களை ஏவிப் பெருமழைப், பெய்வித்த இந்திரனுடைய தலையை அறுத்தெறிய எவ்வளவு நேரமாகும் கண்ணபிரானுக்கு, அவனுணவைக் கொள்ளை கொண்ட நாம் அவன் உயிரையும் கொள்ளை கொள்ளலாகுமோ என்று எண்ணி, நம்மவர்களை நாம் ஒழுங்காகப் பாதுகாத்துக் கொள்வோம் என்று கருதி மலையைக் குடையாகப் பிடித்தான் என்று காரணம் கூறுகின்றார்[216].

கல்வாரி மழையைக் கோவர்த்தனமலையால் தடுத்து ஆநிரைகளையும், ஆயர்களையும் காத்து, பின்பு அந்த இந்திரனாலேயே கோவிந்தபட்டாபிஷேகம் கொண்டு எளியோர்களைக் காப்பதற்கே விரதம் பூண்டுள்ள பெருமாள், சிறையில் இருக்கும் எங்களுக்கு என்றைக்கு அருள்வாரோ? என்று வினவுகின்றார் நாராயண தீட்சிதர்[217]. பல அந்தாதிகளில் இப்புராணக்கதை கீற்றுக்களாகச் சிதறிக் கிடப்பதையும் காணமுடிகின்றது.

ஆநிரைகளைக் காப்பாற்றிய எம்பெருமான் அடியவர்களுக்குத் துன்பம் வரும்போதும் காப்பாற்றுவான் என்ற கருத்துப் பல்வேறு வகைகளில் ஆசிரியர்களால் விளக்கம் பெறுகின்றது

எம்பெருமான் தாற்பரியம் பேசும் இடங்களிலும் எம்பெருமான் வானோர்க்கும், மண்ணோர்க்கும் வைப்பாக விளங்குகின்றான் என்பதைச் சுட்டிக் காட்டுகின்ற இடங்களிலும், இப் புராணக்கூறு எடுத்தாளப்பட்டுள்ளது.

இறைவனின் திருவடிகளைகளைத் தஞ்சம் அடைந்தவர்கள் அச்சம், கலக்கம், இன்றி இருக்கலாம் என்ற முதலியவை கருத்தும் சுட்டிக் காட்டப்படுகின்றது.

'முன்வினை', 'பிறவி இன்மை' போன்றவைகளும் எடுத்துக் கூறப்படுகின்றன. எம்பெருமானின் அருங்குணத்தின் சிறப்பும் எடுத்துரைக்கப்படுகின்றது. இப்புராணக்கூறு 14 அந்தாதிகளில் 41 இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது[218].

**பூதனையைக் கொன்ற வரலாறு :**

கம்சன் தன்னைக்கொல்லப் பிறந்த தேவகிபுத்திரன் ஒளிந்து வளர்தலை அறிந்து, அக்குழந்தையைத் தேடியுணர்ந்து, கொல்லும்

பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனை என்னும் அரக்கி, பெண் உருவத்தோடு இரவில் திருவாய்ப்பாடிக்கு வந்து, கண்ணனாகிய குழந்தையை எடுத்துத் தனது நஞ்சு பூசிய முலையைக் கொடுத்துக்கொல்ல முயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகின்ற பாவனையில் அவளுயிரையும் உறிஞ்சி இறக்கும்படிச் செய்தான் என்பது புராண வரலாறு[219].

இப்புராணக் கதையின் வாயிலாகப் பூதனையின் கொடிய செயல் விளக்கப்படுவதோடு, யசோதையின் தாய்மைப்பண்பும் வெளிப்படுத்தப்படுகின்றது. இறைவனின் திருக்குணங்களும் பேசப்படுகின்றன.

எம்பெருமானிடத்தில் அந்தரங்கமான அன்பு பூண்டவர்களில் தலையானவள் யசோதை என்பதை வெளியிடக் கருதிய பொய்கையார்.

"பேய்த்தாய் முலைதந்தாள் பேர்ந்திலளால் பேரமர்க்கண்
ஆய்த்தாய் முலைதந்த வாறு[220]"

எனக் குறிப்பிடுகின்றார்.

பூதனை கொடுத்த நஞ்சிற்கு மாற்றான அமுதமாகத்தனது பாலைக் கொடுக்கவேணும் என்ற அன்பு மிகுதியால் யசோதை செய்த இக்காரியம், அவளுடைய பத்தியைப் போன்ற பத்தியுடைய மெய்யன்பர்க்கு நம்பத்தகுந்ததாயிருக்குமே யொழிய இதில் நம்பிக்கைப் பிறப்பது அரிதே என்பதை, "ஆய்த்தாய் பிறர்க்கு முலைதந்த ஆறு ஒருவர்மெய் என்பர் என்[221]" என்று கூறுகிறார்.

பூதத்தாழ்வார் இக்கருத்தை வலியுறுத்தும் வகையில் பால் கொடுத்த பூதனை செத்துக்கிடந்ததைக் கண்டும், பால் கொடுக்கிற நாமும் ஒருகால் செத்துப்போவோமோ: என்று அஞ்சாது யசோதையானவள் பூதனையின் விஷத்திற்கு மாற்றாக உன்னிடத்துப் பரிவுகொண்டு பால் கொடுத்த இந்தப் பெருங்குணத்திற்கு நீ அளந்த கடல் சூழ்ந்த இவ்வுலகம் ஈடாகுமோ? என்று வினவுகின்றார்[222]. இதனால் யசோதைக்குக் கண்ணனிடத்துள்ள அன்பு அளவற்றது என்று குறிப்பிடுகின்றார்.

பேயாழ்வாரும் இக்கருத்தை வலியுறுத்தவே இப்புராணத்தை எடுத்தாளுகின்றார்

"பேய்ச்சிபா லுண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து
ஆய்ச்சி முலைகொடுத்தாள் அஞ்சாதே—வாய்த்த[223]"



திருஊரகம் என்று அழைக்கப்பெறும் காஞ்சிபுரத்தில் அமைந்துள்ள உலகளந்தப் பெருமாள் கோவில்

என்று கூறுகிறார். யசோதை அச்சம் கொள்ளாததற்குரிய காரணத்தையும் அடுத்த அடியில் கூறுகின்றார். 'யசோதையும் பிரானுடைய வடிவழகிலே ஈடுபட்டதனால் உடனே அணுகி வாரி எடுத்தணைக்க விருப்பம் உண்டாயிற்றேயன்றி, அஞ்சி அப்பால் செல்ல மனமுண்டாகவில்லை' என்று கூறுகிறார்.

மற்றொரு பாசுரத்தில் சற்று மாறுபட்ட கோணத்தில் பூதத்தாழ்வார் காண்கிறார்.

நஞ்சு தடவின முலையைக் கொடுத்து உன்னைக்கொல்ல வந்த பூதனை, தாய் போன்று பரிவுகாட்டி உன்னை வாரியெடுத்தணைத்து முலை கொடுத்தாள். நீயும் குழந்தையாகவே பாவனை காட்டி, பாலைச் சுவைத்துண்பவன்போல் அவளுயிரை உறிஞ்சியுண்டாய். அதுமுதலாக உன் தாயான யசோதைக்கு உன்னிடத்தில் நம்பிக்கை உண்டாக இடமில்லாமலே போயிற்று என்பதை, "மகனைத்தாய் தேறாத வண்ணம் திருத்தினாய்[224]' என்று குறிப்பிடுகின்றார்.

பிள்ளைப்பெருமாளையங்கார், உக்கிரமூர்த்தியான விஷுகண்டனைத் தனது திருமேனியில் ஒருபக்கத்தில் ஏற்றுக்கொண்டவனும், வஞ்சனையிற் சிறந்த பூதனை உண்பிக்க விடத்தை அமுதுபோல் உட்கொண்டவனாகிய எம்பெருமான், அவ்வாறே யான்பாடும் இழிவான செய்யுள்களையும் குற்றம்பாராது ஏற்றுக் கொள்வான் என்று கூறுகின்றார்[225].

இப்பாசுரம் குற்றமே குணமாகக் கொள்ளும் எம்பெருமானது திருவருட் சிறப்பைக் கூறுவதாய் அமைந்துள்ளது.

அழிக்கமுடியாத வஞ்சனாகிய கம்சனுடைய உயிருடம்பு அழியவும், அவனால் ஏவப்பட்ட பூதனை அழியவும் காரணமாகிய எம்பெருமான் எழுந்தருளியுள்ள குடந்தை என்னால் நினைக்கப்பட்டுவிட்டது. அதனால் எமனது கரிய வேல் என்மீது வெற்றி கொள்ளாது; உறுதியாக எனக்கு வீட்டுலகம் கிடைத்து விடும் என்பதை,

> "நெறிக்கப் படாவஞ்ச னாவியுங் காய நிலைகுலையப்
> பிறிக்கப்பட் டால்முலை மாதொடு போம்பெரு மாள்
> குடந்தை[226]

என்று கூறுகிறார் குடந்தை அந்தாதி ஆசிரியர். எம்பெருமான் மீது ஆசிரியர் கொண்ட உறுதிப்பாட்டினை இப்பாசுரம் வெளிப்படுத்துகிறது.

தன்னைக்கொல்ல எண்ணி, தாய் வேடம் பூண்டு வந்த பூதனைப் பேயின் முலையைச் சுவைத்து அந்நஞ்சை அமுதாகப் பருகுதலோடு அவளது உயிரையும் உறிஞ்சி உண்டான் என்று அவன் புகழ் கூறுவார்க்கு நரகம் இல்லை என்பதை மகரநெடுங் குழைக்காதர் அந்தாதி,

''நஞ்சு தனம்சுவைத் துண்டான் என்பார்க்கு நரகில்லைய''[227] என்று கூறுகின்றது.

இவ்வாறு ஒவ்வோர் ஆசிரியரும் ஒவ்வொரு கோணத்தில் இப்புராணக்கதையை எடுத்தாண்டிருப்பதைக் காண்கின்றோம். இப்புராணக்கூறு 15 அந்தாதிகளில் 24 இடங்களில் பேசப் படுகின்றது[228]

இப்புராணக்கூறு எடுத்தாளப்படுவதனால் இங்கு இறை யருள் வியந்து போற்றப்படுதலைக் காணமுடிகின்றது. அற்புதச் செயலாகவும் போற்றப்படுகின்றது. இறைவனது அருட்செயல் களை எடுத்துக்கூறுவதின் வாயிலாகப் பத்தியும், மனித வாழ்வில் தன்னம்பிக்கையும் தோன்றி வளர வழிசெய்கின்றது.

**சிவபிரான் பாவத்தை நீக்கிய வரலாறு :**

ஒரு காலத்தில் பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பதைப் பலரும் பார்த்து மயங்குவ தற்கு இடமாயிருக்கிறதென்று கருதி, அவனுடைய சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக் கொண்டதால் கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப் பாவம் தொலையப் பிச்சையெடுக்க வேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று கூற; சிவபெருமான் பலகாலம், பல தலங்களுக்கும் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காது கண்டு, திருமாலிடம் சென்று வணங்கி இரந்தபோது அப்பெருமான், 'அக்ஷயம்' என்று பிச்சையிட, உடனே அது நிறைந்து கையை விட்டு அகன்றது என்பது வரலாறு[229].

முதல் மூன்று திருவந்தாதியிலும் இப்புராணக்கூறு இடம் பெறவில்லை.

திருவரங்கத்தந்தாதியில் மூன்று பாசுரங்களில் இப்புராணம் இடம் பெறுகின்றது. ஒரு பாசுரத்தில், 'பார்வதியென்னும் தெய்வமகளைத் தனது உடம்பில் ஒரு பாதியாகக்கொண்ட

சிவபிரானைத் துயர்த்தீர்தருளியவனை என்னுடன் சேரச் செய்யாள் என்னுடைய தாய்'[230] என்று தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துவதாக அமைந்துள்ளது.

சிவபிரான் பிரமகபாலத்தால் தனக்கு நேர்ந்த சங்கடத்தைத் தீர்த்துக்கொள்ள வேறு வழியில்லாமல் கலங்கி எம்பெருமானைச் சரணமடைய, அப்பெருமான் எளிதில் அதனைத் தீர்த்தருளினான் என்ற வரலாற்று முகத்தால் எம்பெருமானுடைய பரத்துவத்தை வெளியிட்டு, அப்படிப்பட்ட சர்வேசுவரனல்லாமல் வேறு புகலிடமில்லை என்று ஜீவாத்மாக்களின் சரணாகதித் தத்துவத்தை விளக்குமுகமாக இப்பாசுரம் அமைந்துள்ளது.

மற்றொரு பாசுரத்தில், ''யான் என்னும் செருக்கை யறுத்து, சிவனுக்கு அருள்செய்தவனுமாகிய மாயவனுக்குத் தொண்டு செய்யுங்கள். அவ்வாறு செய்தால் கருமமனைத்தும் தொலைதலால், பிரம்மன் கையைக் குவித்து உங்கள் தலையில் மறுபடியும் பிறக்கும்படி எழுதான். ஆகவே உங்கட்கு முத்தி கைகூடும்''[231] எனக்கூறும் முகத்தால் இப்புராணம் எடுத்தாளப்பட்டுள்ளதைக் காண்கின்றோம்.

திருவேங்கடத்தந்தாதியிலும் இதே நோக்கில் இப்புராணம் ஆளப்படுகின்றது. ''சிவபிரான் பிச்சையேற்று வந்து திருவடிகளில் விழுந்து வணங்க அவனது துன்பத்தைப் போக்கியருளிய எம்பெருமான் அடியேனைப் புரந்து அடிக்கீழ் வைக்கும் புண்ணியன்''[232] என்றும் கூறுகிறார் ஆசிரியர்.

''மூலத்தி லத்தனை வெஞ்சாப மாற்றிய முன்னவனே[233] என்ற குடந்தையந்தாதியும் சுட்டிக்காட்டுகின்றது.

''முருகனின் தந்தையாகிய சிவபிரானை இரத்தல் துன்பம் ஒழியுமாறு செய்தருளிய எம்பெருமானை அன்றி வெறொரு தெய்வத்தையும் யான் கருதேன்''[234] என்று அழகரந்தாதி ஆசிரியர் கூறுகிறார்.

மற்றொரு பாசுரத்தில் சிவபிரானுக்கு உண்டாகிய துன்பத்தைத் துடைத்தவனாகிய எம்பெருமான், சிற்றின்பவாசை உடையவனும், பொய்யும், பொறாமையும், கோபமும், திருட்டுத்தனமும், கொல்லுதல் தொழிலும் ஆகிய தீங்குகளை உடையவனுமான என்னைப் பாதுகாத்து அருளமாட்டானா? என்று வினவுகிறார்[235] இப்புராணக்கூறு பிற்கால அந்தாதிகளில் 34 இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது.[236]

இச்சமுதாயத்தில் காணப்படுகின்ற குறைகளைத் தம்மேல் ஏற்றிப்பாடும் மரபினைக் காண்கின்றோம்.

திருமாலின் முழுமுதற் தன்மையை வெளிப்படுத்தும் இடங்களிலும், யான் எனது என்னும் செருக்கை நீக்கவேண்டும் என்று மக்களுக்கு உணர்த்தும் இடங்களிலும் இப்புராணக்கூறு எடுத்தாளப்பட்டுள்ளது. இப்புராணக்கூறு பிற்கால அந்தாதிகளில் மட்டுமே காணப்படுகிறது. சைவ, வைணவ உட்பூசல் எழுந்த காலத்தில் இது உருவாக்கப்பட்டிருக்கலாம்.

**உலகளந்த வரலாறு :**

மகாபலியென்னும் அசுரன் தன் வலிமையால் இந்திரன் முதலிய யாவரையும் வென்று மூன்று உலகங்களையும் தன்வசப் படுத்திச் செருக்குற்றிருந்த பொழுது, தேவர்கள் திருமாலிடம் முறையிட, அப்பெருமான் குள்ளவடிவான வாமன அவதாரங் கொண்டு மகாபலியிடம் சென்று, தவஞ்செய்தற்குத் தன் காலடியில் மூவடிமண் வேண்டிப்பெற்று, திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியாற் பூலோகத்தையும் மற்றோரடியால் அவனது முடியில் அடியைவைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கினான் என்பது வரலாறு[237].

அழகரந்தாதியில் இப்புராணம் நான்கு பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. "முன்பு மாபலி அரசனிடம் மூன்றடி மண்கேட்டு அவனை அழித்தமாயனே! உனது பெருமை கர்ம வசத்தினால் அல்லாமல் உனது சங்கல்ப மாத்திரத்தில் மெய்மையை அறிவார் யாரோ அவரே முத்தி பெறுவார்"[238] என்று அழகரந்தாதி ஆசிரியர் கூறுகிறார்.

மற்றொரு பாசுரத்தில், 'தேவர்கள் அனைவரும் எங்கள் அப்பா! எமைக்காவாய் என வேண்ட, அவ்வேண்டுகோளுக்கு இரங்கி உலகங்களை இரண்டு அடிவைப்புக்களால் அளவிடுமாறு அங்குத் திரிவிக்கிரம மூர்த்தியாய் வளர்ந்தார்[239] என்று கூறப் பட்டுள்ளது.

மக்களைத் தந்தையர் போலத் தேவர்களைத் தேவாதி தேவன் அன்புகொண்டு ஆவனசெய்து பரிபாலித்ததால் அவர்கள் 'அப்பா' என்று விளித்தனர். தன்னை நாடிவந்தவர்களின் துன்பத்தைத் தீர்க்கும் பண்பாளன் எம்பெருமான் என்பதைத் தெளிவுபடுத்த இப்புராணம் எடுத்தாளப்பட்டுள்ளது.

பிரபந்தத் தலைவனது திருவடிகளின் சிறப்புக்களை எடுத்துக் கூறுவதினால் இது 'பாதவகுப்பு' என்னும் பிரபந்தத் துறையாகும். இவ்வரலாற்றால் கொடியவர்களை அடக்குவதற்கு வேண்டிய தந்திரமும் ஆற்றலும் உடையவன் எம்பெருமான் என்பது புலப்படுத்தப்படுகின்றது.

முதல மூன்று திருவந்தாதியில் மட்டும் இப்புராணக்கூறு 48 பாசுரங்களில் இடம்பெறுகின்றது.

"எம்பெருமான் உலகளந்தருளின காலத்திலும் நான் ஏதோ ஓர் உயிரினமாகப் பிறந்தவனே ஒழிய, அன்று நான் விவேகியாயிருந்து அந்தத்திவ்விய சரிதையிலே ஈடுபட்டிருந்தே னாகில் அப்போதே இந்தச் சம்சாரத்தில் நின்று விடுபட்டு முதனாய்ப் போயிருப்பேன். அன்று நான் அறிவிலியாய்க் கிடந்து வாணாளை வீணாகப் போக்கிவிட்டேன்"[240] என்று பொய்கை யார் வருந்துகிறார்.

"நாமே பெரியோம், நம்மிற் பெரியரில்லை என்று எண்ணு கின்றவர்களின் ஆணவமே அவர்களுடைய சிறுமையைக் காட்டி விடும். ஒன்றுந்தெரியாத மூடர்கள் எல்லாமறிந்தவர்கள் போலப் பாவித்து இருந்தார்களாகிலும், அப்படிப்பட்டவர்கள் நன்மை தீமைகளைத் தாங்களுமறியார்கள், பிறர் போதித்தாலும் கேட்டு உணரமாட்டார்கள்" எனக்கூறவந்த பூதத்தாழ்வார்[241] இப் புராணத்தை எடுத்தாள்கிறார்.

உனது மேன்மையைச் சிறிதும் நினையாமல் மாபலியிடத் தில் இரந்து பூமியைப் பெற்றுக்கொண்டாய். மேலும், தனக்கு மேற்பட்டவர் யாருமில்லை என்று ஆணவத்தோடு இருந்த மாபலியினது ஆணவத்தை ஒழித்தாய் என்பதை,

"வகையால் மதியாது மண்கொண்டாய் மற்றும்
..........................................................
...... ................... மாவலிதா னென்னும்
வயிரவழக் கொழித்தாய் மற்று"[242]

என்று கூறுகிறது நான்முகன் திருவந்தாதி. எம்பெருமான் செய் தருளுய காரியங்கள் எல்லாம் அடியார்களுடைய நன்மை கருதியே அன்றித்தனக்காக ஒரு காரியமும் செய்வதில்லை என்பதை உணர்த்த இப்புராணக்கூறு கவிஞர்களால் கையாளப்படுகிறது

ஒரு மனிதனின் மூர்த்தி சிறிதாக இருந்தாலும் அவன் கீர்த்தி பெரியதாக இருக்கமுடியும். ஒரு மனிதனின் ஆற்றலை, அவன் உடல் உருவத்தை வைத்து மதிப்பிடக்கூடாது. அவனுடைய ஆன்ம சக்தியின் வலிமையை வைத்தே மதிப்பிடவேண்டும் என்ற நீதியை உணர்ந்த இப்புராணக்கூறு எடுத்தாளப்பட்டிருக்க வேண்டும். இப்புராண வரலாறு 20 அந்தாதிகளில் 93 இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது[243].

எம்பெருமானின் பெருங்கருணை இங்குப் போற்றப்படுகின்றது. இறைவனின் அளப்பருங் கருணையை உணர்ந்து இப் புராண வரலாற்றினை ஆழ்வார்கள் அனுபவித்துப் பாடுவதை உணரமுடிகின்றது.

**உலகுண்ட வரலாறு :**

பிரமன் முதலிய சகல தேவர்களுமுட்பட யாவும் அழிந்து போகின்ற யுகாந்த காலத்திலே, திருமால் அண்டங்களை எல்லாம் தன் வயிற்றில் அடக்கிக்கொண்டு சிறுகுழந்தை வடிவமாய் ஆதிசேஷன் மேல் யோக நித்திரை செய்தான் என்பது வரலாறு[244].

''அநியாயம் மேலிட்டபடியால், உள்ளே கொண்ட கோபம் வெளியே தெரியும்படி நெருப்பு எழ விழித்துப்பார்த்து இவ்வுலகங்களை எல்லாம் அழித்துப் பின்பு பிரளயத்தில் அழிந்த அனைத்தும் என்னிடத்தில் அடங்கிக்கிடக்கின்றன என்று சொல்லி, வாயைத்திறந்து மார்க்கண்டேய ரிஷிக்குக் காட்டி அருளிய எம்பெருமானைத் தவிர்த்து, வேறொருவனை எனது நாவானது சிறிதும் துதிக்க மாட்டாது''[245] என்கிறார் பொய்கையாழ்வார்.

யுகாந்த காலத்திலே உலகத்தில் அக்கிரமம் விஞ்சும்போது எம்பெருமான் உக்கிரங்கொண்டு இவ்வுலகத்தை அழித்துத் தன்னிடத்தில் அடக்கிக் கொள்வான் என்பதை இப்பாசுரம் வெளிப்படுத்துகின்றது

உலகெலாம் பிரளயத்தில் அழிவதாயிருக்கையில் அவற்றை எல்லாம் வாரியெடுத்து வயிற்றினுள்ளடக்கிச், சிறியதோர் தளிரில் துயின்றவனாதலால், எம்பெருமானுக்கு அடியார்களைக் காத்தருள்வதில் ஆற்றலும் ஆர்வமும் குறைவற்றது என்று உணர்த்தப் படுகின்றது.

''சிவனும் பிரம்மனும் ஆகிய இரு மூர்த்திகளோடும் நிலவுலகத்தையும் மேலுலகங்களையும் பிரளயகாலத்தில் உட்கொண்டருளிய திருவேங்கடமுடையானை எனது மனம் உட்கொண்டது ஆதலால் கொடிய நோய்களே! நீங்கள் என்னை விட்டு நீங்கிச் செல்லுங்கள்''246. என்று வேண்டுகிறார் திருவேங்கடத்தந்தாதி ஆசிரியர்.

''அண்ட கோளங்களை உண்ணும் எம்பெருமானே! அரிதில் வாயினுள் செலுத்தப்பட்ட பாலும் உள்ளே இறங்க மாட்டாமல் அரிய மரணவேதனை உண்டாகும் காலத்தில் உளங் கலங்குவதால் உன் திருவடிகளை நினைக்க வல்லேனல்லேன்; ஆதலால், இப்பொழுதே உன்னை அடைக்கலம் அடைந்தேன்''247 என்று கூறுகிறார் அழகரந்தாதி ஆசிரியர்.

தேவேந்திரனும், அத்தனும், பிரமதேவனும் நாள்தோறும் உன் திருவடியை வணங்கும் வண்ணம், பெரிய உலகத்தை உண்டு உமிழ்ந்தாய் என்பதை.

''மாநில முண்டுமிழ் வாயம லாமணி மாதிர ரிந்திரனும்
ஆனிவ ரத்தனு மாரண னுந்தின மடிதொழ . . . . ''248

என்று திருமழிசைப்பதிற்றுப்பத்தந்தாதி கூறுகிறது. இச்செயல் கண்டு எம்பெருமான் பெருமையைத் தேவர்கள் உணர்ந்தளவு இவ்வுலக மக்கள் உணரவில்லை என்ற கருத்தை இப்பாசுரம் வெளிப்படுத்துகின்றது. இப்புராணக்கூறு 18 அந்தாதிகளில் 60 இடங்களில் எடுத்தாளப் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.249

இங்கும் எம்பெருமானின் பெருங்கருணைப் போற்றப்படுகின்றது. இறைவனின் அளப்பருங் கருணையை உணர்த்தும் இவ் வரலாற்றினை அனுபவித்து நெகிழ்கின்றனர் இவ்வாசிரியர்கள்.

**இராவணனை அழித்த வரலாறு :**

சீதையின் பொருட்டு இராமன் வானரப்படையுடன் சென்று இலங்கையையும் இராவணனையும் அழித்த இராமாயணச் செய்தியை அந்தாதி ஆசிரியர்கள் தம் பாசுரங்களில் எடுத்தாண்டுள்ளதைக் காணமுடிகிறது.

இராவணனையும்இலங்கையையும் அழித்த வரலாற்றினைப் பல அந்தாதி ஆசிரியர்கள் எடுத்தாண்டுள்ளனர். முதல் திருவந்தாதியில் இச்செய்தி எடுத்தாளப்படவில்லை. இரண்டாம் திருவந்தாதியில்,

''தோளிரண் டெட்டேழும் மூன்றும் முடியனைத்தும்
தாளிரண்டும்வீழச் சரந்துரந்தான் — தாளிரண்டும்
ஆர் தொழுவார் பாத மலைதொழு தன்றேஎன்
சீர்கெழுதோள் செய்யுமுஞ் சிறப்பு''250

என்ற பாசுரத்தில் இராவணனை அழித்த விதம் விளக்கப் பட்டுள்ளது. இருபது தோள்களும் பத்துத்தலைகளும் இரண்டு கால்களும் முடியும்படி அம்புகளைச் செலுத்தின. எம்பெரு மானுடைய இரண்டு திருவடிகளையும் தொழுகின்றவர்கள் எவரோ அவர்களது திருவடிகளை நான் வணங்குவேன் என்று கூறுகின்றார்.

எம்பெருமானிடத்து அன்பு செய்வதைக் காட்டிலும் அடிய வர்களிடத்து அன்பு செய்வதே சிறந்தது என்னும் கொள்கையை இப்பாசுரம் விளக்குகின்றது.

இராவனுடைய மந்திரமலை போன்ற இருபது தோள் களையும், பத்துத்தலைகளையும் ஆகாயத்தே அறுத்திட்டவனான திருவேங்கடமுடையானிடத்துட் பத்திப் பேரன்புடையவர்களான அடியவர்களுக்குப் பரமபதம் சேய்மையிலுள்ளது அல்ல என்று கூறுகின்றார் திருவேங்கடத்தந்தாதி ஆசிரியர்251.

இராவனது தோள்களும் தலைகளும் ஆகாயத்தைப் பரவி வளர்ந்துள்ளன. ஆதலால் அவற்றை அந்தரத்தே அறுத்தோன் என்று கூறுகிறார்.

''இலங்கையிலுள்ள அரக்கர்கள் அழியும்படி சங்கும் ஆழி யும் விட்டு, அம்பையும் வில்லையும் கைகளில் கொண்டவனே! ஆசையென்று சொல்லப் படுகின்ற விலங்கைப்பூட்டிப் பிறப்பாகிய சிறையில் அடைக்காதே''252 என்று வேண்டுகிறார் திருவரங்கத் தந்தாதி ஆசிரியர்.

இராமவதாரத்தில் திருமால் தனது சங்கு, சக்கரங்களை விட்டு வில்லைக் கையில் ஏந்தினார் என்பது வெளிப்படைப் பொருள். 'சங்கும் ஆழியும் விட்டு' என்ற தொடருக்கு இராவணனை அழிக்கும் பொருட்டு வனவாசம் செல்லுங்காலத் தில் சங்கு சக்கர அம்சமான பரத சத்ருக்கனரை உடன்கொண்டு செல்லாது நகரத்து விட்டமையே உள்ளுறையாகக் கருதலாம்.

''கோதண்டத்தைக் கையிலேந்தி இலங்காபுரியிலுள்ள மலை போலும் வலிய பகைவர்களான இராவணனின் அரக்கர்களை

அழித்திட்டவனே! எனது ஐம்பொறிகளும் உன்னிடத்தேயன்றிப் பிறவிடங்களில் அனுபவிக்கிற பொருள்களை அனுபவிப்பதை நீக்கியருள வேண்டும்''253 என்று விண்ணப்பம் செய்கிறார் அழகர் அந்தாதி ஆசிரியர்.

பிரபந்தத்தின் தொடக்கத்திலேயே இவ்வரலாற்றைக் கூறு முகத்தான் தமது உள்ளக்கொள்கையே எம்பெருமானை விளித்துக் கூறுவதாக இப்பாசுரம் அமைந்துள்ளது.

இராவணன் என்னும் அரக்கனைக் கொன்ற சீரனென்னும் திருநாமம் பூண்டவனே, உன் அறிவையும் ஆற்றலையும் எனக்கும் தருவாய் என வேண்டுகிறபோது,

'' வெற்றி வீடணனை யன்பிலாண் டருளி
வெய்ய நெஞ்சட லிராவணன்
செற்றி டச்செரு விளைத்ததிண் டிறல்கொள்
சீதராவடியர் பதின்மரும்''254

என்று கூறுகிறார் திருமழிசைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர். இலங்கையைத் தலைநகரமாகக்கொண்டு ஆண்ட இராவணனின் பத்துத்தலைகளும், அவற்றின்மீது அணிந்துள்ள இரத்தினங்கள் பதித்த கிரீடங்களும் பனங்குலைகள் போல் உருண்டு சிதறும்படி அம்பைச் செலுத்தினவனே! எனக்கு, நீயே தாயும் தந்தையுமாய் விளங்குகின்றாய் என்பதை,

'' ... ... ... ... ... ... ... இலங்காபுரியோன்
பத்துரு வங்கொண்ட சென்னிகள் மீது பதித்தமுடிக்
கொத்துரு ளக்கணை தொட்டாய் மகரக்குழைக்
கொண்டலே''255

என்று கூறுகிறார் நாராயணதீட்சிதர்.

வாடிய பயிர்போன்ற எங்களுக்கு உன் அருளிலேயே நோக்கம் என்னும் கருத்தில் 'கொண்டலே' என்றும், சீதையைச் சிறைமீட்டுக் கைக்கொண்டவன் என்னும் கருத்தில் 'கணை தொட்டாய்' என்றும் அழைத்து அருள்புரியும்படி வேண்டுகிறார். இப்புராணக்கூறு 16 அந்தாதிகளில் 64 இடங்களில் எடுத்தாளப் பட்டுள்ளது256.

மனிதனிடம் தோன்றும் ஆணவம், அகம்பாவம், வெறியுணர்ச்சி ஆகிய அசுர சக்திகளை வீழ்த்தி, அவற்றிலிருந்து மனிதனைக் காக்கும் பகவானின் முயற்சியினை விளக்குமுகத் தான் இப்புராணக்கூறு ஆளப்படுகிறது

**கனிசாய கன்றெறிந்த வரலாறு :**

கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் கபிதாசுரன் விளா மரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ் வரும்பொழுது மேல் விழுந்து கொல்வதாக எண்ணிநிற்க, அதனை அறிந்து கிருஷ்ண பகவானே தன்னை முட்டிக்கொல்லும் பொருட்டுக் கன்றின் வடிவம் கொண்டுவந்த கபிதாசாசுரனின் பின் இரண்டு கடல் களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின் மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுர வடிவத்துடன் விழுந்து இறந் தனர் என்பது புராண வரலாறு[257].

"இனியார் புகுவார் எழுநரக வாசல்
முனியாது மூரித்தாள் கோமின் — கனிசாய்க்
கன்றெறிந்த தோளான் கனைகழலே காண்பதற்கு
நன்கறிந்த நாவலஞ்சூழ் நாடு"[258]

என்று முதல் திருவந்தாதி கூறுகிறது. ஆசிரியரின் உறுதியான நம்பிக்கையை இப்பாசுரத்தின் வாயிலாக உணர முடிகிறது மக்களை எல்லாம் தம் அறிவுரையினால் திருத்திவிடலாம் என்று உறுதியாக எண்ணுகிறார். அப்படி எல்லோரும் திருந்தி எம் பெருமான் திருவடிக்கு ஆட்பட்டுவிட்டால் நரகத்திற்குச் செல்ல ஆள்கிடையாது எனக்கருதி நரகத்தின் வாயில் காவலரை நோக்கி "நீங்கள் நரக வாசலை அடைத்துவிட்டு ஓடிப்போகலாம்; இனி உங்கள் நாட்டிற்கு அகதிகளாக வருவார்கள் யாரும் இல்லை" என்று கூறுகிறார்.

எம்பெருமானை வணங்குகின்றவர்களைத் துயர்களில் இருந்து காப்பான் என்பதை உணர்த்த இப்புராணத்தை எடுத் தாண்டிருக்கலாம்.

எம்பெருமானே! தேவர்களுக்காக நீ படாதன பட்டு உடம்பு நோவக் காரியங்களைச் செய்தாய்; எனக்காக அப்படி ஒரு காரியமும் செய்ய வேண்டாம். என்னால் தாங்க முடியாத படி வளர்ந்து செல்கின்ற காதலை அடக்கித் தந்தாயானால் இதுவேநீ எனக்குச்செய்யும் பேருதவியாகும் எனக் கூறும்பொழுது,

"விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே என்றன்
அளவன்றால் யானுடைய வன்பு"[259]

என்று வேண்டுகிறார் பூதத்தாழ்வார்.

பகவத்விஷயத்தில் தாம் கொண்டுள்ள அளவு கடந்த அன்பை வெளிப்படுத்தவும், இப்பிரபந்தம் கற்போர்க்கும் இத்

நகைய அன்பு தோன்ற வேண்டும் என்ற எண்ணத்திலும் இப்புராணத்தை எடுத்தாண்டிருக்கலாம். திருவேங்கடத்தின் சிறப்பைக் கூறவந்த பேயாழ்வார்,

"களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே மேனாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு"[260]

என்று கூறுகிறார்.

எம்பெருமானின் திருத்தோள்களின் சிறப்பைக் கூறவந்த திருக்கடன் மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆசிரியர்,

"நீத யைக்குயி றிப்பு ரந்தரு விகரி லாக்கடன் மல்லையாய்
கோத ளத்தையெ றிந்து வெள்ளிற் குறும்ப லத்தையு
குத்திடும்"[261]

என்று கூறுகிறார். ஆசிரியர் திருமாலிடத்துக்கொண்ட அன்பின் பெருமையை இப்பாசுரம் உணர்த்துகிறது. இப்புராணக்கூறு 12 ஆசிரியர்களால் 17 இடங்களில் பேசப்படுகின்றது[262].

'முள்ளைக்கொண்டு முள்ளைக்களைவது, என்ற கருத்து இப்புராணத்தின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது.

சான்றோரைப் பாதுகாத்தலும், கொடியவராகிய தீயோரைக் கடிந்து திருத்தி நல்வழிபடுத்தலும், தருமநெறியை உலகில் நிலைநாட்டுதலும் ஆகிய இச்செயல்களைச் செய்வதே எம்பெருமானின் அருட்டிறன் என்பதை உணர்த்த இப்புராணக்கதை எடுத்தாளப்பட்டுள்ளதாகக் கருதலாம்.

**மருதிடை சென்று முறித்த வரலாறு :**

யசோதை ஒருநாள் கண்ணனைக் கயிற்றினால் கட்டி ஓர் உரலில் பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு அங்கிருந்து இரட்டையாக நின்றிருந்த மருத மரத்தின் நடுவில் எழுந்தருளியபொழுது, அம்மரங்கள் இரண்டும் முறிந்து விழுந்த அளவிலே முன்பு நாரதர் சாபத்தால் அம்மரங்களாய் மாறிய நளகாபரன், மணிக்கீரீவன் என்னும் குபேரபுத்திரர் இருவரும் சாபம் தீர்ந்தனர் என்பது வரலாறு[263].

மரங்களாய் நின்ற குபேரபுத்திரர்களைச் சாபத்தில் நின்று விடுவித்தும், அம்மரங்களில் ஆவேசித்துக் கிடந்த அசுரர்களைக் கொன்றொழித்த திறனும் கூறப்படுகின்றது.

செயற்கரிய செயல்களைச் செய்யவல்லவன் எம்பெருமான் என்பதை உணர்த்த இப்புராணக்கூறு எடுத்தாளப்பட்டுள்ளது.

மாமருதினூடுபோய், அணிமருதும் சாய்த்தான், மருதிடை போய், பிணைமருதம் ஊடுபோய், தனத்தன் புத்திரன் சாபம் தவிர்த்த மருதிடை தவழ்ந்து, மருதஞ் சென்ற போன்ற தொடர் களால் இப்புராணக்கூறு நான்கு ஆசிரியர்களால் ஒன்பது இடங் களில் விளக்கப்பட்டுள்ளது. 264

**நமுசியை வதைத்த வரலாறு :**

மாபலியின் புத்திரரான நமுசி, திருமாலின் திருவடியைப் பிடித்துக் கொண்டு, நீ செய்வது கபடமன்றோ, என் தந்தை உன்னுடைய சூழ்ச்சி தெரியாமல் உன் வஞ்சனையால் அகப் பட்டுக்கொண்டான். நீ முன்பு யாசித்தபோதிருந்த வடிவத்தைக் கொண்டு அளந்துகொண்டு போ என்று கூற எம்பெருமான் உடலென்பது எப்போதும் ஒரே தன்மையாக இருக்கமாட்டாது, விகாரப்படுந் தன்மையது காண், என்று கூறியும் திருவடியின் பிடியை விடாமல் உறுதியாயிருந்த நமுசியைத் திருவடியினால் ஆகாயத்திலே கொண்டுபோய்ச் சுழன்று விழும்படிச் செய்தான் என்பது வரலாறு 265

இப்புராணக்கதையை முதலாழ்வார்கள் மட்டும் எடுத் தாண்டுள்ளார்கள். 5 பாசுரங்களில் மட்டும் இப்புராணக்கூறு இடம்பெறுகின்றது. 266

**விடையேழும் அடக்கிய வரலாறு :**

கண்ணன் நப்பினைப் பிராட்டியைத் திருமணஞ்செய்து கொள்வதற்காக அவன் தந்தை குறித்தபடி, யாவருக்கும் அடங் காத ஏழு எருதுகளையும் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவினான் என்பது வரலாறு. 267

சராசரங்கள் யாவும் எம்பெருமானுடைய படைப்புஎன்றும், இப்படி உலகங்களை எல்லாம் படைத்ததோடு நின்றுவிடாமல் உலகில் உண்டாகின்ற களைகளைப் பிடுங்கிப் பாதுகாப்பதும் எம்பெருமானே என்பதை இப்புராணம்கொண்டு விளக்குகிறார் பொய்கையாழ்வார். 268

"நப்பின்னைப் பிராட்டியை மணம் புரிவதற்கு இடையூறா யிருந்த ஏழ்விடைகளையும் வென்றடர்த்து அவளை அடைந்த பெருமான் அவ்விதம் நம்மோடு சேர்வதற்கும் பிரதிபந்தமாயுள்ள பாவங்களைத் தொலைத்து நம்மையும் மணந்தருள்வன் என்று கருதி அவன் திருவடிகளில் தலைசாய்த்தேன் என்று கூறுகிறார் பூதத்தாழ்வார்.[269]

ஏனையை உணர்வுகளிலும் பலமடங்கு மேம்பட்ட எம் பிரான் அருளால் உண்டான மெய்யுணர்வை உடையவர், மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் என்பதை, நான்முகன் திருவந்தாதி,

"விடை அடர்ந்த பத்தி உழவன் பழம்புனத்து வித்தும் இடல் வேண்டும் கொலோ"[270] என்று கூறுகிறது. தன்னிடத்தில் பத்தி ஏற்படுத்துவதற்கு மக்கள் என்ற நிலத்தை எம்பெருமான் உழுகின்றான் என்று கூறுகின்றார். வள்ளுவர் கையாண்ட 'வித்து மிடல்வேண்டும் கொல்லோ, என்ற தொடரை இவ்வாசிரியர் எடுத்தாண்டுள்ளதைக் காணமுடிகின்றது. வட நூல்களில் காண முடியாத இப்புராணக் கூறு தமிழ் மண்ணிற்கே உரியது என்பது நினையத்தகும். இப்புராணக்கூறு 10 அந்தாதிகளில் 15 இடங் களில் எடுத்தாளப்பட்டுள்ளது[271].

வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியப்பெருநோக்கினை எல்லை வகுத்துக்காட்டுவதாக இப்புராணக்கதை அமைந்துள்ளது.

**புள்வாய் கீண்ட வரலாறு :**

பகாசுரன் என்னும் அசுரன் கொக்கு வடிவம் கொண்டு சென்று யமுனைக்கரையில் கண்ணனை விழுங்கிட, அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல எரிக்கவே, அவன் பொறுக்க மாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் கொன்று விட எண்ணும்போது, கண்ணன் அவன் வாய் அலகுகளை இரு கைகளிலும் பற்றிக் கிழித்து அழித்தான் என்பது வரலாறு[272]. இந்நிகழ்ச்சியினை,

"அரவ மடல்வேழ மான்குருந்தம் புள்வாய்
குரவை குடமுலைமற் குன்றம்"[273]

என்று பொய்கையாழ்வாரும்,

''புள்வாய் பிளந்த புயலே யுனைக்கச்சிக்
கள்வாவென் றோதுவதென் கண்டு'' 274

என்று பிள்ளைப் பெருமாளையங்காரும் எடுத்தாளுகின்றனர். இப்புராணக்கூறு 6 அந்தாதிகளில் 9 பாசுரங்களில் எடுத்தாளப் பட்டுள்ளது.

புள்வாய் கீண்டானும், புள்வாய் கீண்டு, புள்வாய் பிளந்து, வல்லாய்ப் புள்ளையே மடித்து என்றதொடர்களால் இப்புராணக் கூறு விளக்கப்படுகிறது[275]. ஊனக்கண்ணால் இறை வீற்றிருக்கும் மூர்த்தங்களைக் கண்டுகளித்துத் தம் ஞானக்கண் கொண்டு அவற்றை இறைவலிமையாலே இன்பமயமாக்குகின்றனர் இவ் வாசிரியர்கள்.

**சூரியன் மறைந்த வரலாறு**

பாரதயுத்தத்தில் அபிமன்யுவைச் சைந்தன் கொன்றுவிட, தன் மகனைக்கொன்ற சைந்தனை மறுநாள் சூரியன் அடைவதற்குள் தான் கொல்லாவிடின் தீக்குளித்து உயிர் விடுவதாக அருச்சுனன் சபதம் செய்ய, அதனை அறிந்த பகைவர்கள் சைந்தனை நிலவறையில் மறைத்து வைக்க அருச்சுனனது சபதம் பொய்த்துவிடுமோ என்று எண்ணிய கண்ணன் சூரியன் மறைவதற்குச்சில நாழிகைகளுக்கு முன் தன் சக்கரத்தால் மறைத்து விட அருக்சுனன் அக்கினிப் பிரவேசஞ்செய்தலைக் காண சைந்தன் வந்து நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிடவே பகலாய் இருந்ததனால் உடனே அருச்சுனன் சைந்தனைத் தலை துணித்தான் என்பது செய்தி[276].

முதல் திருவந்தாதியில் பொய்கையார் எம்பெருமானைப் பார்த்து ''வானத்து இயங்கும் எறிகதிரோன் தன்னை அதர் ஆழியால் மறைத்தது ஏன்?''277 என்று வினவுகிறார்.

சூரியனைச் சக்கரத்தால் மறைத்தவனைக் கருதினவர்க்குப் பிரம்மனும், சிவனும்,இந்திரனும் அறியமாட்டாத பரமபதத்தைக் கொடுத்துவிடும் என்கிறார்[278]. திருவரங்கத்தந்தாதி ஆசிரியர் சூரியனைமறைத்து இருளையுண்டாக்கிய சக்கராயுதத்தை உடைய எம்பெருமான் வாழும் திருமாலிருஞ் சோலையில், கல்வியறிவு இல்லாத மூடர்கள் வந்தாலும் அப்பொழுதே அவர்கள் முத்தி அடைவார்கள் என்று கூறுகிறார் அழகரந்தாதி ஆசிரியர்[279].

இப்புராண வரலாற்றை,

''சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள்கண் கொடுக்க பருதி ஞாலத்து
இடும்பையகலா பருவரல் தீரக் கடுத்திறல்
அஞ்சனவுருவின் தந்து நிறுத்தாங்கு''280

என்று புறநானூறும் உவமை வாயிலாக எடுத்தாண்டுள்ளது ஈண்டு நினையத்தகும். தான் போரில் ஆயுதம் எடுப்பதில்லை என்று சத்தியம் செய்துகொடுத்த கண்ணன், அர்ச்சுனனைக் காப்ப தற்காகவும், சைந்தனை அழிப்பதற்காகவும் தன் ஆழியைப் பயன் படுத்தியது முறைதானா? என்ற வினா இங்குத்தோன்றக் கூடும்.

தீயோரை அழித்து நல்லோரைக் காக்கும் அறப்பணியில் கண்ணன் முனைந்து நின்றமையே காரணம் எனலாம்.

உபபாண்டவரை இழந்து வருந்திய திரௌபதிக்குக் கண்ணன் ஆறுதல் கூறித் தேற்றியதொழுது, பாண்டவர் வாழ் வதற்குத் தான் செய்த தந்திரங்கள் ஒரு கோடி என்றும் அவை உரைக்கு அடங்கா என்றும் குறிப்பிடுகிறார்281.

தந்திரங்கள் கூரிய அறிவின் வெளிப்பாடுகளே, எனவே மனித சூழ்ச்சிகளைச் சிதறச் செய்யும் சிறந்த தந்திரங்கள் நுண்ணிய அறிவின் திறனே. கண்ணன் கடவுளின் அவதாரம் ஆகையால் சாதாரண மனிதனை விட அவன் நுண்ணிய கூரிய அறிவுத்திறமை உடையவனாய் இருத்தல் இயல்பு.

கண்ணனின் அரசியல் தத்துவம் பற்றிப் பேசும் ஆய்வாளர் சதுர்புஜஸகாய், ''அந்தணர் அரசர் ஆகியோருக்கு வகுக்கப்பட்ட நெறிமுறைகள் முற்றிலும் வேறானவை; வீரக்குடிப்பிறந்தவன் தன் பகைவனை நேர்மைக்குப் புறம்பான வழியில் கூடத்தண்டித் தலும் கொல்லுதலும் அவனுடைய உடைமைகளைப் பறித்தலும் கூடும். ஆனால், தனக்காக இவற்றைச் செய்தல் கூடாது, பிறர்க் காக மட்டும் செய்யலாம் என்பது வற்புறுத்தப்படுகிறது282 என்று புதிய விளக்கத்தைக் கற்பிப்பதும் கவனத்திற்குரியது.

கண்ணன் வீரக்குடியில் தோன்றியவன், அவன் செயல்கள் அவனுக்காகச் செய்யப்பட்டவை அல்ல. எனவே, அவனது இச் செயல் தவறானது அன்று எனக் கொள்ளலாம். இப்புராணக்கூறு 9 ஆசிரியர்களால் 14 பாசுரங்களில் பேசப்பட்டுள்ளது283.

**ஆலிலையில் கண்துயின்ற வரலாறு :**

பிரம்மன் முதலிய சகல தேவர்களும் உட்பட யாவும் அழிந்து போகின்ற யுகாந்த காலத்திலே திருமால் அண்டங்களை எல்லாம் தன்வயிற்றில் வைத்து அடக்கிக்கொண்டு சிறுகுழந்தை வடிவாய் ஆதிசேடனது அம்சமானதோர் ஆலிலையின் மீது பள்ளிகொண்டு யோகநித்திரை செய்தருள்கின்றனன் என்பது புராணவரலாறு [284].

சிவனும், பிரம்மனும், இந்திரனும் மற்றெவரும் பிறவி என்னும் நோய்க்கு மருந்து அறிவார் இல்லை. இவ்வுலக மக்களைக் காத்தல்பொருட்டு உலகுண்டு ஆலிலையில் பள்ளி கொண்ட எம்பெருமானால் மட்டும் முடியும் என்று கூறுகிறார் அழகர் அந்தாதி ஆசிரியர்[285].

திருவேங்கடத்தந்தாதி ஆசிரியரும் இக்கருத்தையே வலி யுறுத்துகின்றார்[286]. ஆலமரத்தை மரங்களுள் உயர்ந்ததாகக் கருதுகின்றோம். மக்களுக்கு அநேக வகையில் அம்மரம் உதவு கின்றது. ஆலம்விதை அணு அளவு இருந்தாலும் அதிலிருந்து பிரம்மாண்டமான மரம் தோன்றுகின்றது. இறைவன் அணுவுக் குள் அணுவாகவும் பிரம்மாண்டமாகவும் தோன்றுகின்றான். இரண்டிலும் உள்ளது ஒரே அகண்டபொருள் என்னும் தத்து வத்தை இப்புராணம் விளக்குகின்றது.

ஆலிலைக்குத் தனிச்சிறப்பு உண்டு. அது மிகப்பசுமை பொருந்தியது. மரத்திலிருந்து கீழே உதிர்ந்து விடினும், சிறிது தண்ணீரை அதன்மேல் தெளித்தால் மீண்டும் பசுமைபெறும் பிற சருகுகளைப்போல நொறுங்குவதில்லை. இறைவன் என்றும் பசுமை உள்ளவராகவும், பிறப்பு இறப்புகளைக் கடந்தவராகவும் இருக்கிறார் என்ற உண்மையை இந்த ஆலிலை மூலம் உணரலாம். இப்புராணக்கூறு நான்கு அந்தாதி ஆசிரியர்களால் 8 பாசுரங் களில் எடுத்தாளப்பட்டுள்ளது[287].

**கடல்கடைந்த வரலாறு :**

துர்வாச மாமுனிவரின் சாபத்தால் தேவேந்திரனின் செல்வம் எல்லாம் கடலில் மறைய, இந்திரன் தேவர்களுடன் திருமாலைச் சரணடைந்து வேண்ட 4 திருமால் அசுரர்களின் துணைக்கொண்டு மந்திரமலையை மத்தாக, வாசுகிப் பாம்பைக் கடை கயிறாகக்கொண்டு பாற்கடலைக் கடைந்தவர் என்பது வரலாறு[288].



திருஅரிமேய விண்ணகரம் என்று அழைக்கப்பெறும் திருநாங்கூரில் அமைந்துள்ள
குடமாடு கூத்தர் கோவில்

பாற்கடலைக்கடைந்து அமுதம் எடுக்க ஆதாரமாக இருந்தது பகவானின் கூர்ம அவதாரம். பாற்கடலைக்கடையும் பொழுது அமுதமும் தோன்றியது, நஞ்சும் தோன்றியது. கொடிய நஞ்சைத் தவிர்த்து அமுதத்தை உண்ணும் வாய்ப்பு தேவர்களுக்குக் கிடைத்தது. அசுரர்கள் புலனடக்கந் தவறிய காரணத்தால் அமுதத்தில் பங்குபெறும் வாய்ப்பை இழந்தனர். தங்கள் அழிவிற்குத் தாங்களே வழிவகுத்துக்கொண்டனர். இப் புராணக்கதையை எடுத்தாள்வதின் மூலம் மக்களுக்குப்புலனடக் கத்தின் இன்றியமையாமை உணர்த்தப்படுகின்றது. இப்புராணக் கூறு 12 ஆசிரியர்களால் 22 பாசுரங்களில் எடுத்தாளப் பட்டுள்ளது[289].

இவையன்றிக் காளியார்த்தன நடனம் புரிந்த வரலாறு, சிவபெருமானுக்கு உடம்பில் இடம் அளித்த வரலாறு, கம்சனை அழித்த வரலாறு, மராமரம் ஏழினை அழித்த வரலாறு, பரம பதத்தினை கண்டாகர்ணனுக்கு அருளிய வரலாறு, கேசி என்னும் அசுரனை அழித்த வரலாறு, வீடணனுக்கு முடிசூட்டிய வரலாறு, சிவன் சந்திரனைப் பிறையில் சூடிய வரலாறு, சுக்கிரீவனுக்கு முடிசூட்டிய வரலாறு, சவரிக்கு அருளிய வரலாறு, பரசுராமன் வரலாறு, அர்ச்சுனனுக்கு அருளிய வரலாறு, சாரதியான வர லாறு, கால்மாறி ஆடிய வரலாறு, சங்கு எடுத்து ஊதிய வர லாறு. சிவன் பொருட்டுத் தன் மார்பைக் கிழித்த வரலாறு இராவணனின் மாயவடிவத்தை நான்முகனுக்கு உணர்த்திய வர லாறு, திரௌபதிக்கு அருள்புரிந்த வரலாறு. சுக்கிரீவன் கண் ணைத்துரும்பால் கிளறிய வரலாறு, காண்டவவனம் எரித்த வரலாறு, அணைகட்டிய வரலாறு, புட்கரன் முனிக்கு அருளிய வரலாறு, வேதவரனை அழித்த வரலாறு, கங்கை தோன்றிய வரலாறு, தூது சென்ற வரலாறு, அகலிகையின் சாபவிமோசன வரலாறு, காடு சென்ற வரலாறு, மாரீசன் வதை, சூர்ப்பனகை வதை, கரனைக்கொன்ற வரலாறு, கபந்தனைக் கொன்ற வர லாறு, தேனுகாசுரனை வதைத்த வரலாறு, விரதனை அழித்த வரலாறு, பாணாசுரனை அழித்த வரலாறு, மல்லரைக்கொன்ற வரலாறு, இரணியனை அழித்த வரலாறு ஆகிய வரலாறுகளும் அந்தாதிகளில் இடம்பெறுகின்றன.

இவற்றில் காளியனென்னும் நாகத்தின் மீது நடனம் புரிந்த நிகழ்ச்சி 10 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சி 21 பாசுரங்களில் இடம்பெற்றுள்ளது[290]. சிவபெரு

மானுக்குத் தன் உடம்பில் இடமளித்த நிகழ்ச்சி 6 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 8 பாசுரங்களில் இடம்பெறுகின்றது[291].

சகடமுறித்த வரலாறு 6 ஆசிரியர்களால் எடுத்தாளப் பட்டுள்ளது. 10 பாசுரங்களில் இவ்வரலாறு இடம்பெறுகின்றது[292]. கம்சனை அழித்த செய்தி 7 ஆசிரியர்களால் எடுத்தாளப் பட்டுள்ளது. 9 பாசுரங்களில் இடம் பெறுகின்றது[293]. பரம பதத்தைக் கண்டாகசுரனுக்கு அருளிய வரலாறு திருவேங்கடத் தந்தாதியில் மட்டும் இடம் பெற்றுள்ளது[294].

கேசி என்னும் அசுரனை அழித்த வரலாறு 11 ஆசிரியர் களால் எடுத்தாளப்படுகின்றது. 15 பாசுரங்களில் இவ்வரலாறு இடம்பெறுகின்றது[295].

வீடணனுக்கு முடிசூட்டிய வரலாறு 8 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 9 பாசுரங்களில் இவ்வரலாறு இடம் பெற்றுள்ளது[296].

சிவன் சந்திரனைச்சூடிய வரலாறு மூன்று அந்தாதிகளில் 5 இடங்களில் மட்டும் காணப்படுகின்றது. [297]
சுக்கிரீவனுக்கு முடிசூட்டிய வரலாறு ஏழு அந்தாதிகளில் எட்டு இடங்களில் மட்டும் இடம்பெறுகிறது. [298]

சேதுபந்தனம் செய்த வரலாறு இரண்டு ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 3 பாசுரங்களில் இவ்வரலாறு இடம் பெறுகின்றது.[299]

சவரிக்கு அருளிய வரலாறு திருவேங்கடத்தந்தாதியில் மட்டும் இடம்பெறுகிறது.[300]

பரசுராமன் வரலாறு திருவேங்கடத்தந்தாதியில் ஒரு பாசுரத்திலும் குடந்தை அந்தாதியில் ஒரு பாசுரத்திலும் மட்டும் இடம் பெறுகிறது.[301]

அர்ச்சுனனுக்கு அருள் புரிந்த வரலாறு திருவேங்கடத்து அந்தாதியில் ஒரு பாசுரத்திலும், அரங்கத்திதழகலந்தாதியில் ஒரு பாசுரத்திலும் இடம் பெறுகின்றது.[302] சாரதியான வரலாறு 4 நூல்களில் 5 பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது[303] கால்மாறி நடித்த வரலாறு 2 நூல்களில் இடம் பெறுகின்றது. 4 பாசுரங் களில் எடுத்தாளப்பட்டுள்ளது.[304] சங்கெடுத்து ஊதிய நிகழ்ச்சி 4 நூல்களில் 5 பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது.[305]

இராவணனின் மாயவடிவத்தை நான்முகனுக்கு உணர்த்திய வரலாறு 4 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 4 பாசுரங்களில் இவ்வரலாறு இடம் பெறுகிறது[306]. திரௌபதிக்கு அருள் புரிந்த நிகழ்ச்சி 9 நூல்களில் 12 பாசுரங்களில் எடுத்தாளப் பட்டுள்ளது.[307]

கண்டாகர்ணன் வரலாறு அழகரந்தாதியில் ஒரு பாசுரத்தில் மட்டும் இடம் பெறுகின்றது[308].

தேவவரனை அழித்த வரலாறு திருக்கடன் மல்லை பதிற்றுப் பத்தந்தாதியில் 19வது பாசுரத்தில் மட்டும் காணப்படுகின்றது[309].

தூது சென்ற நிகழ்ச்சி 8 அந்தாதிகளில் காணப்படுகின்றது. 11 பாசுரங்களில் இந்நிகழ்ச்சி எடுத்தாளப்பட்டுள்ளது[310].

அகலிகையின் சாபவிமோசன வரலாறு 2 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுவ்ளது. 4 பாசுரங்களில் இவ்வரலாறு இடம் பெறுகின்ர்து[311].

காடு சென்ற வரலாறு 3 நூல்களில் காணப்படுகின்றது. 4 பாசுரங்களில் இவ்வரலாறு எடுத்தாளப்படுகின்றது[312].

மாரீசன் வதை 5 நூல்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. 9 பாசுரங்களில் இந்நிகழ்ச்சி இடம்பெறுகின்றது[313].

சூர்ப்பணகைவதை 2 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 4 பாசுரங்களில் இடம்பெறுகின்றது[314].

வாணாசுரனை அழித்த வரலாறு 3 நூல்களில் 6 பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது[315].

தேனுகாசுரனைக் கொன்ற வரலாறு 5 நூல்களில் 9 பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது[316].

விராதனை அழித்த வரலாறு இரண்டு நூல்களில் மட்டும் இடம் பெறுகின்றது.[317]

பணாசுரனை அழித்த வரலாறு 3 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 5 பாசுரங்களில் இவ்வரலாறு இடம்பெறுகின்றது[318]. மல்லரைக் கொன்ற வரலாறு 4 நூல்களில் இடம் பெறுகிறது. 6 பாசுரங்களில் இவ்வரலாறு எடுத்தாளப் பட்டுள்ளது[319]. இரணியனை அழித்த வரலரறு 21 ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. 64 பாசுரங்களில் இவ்வரலாறு இடம்பெறுகின்றது[320]. ஒவ்வோரு ஆசிரியரும் ஒவ்வொரு கோணத்தில் இவ்வரலாற்றை எடுத்தாளுகின்றனர்.

புராணங்களின் வாயிலாக மனித சமுதாயத்திற்காகச் செந்நெறிகளை மக்களுக்கு அளித்தனர். தொன்மையான ஒரு பொருளைக் களமாகக் கொண்டு வாழ்க்கைக்கு வேண்டிய இன்றியமையாத கூறுகளைப் புராணங்கள் விளக்குவதால், இவ்வாசிரியர்கள் புராணக் கூறுகளைத் தங்கள் படைப்புகளில் எடுத்தாண்டுள்ளனர். மக்களின் நடுவே தெய்வத்தின் பெருமையை நிலைநாட்டி, மக்களிடம் தெய்வ நம்பிக்கையை ஏற்படுத்த இத்தகைய புராணக்கதைகள் அவர்களுக்கு உறுதுணையாக அமைந்தன என்று கூறலாம்

மனிதனிடம் தோன்றும் ஆணவம், அகம்பாவம், வெறியுணர்ச்சி ஆகிய அசுர சக்திகளை வீழ்த்தி அவற்றிலிருந்து மனிதனைக் காக்கும் இறைவனின் முயற்சியைத்தான் குவலயாபீடம் என்னும் யானையைக் கொன்ற நிகழ்ச்சி போன்று புராணங்கள் உணாத்துகின்றன.

ஒரு மனிதனின் ஆற்றலை அவன் உடல் உருவத்தை வைத்து மதிப்பிடக்கூடாது. அவனது சக்தியின் மதிப்பை வைத்தே மதிப்பிடவேண்டும் என்ற நீதியை உலகளந்த வரலாறு உணர்த்துவதாகக் கொள்ளவேண்டும்.

ஆவேசஉணர்வும் பழிவாங்கும் மனப்பான்மையும், உயர்ந்த ஆற்றலும் பெருமையும் உடையவர்களையும் வீழ்த்திவிடும் என்ற உண்மையினைச் சில புராணங்கள் உணர்த்துகின்றன.

மனித உயிர்கட்கு மட்டும் இன்றி, விலங்குகட்கும் தாவரங்கட்கும் கூட இறைவன் முத்தியளித்தான் என்ற புராணக்கதைகள் பத்தியையும் மனிதவாழ்வில் தன்னம்பிக்கையும் வளர்க்கும் நோக்கத்தில் அமைந்துள்ளன.

சில புராணங்கள் வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியப் போக்கினை எல்லை வகுத்துக் காட்டுகின்றன. சில தன்னலமற்ற சேவைக்கான இலக்கணத்தை வகுத்துக் காட்டுகின்றன. இவ்வாறு ஒவ்வொரு புராணத்தின் ஆழ்ந்த உட்பொருளும் ஒவ்வோர் இலட்சியத் தத்துவங்களாகத் திகழ்வன எனக் கூறலாம்.

# 4. அவதாரக் கோட்பாடு:

உய்யும் நெறியில் நின்று உயிர்கள் வாழ்க்கை நடத்த வேண்டும். தாமும் வாழ்ந்து தம்மைச் சார்ந்தவர்களையும் வாழ் விப்பதே உயர்ந்த வாழ்க்கைநெறி. அல்லல்படும் உயிர்களை அன்புநெறியில் செலுத்த அவ்வப்போது அருளாளர்கள் தோன்று கின்றனர். ''நல்லாரைக் காப்பதற்கும் தீயாரைக் கரந்தொடுக்கு வதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கின்றேன்''[321] என்று கண்ணன் கீதையில் குறிப்பிட்டுக் காலந்தோறும் உலகத்தில் அருளாளர்கள் தோன்றுவதைக் கோடிட்டுக் காட்டுகின்றான்.

அவர்கள் மனித சமுதாயத்தில் மலிந்து விடுகின்ற ஒழுக்கக் கேடுகள், தடுமாற்றங்கள், அறிவுக்குப் பொருந்தாத கருத்துக்கள் போன்றவற்றை களைந்து,காலந்தோறும் ஏற்படுகின்றமாறுதலுக் கேற்பப் புதியனவற்றையும் செயல்படுத்த முனைகின்றனர்.

''மனிதர்கள் அமைதியோடும், அகமகிழ்ச்சியோடும் ஒரு சமுதாயத்திலே வாழமுடியாது போகும்போது, அந்தச் சமுதாயத் தைச் சீர்படுத்தப் பல பெரியவர்கள் தோன்றுகின்றார்கள்[322]' என்ற பேராசிரியர் கு. ராஜவேலுவின் கருத்து ஈண்டு நினைக்கத் தக்கது. கருணையின் திருவுருவே திருஅவதாரம் என்பதை எல்லாப் புராணங்களும் எடுத்துக் கூறுகின்றன.

மனித சமுதாயத்தில் வழுக்களைப் போக்கவே இறைவன் தோன்றுகின்றான். சமுதாயத்தில் பல்வேறு உருவங்களில் பரவிக் கிடந்த சீர்கேடுகளை எல்லாம் ஒடுக்கிச் சமுதாயத்தைத் திருத்தும் சீரியபண்பினைத் தன் கடமையாக இறைவன் ஏற்றுக்கொள்கிறான்.

எம்பெருமானின் திருவிளையாடல்கள் எனப் புராண இதிகாசங்களிலிருந்து அந்தாதிகளில் எடுத்தாளப்படுகின்ற செய்திகள் அனைத்தும் மனித வாழ்க்கையில் நேரடியாகத் தொடர்புகொண்ட தத்துவங்களாகும்

கண்ணனின் வாழ்வைப்பற்றி ஆராய்ந்த சென், ''சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் தானே வாழ்ந்து காட்டி, ஒவ்வொரு நிலையிலும் தவறுசெய்யும் மாந்தரை முறை யாகத் திருத்தி, அவர்களைக் கேடுகளினின்றும், அழிவுப்பாதை களின்றும் மீட்க, கண்ணன் எத்தகைய முயற்சிகளை மேற்

கொண்டுள்ளான் என்பதை அவனது வாழ்க்கையின் உன்னதக் குறிப்புக்கள் இனிதே காட்டும்''[323] என்கிறார். இக்கருத்து இறைவன் மக்களைத்திருத்தத் தோன்றினான் என்ற குறிப்பைத் தருகிறது.

'அவதாரம்' என்பதற்கு 'இறங்கி வருதல்' எனப்பொருள் கொண்டு உயர்நிலையில் இருந்து உலகுய்ய, தான் இறங்கி வந்து அருள்புரிதலே 'அவதாரம்' எனக்கொள்ளலாம். 'அவதாரம்' என்பதற்கு 'இறங்குதல்', 'கீழே வருதல்' என்பது இலக்கியப் பொருள். ''தலைசிறந்த ஆன்மா தன்னுடைய ஒப்பற்ற மாயை என்ற ஆற்றலால் விளையாட்டாக முழுமுதல் ஒருமைப்படியி லிருந்து தொடர்புடைய பன்மைப்படிக்கு இறங்குகிறது'' என்று கூறுகிறார் ஏ.கே. பானர்ஜி[324]. இதனை சி.கே. சுப்பிரமணிய முதலியாரும்[325] உறுதிப்படுத்துகிறார். கலைக்களஞ்சியமும்[326] அவதாரத்திற்கு இவ்வாறு விளக்கம் அளிக்கிறது.

அவதாரங்களின் வரிசைமுறைகளை நோக்குகின்றபொழுது ஓர் உண்மை புலப்படக்கூடும். சிற்றறிவுடைய உயிரினமாகிய மீன் அவதாரத்திலிருந்து படிப்படியே சிறந்து வளர்ந்து பேரறிவுடைய கண்ணன் அவதாரம் கொண்டு நிற்கிறார் திருமால்.

அவதாரத் தத்துவத்தால் மானிடமும், மானிடத்தால் அவ தாரத்தத்துவமும் விளக்கமுறுவதைப் பத்தி இலக்கியங்கள் கொண்டு உணர முடிகிறது. ஒளிநெறியாகிய அறமும், இருள் நெறியாகிய அதர்மமும் போராடுவது உலக இயற்கை. இப் போராட்டத்தில் அறத்தின் இறுதிவெற்றிக்குத் துணைபுரிவது தெய்வசக்தி என்பதை இவ்வவதாரங்கள் உணர்த்துகின்றன.

**கண்ணன் அவதாரம் :**

பத்தவதாரங்களில் பலராமன், புத்தன், கல்கி ஒழிந்த பிற அவதாரங்கள் அந்தாதிகளில் இடம்பெறுகின்றன. இவற்றில் அந்தாதி ஆசிரியர்கள் கண்ணன் அவதாரத்திலேயே அதிக ஈடு பாடு கொண்டுள்ளமையைக் காணமுடிகின்றது. அதிலும் அவர் களைப் பெரிதும் ஈர்த்தமை அவனது பிள்ளை விளையாட்டு களே. அவ்விளையாட்டுகளில் ஈடுபட்ட இவர்கள் கண்ணனைப் பலவாறு பாடியுள்ளனர். 516 பாசுரங்களில் இவ்வவதார நிகழ்ச்சிகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

கண்ணனின் இளம்பருவத் திருவிளையாடலாகிய பூதனையை வதைத்தல், சகடம் உதைத்தல், வெண்ணெய் உண்டமை, மருதிடைச் சென்று முறித்தமை, கனிசாயக் கன்றெறிந்தமை, புள் வாய் பிளந்தமை, குன்றினைக் குடையாகப் பிடித்தமை, காளி யனை அடக்கியமை, குவலயாபீடம் என்னும் யானையின் கொம்பொசித்தமை, கம்சனைக்கொன்றமை போன்றவற்றை இவ்வந்தாதிகள் குறிப்பிடுகின்றன.

இவற்றுள் பூதனையை வதைத்ததை ஒவ்வோர் ஆசிரியரும் ஒவ்வொரு பாங்கில் கூறிச்செல்கின்றனர்; கூறும் பாங்கு மாறுபட அமையினும், கூறிய நோக்கம் ஒருமுகமாகவே அமைந்துள்ளது. இந்நிகழ்ச்சியின் வாயிலாக எம்பெருமானின் ஆற்றல், தீயவரை அழித்து மக்களைக்காக்கும் பண்பு, பகைவரை நேசிக்கும் பண்பு ஆகியவை புலப்படுத்துகின்றன.

இப்பூதனை வதம் பற்றி. சுவாமி கிருஷ்ணதாச அச்யூதா, ''இச்செயலால் கண்ணன், தன் வியத்தகு ஆற்றலால் நந்தகோப னிடமும், மற்ற பிருந்தாவன மக்களிடமும் நன்மதிப்பைப் பெற்றான். பகவானின் அழிக்கும் செயல் பூதனையை அழித்த லோடு தொடங்குகிறது. தான், பின்னர் ஆற்றப் போகும் அரும் பெரும் செயல்களுக்குத் தேவைப்படும் உள்நிலையாற்றலை வெளிப்படுத்தினான். உலகக்குழந்தைகளை எல்லாம் அரக்கியிட மிருந்து பாதுகாத்து, அவளுக்கும் வீடுபேற்றை அளித்தான்[327] என்று குறிப்பிடுவதால் பூதனை வதத்தின் சிறப்புப் புலப்படுகிறது.

இந்நிகழ்ச்சியைப் பற்றி இராமஸ்வாமி சாஸ்திரி ''பூதனை என்பது ஒரு நோய்; இந்நோய் கண்ட குழந்தை தாய்ப்பாலை உறிஞ்சிக்குடித்தால் இந்நோய் நீங்கும். கண்ணனுக்கு இந்த நோய் வந்து அவன் அதனின்று தப்பினான்'' என்று அறிவியல் முறையில் விளக்கம் தருகிறார்.[328]

ஆய்வாளர் சென், இராமஸ்வாமி சாஸ்திரியைப் போலவே, ''அந்நிகழ்ச்சியே பின்னர் இவ்வாறு புனையப்பட்டது''[329] என்று குறிப்பிடுகிறார். பீமன்பிகாரிமகும்தார் பூதனை ஒரு பறவை என்று அரிவம்சம் கூறுவதாகத் தம்நூலில் குறிப்பிடு கிறார். [330] இவை சிந்தனைக்குரியன.

கண்ணன் சகட உருவத்தில் வந்து அசுரனை வதைத்த செய்தியால் எம்பெருமானின் திருவடியின் சிறப்புப் பேசப்படு கின்றது.

தனக்கென்று ஒருவன் தேடிவைத்த பொருளை இயற்கை ஏதேனும் ஓருவகையில் அபகரித்துக்கொண்டு போய்விடும். தேடிய பொருளைப் பறிகொடுப்பதை விட, மனமுவந்து அதைப் பிறருக்கு அளிப்பது நல்லது என்ற தத்துவத்தை வெண்ணெய் திருடிய செயல் உணர்த்துகிறது.

நம்முடைய உள்ளம் என்கிற வெண்ணெய்யைக் கொள்ளை கொண்டு செல்ல கிருஷ்ணன் காத்துக்கொண்டு இருக்கிறான் என்பதையும் உணர்த்துகிறது.

உரலிற் பிணைக்கப் பட்ட கண்ணன் அவ்வுரலையும் இழுத்துக்கொண்டு சென்று மருதுமுறித்தமை, மறையாகிய உரலினைக் கொண்டு தீவினையை நீக்கி நல்வினையை இவ்வுல கிற்கு அளிப்பவன் என்பதனைத் தெரியப்படுத்துகிறது

கண்ணனைக் கொல்ல, கம்சனால் ஏவப்பட்டுக் கன்றாகி வந்த வததாசுரனைக் கொண்டு விளாமரமாகி நின்ற கபித்தா சுரனை வீழ்த்திய செய்தி நன்மையைக் காக்கவும்' தீமையை அழிக்கவும், சிலநேரங்களில் உலகில் நல்லவர் போலக் காட்சி யளிக்கும் தீயவர்களை அழித்தே தீரவேண்டும் என்பதனை உணர்த்துகின்றது.

பறவையாகி வந்த பகாசுரனை அழித்தமை தீவினைகள் எவ்வடிவத்தில் வந்ததாலும், அதனை உணர்ந்து நின்று விலக்கி கொள்ளவேண்டும் என்பதனை உணர்த்துகின்றது.

இப்பகாசுரன் பூதனையின் உடன்பிறந்தவன். எனவேதான் பூதனையும் ஒரு பறவை என்ற கருத்துத்தோன்றியிருக்க வேண்டும் 131 என்று ஆய்வாளர் பீமன் பிகாரி கூறும் கருத்து ஏற்புடைய தாய் அமைந்துள்ளது.

குன்றைக்குடையாகப் பிடித்தமை இந்திர வழிபாட்டை எதிர்த்து இயற்கை வழிபாட்டை வலியுறுத்துகிறதை உணர்த்து கிறது. மேலும் கண்ணன் சமுதாய நலனில் கொண்ட எல்லை யற்ற ஆர்வத்தையும் புலப்படுத்துகிறது எனலாம். வழிபாடு என்ற பெயரில் உயிரற்ற சடங்குகளுக்குள் மூழ்கிவிடுவது தவறு. காலத்தினால் தோன்றிய சடங்குகளைத் பகுத்தறிவு இன்றிப் பயன்படுத்துதல் முறையற்றது. ஒரு காலத்தில் மதிக்கப்பட்ட சடங்குகளும், நம்பிக்கைகளும் பின்னொரு காலத்தில் தம் சிறப்பை இழக்கலாம். பழமையால் பெருமை பெற்ற இந்திரபூசையைக்



திருக்குடந்தையில் அமைந்துள்ள சாரங்கபாணி கோவில்

கண்ணன் செய்ய வேண்டாம் எனத் தடுத்ததற்கு அடிப்படைக் காரணம் அக்காலத்தில் இந்திர வழிபாடு பலனேதும் அற்ற வெற்றிச்சடங்காகி இருத்தல் வேண்டும்.

இந்நிகழ்ச்சி கண்ணனின் சீர்திருத்த நோக்கத்திற்கு அரண் செய்வதாக உள்ளது. கண்ணனின் ஏனைய நிகழ்ச்சிகளை விடவும் இந்நிகழ்ச்சி அந்தாதி ஆசிரியர்களை மிகவும் கவர்ந்துள்ளதை அறிய முடிகிறது.

கண்ணன் காளியனை அடக்கிய நிகழ்ச்சி அருள்தாகம் வலுப்பெறும்போது காமத்தின் வேகம் தானே குறைந்துவிடும் என்பதை உணர்த்துகிறது.

இந்த உடல் முற்றிலும் தூய்மையாய் இருக்கிறது. கட்டில் அடங்காத காமம் என்னும் பாம்பு உடலில் புகுந்து விடுகிறது. அதனால் ஐம்பொறிகளும் கெட்டுப் பாழாகி விடுகின்றன. ஒரு மனிதனிடம் உள்ள கேடுகள் அனைத்திற்கும் காரணம் காமம். அருள்தாகம் எனும் பேருணர்வு உள்ளத்தினுள் பாய்ந்து மனிதனை மகிழச்செய்ய வேண்டும். காமநோய் எனும் நஞ்சை நீக்க அது ஒன்றே வழி. இறைவனைச் சார்ந்திருக்கும் அளவு அருள் தாகம் உறுதிபெறும் என்ற கருத்தை இந்நிகழ்ச்சி உணர்த்துகிறது.

இந்நிகழ்ச்சியைப் பற்றிக் கூறிய அறிஞர் பகவான்தாசு, "இது ஒருவேளை ஐம்புலன்களையும் ஆன்மா ஆட்சி புரிதல் வேண்டும் என்பதைக் குறிப்பதாக இருக்கலாம்"332 என்கிறார். காளியனின் நஞ்சால் ஆயரும் ஆநிரைகளும் உயிரிழந்தன. தீமை தீர்க்கவந்த கண்ணன் உடனே அக்காரணத்தை அறிய விரும்பினான். மனிதன் விலங்கு ஆகியவற்றின் நலத்தை உள்ளத்தில் கொண்டு அந்த நீர்நிலையில் வாழ்ந்த துன்பம் தரும் உயிரினங்களை ஒழித்து அதனைத் தூய்மைப்படுத்தத் தீர்மானித்தான் என்றும் கூறலாம்.

ஆய்வாளர் ஒவ்வொருவரும் அவர்தம் கருத்திற்கேற்பப் பல்வெறு விளக்கம் தருகின்றனர். எனினும் இந்நிகழ்ச்சி சமுதாய நன்மை கருதிச் செய்யப்பட்ட செயலே என்ற கருத்து அனைவருக்கும் ஏற்புடையதாகவே தோன்றுகிறது.

கண்ணன் இந்திர வழிபாட்டை மாற்றியமை, காளியனை ஒடுக்கியமை ஆகியவை சமுதாயத்தில் இருந்த சிறுதெய்வ வழிபாட்டை நீக்கி முழுமுதற் கடவுளை வழிபடச் செய்யும் சிறந்த

சமயத்தொண்டு எனக் கருதலாம். மேலும் வாழும் உயிர்கள் எல்லாம் இறைவனின் மாற்று வடிவங்களே என்ற உண்மையை உணர்த்துவதாகவும் கொள்ளலாம். இறைவனின் இச்செயல் சமயப்புரட்சியுடன் சமுதாயப் புரட்சியும் இரண்டற இணைந்து நிற்கச்செய்த சிறப்பைக் காட்டும்.

''உபநிடதங்களில் தனிப்பட்ட ஆன்மா உடல் என்னும் தேரை ஊர்வதாகவும், அறிவே சாரதி என்றும் சொல்லப்படு கிறது. கீதையில் இதை இன்னும் மேம்படுத்தித் தனிப்பட்ட ஆன்மா தேரில் செல்லுவனவாகவேசொல்லப்படுகிறது. சாரத்தியம் அறிவிற்கு அப்பாற்பட்ட இறைவனாலேயே செய்யப்படு கின்றது 333 என்று சுக்தங்கர் கூறும் கருத்து, கண்ணன் தேரோட்டியாக நின்றமைக்குப் புதிய பொருளைத் தருகிறது.

அசுரர்களை அழித்த நிகழ்ச்சி கண்ணன் மனித சமுதாயத் திடம் கொண்ட அருட்பெரும் கருணையையே காட்டுகிறது. கண்ணனின் வீரம் அக்கால வீரர்களால் நன்கு உணரப்பட்டது. மனிதர்களிடையே கண்ணன் ஈரநெஞ்சம் கொண்டு விளங்கி னான். அவ்வீர நெஞ்சத்தில் மனித சமுதாயத்திடம் அவன் கொண்டிருந்த கருணை வெள்ளம் பெருக்கெடுத்தோடியதையும் அறியமுடிகிறது.

கன்னமதம், கபோலமதம், பீஜமதம் என்ற மூன்று மதங் களைக் கொண்ட குவலயாபீடம் என்ற யானையைக் கொன்ற நிகழ்ச்சியால் மனிதன் தனிமதம், குலமதம், கல்விமதம் என்ற மூன்று மதங்களையும் கொல்லவேண்டும் என்பதை உணர்த்து கின்றது

கண்ணன் நல்லாரைக் காப்பதற்கும், தீயவரைக் கரந் தொடுக்குவதற்கும், தர்மத்தைநிலைநாட்டுவதற்கும் யுகம்தோறும் தான் அவதரித்துக் காலம்தோறும் உலகத்தில் அருளாளர்கள் தோன்றுவதை உணர்த்துகின்றான். அவர்கள் மனித சமுதாயத் தில் மலிந்து விடுகின்ற ஒழுக்கக்கேடுகள், தடுமாற்றங்கள், அறி விற்குப் பொருந்தாத கருத்துக்கள் போன்றவற்றைக் களைந்து காலம்தோறும் ஏற்படுகின்ற மாறுதல்களுக்கு ஏற்பப் புதிய வற்றைச் செயல்படுத்த முயல்கின்றனர் என்பதை இந்நிகழ்ச்சி கள் உணர்த்துகின்றன.

**இராமாவதாரம் :**

கிருஷ்ணா அவதாரத்தை அடுத்து இவ்வாசிரியர்களைக் கவர்ந்தது இராமாவதாரம் ஆகும். இவ்வவதாரம் 105 பாசுரங்களில் 158 இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. ஆழ்வார்கள் கண்ணன் அவதாரத்தில் காட்டிய ஈடுபாட்டினை இவ்வவதாரத்தில் காட்டவில்லை என்பதனை உணரமுடிகிறது.

இராமானுச நூற்றந்தாதியில் இந்நிகழ்ச்சி எடுத்தாளப் படவில்லை. ஆனால் பிறரால் எடுத்தாளப்படாத பரசுராமர் அவதாரத்தை இவ்வாசிரியர் எடுத்தாண்டுள்ளார்.

> "கோக்குல மன்வரை மூவெழுகால் ஒருகூர் மழுவால்
> போக்கிய தேவனை"[334]

என்று குறிப்பிடுகிறார். இராமவதார நிகழ்ச்சி 17 அந்தாதிகளில் 45 பாசுரங்களில் இடம்பெறுகின்றது.[335]

சாதுக்களாகிய சான்றோரைப் பாதுகாத்தலும் கொடியவராகிய தீயோரைக் கடிந்து திருத்தி நல்வழிப்படுத்தலும் தரும நெறியை உலகில் நிலைநாட்டலும் திருமாலின் திருச்செயல்கள் என்பதை இவ்வவதாரம் உணர்த்துகின்றது.

சகோதரம் என்பது தன் உயிரைப்போல மண் உயிரை மதிப்பதே ஆகும். இச்சகோதர நேயத்தை இவ்வவதாரம் வலியுறுத்துகிறது.

"உலகில் பொய், பொறாமை, கொலை, கொள்ளை, போர் போன்றவை நடப்பதற்குக் காரணம் அமைதிக்குரிய சகோதர நேயம் பெருகிப் பரவாமையேயாகும்" என்று கூறுகிறார் திரு.வி.க.[336]

இறைவன் மிகவும் தாழ்ந்தவர்களிடத்தும் மிகவும் நேயத்துடன் பழகுவான் என்பதும், அவன் சாதி மதத்தைக் காட்டி விலகி நிற்கமாட்டான் என்பதும் இவ்வவதாரம் உணர்த்துகிறது. இக்குணத்திற்குச் "சௌசீல்யம்" என்று பெயர். இராமன் வானரங்கள், குகன் போன்றவர்களிடமும் காட்டும் அன்பு அவனது "சௌசீல்யம்" என்ற குணத்தை வெளிப்படுத்துகிறது.

இறைவன் தன்னையும் தன்னுடைய உடைமையையும் பயன்படுத்திக் கொள்ளும்படி தனது பத்தர்களுக்குக் கொடுத்தும் மேலும் தான் பத்தர்களுக்குக் கடமைப்பட்டிருப்பதாகவும்

எண்ணுகிறான். இஃது இறைவனது ''ஔதார்யம்'' என்னும் குணமாகும். இக்குணத்தை வெளிப்படுத்தும் வகையில் இவ்வவதார நிகழ்ச்சிகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

ஒளிநெறி ஆகிய அறமும், இருள் நெறியாகிய அதர்மமும் போராடுவது உலக இயற்கை. இப்போராட்டத்தில் இறுதி வெற்றிக்குத் துணைபுரிவது இறையருள் ஆகும்.

வாழ்க்கையில் உயர்ந்த ஆதர்சங்களை இலட்சியப் பெருநோக்கினை எல்லைவகுத்துக் காட்டுவதாக இராமா அவதாரம் அமைந்துள்ளது எனலாம்.

தாடகவதை, இராவணன் வதை போன்ற நிகழ்ச்சிகள் தர்மத்தை நிலைநாட்ட, அதர்மத்தை வெல்லும் வகையில் அமைந்துள்ளன.

தர்மத்தை நிலைநாட்டவும், அதர்மத்தை வீழ்த்தவும் ஒல்லும் வகையில் முயலுதல் வேண்டும் என்பது இவ்வவதாரத் தால் அறியைக்கிடக்கும் உண்மைகளுள் தலையாயது ஆகும்.

மனிதனைத் தெளிவுபடுத்தி உயர்நிலைப்படுத்த தெய்வம் மனிதனைநோக்கி வருகிறது. அறியாமை இருள் அகன்று தன்னுள் அமிழ்ந்து கிடக்கும் பேருண்மையை உணரும்போது மனிதனும் தெய்வமாகின்றான் என்பதை இவ்வவதாரம் உணர்த்து கிறது.

**வாமன அவதாரம்** :

இவ்வாசிரியர்கள் அடுத்து அதிக ஈடுபாடு காட்டியுள்ளது வாமன அவதாரம். இவ்வவதாரம் 20 அந்தாதிகளில் 93 பாசுரங் களில் எடுத்தாளப்பட்டுள்ளது.[337]

உருவத்தைப் பொருளாகக் கொள்ளாது, உருவம் உணர்த் தும் தத்துவத்தைப் பொருளாகக் கொள்ளவேண்டும் என இவ்வவதாரம் உணர்த்துகிறது.

ஒரு பொருளின் புனிதத்தன்மை அதன் உள்ளார்ந்த இயல்பில் இருப்பதன்று; அத்னை நோக்கும் மனத்தைப்பொறுத்தே அமைகின்றது என்பதை வெளிப்படுத்துகின்றது.

கடவுள் இயற்கைக்கு அப்பாற்பட்ட உயர்ந்த ச ஒன்பதை உணர்ந்து அதன்மீது நம்பிக்கைகொண்டு, அவற்றைச்

சார்ந்து அவற்றிற்குக் கீழ்ப்படிந்து ஒழுகுகின்ற மனப்பாங்கு வளரவேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

செயலுக்கேற்ற உருவ அமைப்பைப் பெறுவது மட்டுமே முக்கியமன்று. உள்ளம் உண்மையிலே ஈடுபாடு கொள்வதுதான் முக்கியமான செயலாகும் என்பதை இவ்வவதாரத்தின் மூலம் ஆசிரியர்கள் உணர்த்துகின்றனர்,

பக்தர்கள் கொடுப்பதையே தம் பிறவிப்பாக்கியமாகக் கருதுவர் என்பதை, குருவின் ஆணைமீறித் தானம் கொடுத்த மாவலியின் செயல் புலப்படுத்துகின்றது.

பூவுலக மக்கள் அனைவர்க்கும் இறைவன் வேறுபாடின்றித் தன் திருவடிகளைக் கொடுத்துக் காப்பாற்றினான் என்ற கருத்தும் புலப்படுத்துகின்றது.

**நரசிம்ம அவதாரம் :**

இவ்வவதார நிகழ்ச்சி 21 அந்தாதிகளில் 64 பாசுரங்களில் இடம் பெறுகின்றது[338]. முதல் திருவந்தாதியில் இவ்வவதாரம் இடம்பெறவில்லை.

இறைவன் தன் வாக்கைக் காப்பாற்றாவிட்டாலும் தன் அடியார்களின் வாக்கைக் காப்பாற்றாமல் விடமாட்டான். ஆயுதம் எடுக்கச் செய்கிறேன் என்று கூறிய பீஷ்மரின் வாக்கை ஆயுதம் எடுத்துக் காப்பாற்றினான். பத்தனுடைய வாக்கைக் காப்பாற்ற எந்த உருவத்திலும், எந்த இடத்திலிருந்தும் தோன்றுவான் என்பதைக் காட்டுகிறது நரசிம்ம அவதாரம்.

விகார உருவமில்லாமல் இருக்கும் எம்பெருமான் தன் அடியார்களைக் காப்பாற்றுவதற்காக அடையும் விகார உருவங்களுக்கு எல்லையே இல்லை என்பதை நிரூபிக்கும் அவதாரம் இவ்வவதாரம் ஆகும்.

அறிவின் எல்லைக் கோட்டிற்குள் அடங்க மாட்டான் ஆண்டவன் என்ற தத்துவத்தை உணர்த்துகிறது. பரமாத்மாவை உள்ளபடி தன் அனுக்கிரகத்தால் அறிந்தவனுக்குத் துன்பங்கள் நீங்கி, இன்பம் காணும் மனநிலையைப் பெறமுடியும்; மற்றவர்றால் நிலையான இன்பத்தைப் பெறமுடியாது என்பதை இவ்வவதாரம் உணர்த்துகிறது.

உயர்திணைப் பொருளையும் அஃறிணைப்பொருளையும் உடலாக உடையவன் எம்பெருமான். உயிரினங்களின் உடலிலும் வியாபித்துள்ளான் என்பதை இவ்வவதாரம் காட்டுகிறது.

'பிறப்பதும் இறப்பதும் நம் வசம் இல்லை' என்ற தத்துவத்தை உணர்த்துகிறது.

பக்தன் எப்பொழுதும் அருள்நெறியில் குணவாளனாக வாழவேண்டும். அருள்நெறிகளுக்கு ஊறுவிளையும் பொழுது வீரிய குணத்தைக்காட்டித் திருத்தவேண்டும் என்பது இவ்வவதாரம் காட்டும் குறிப்பு.

இச்சமுதாயத்தில் காணப்படுகின்ற ஆணவம், அகம் பாவம், பலாத்காரம், வெறி உணர்ச்சி ஆகிய உணர்ச்சிகளை வீழ்த்தி அவற்றிலிருந்து மக்களைக் காப்பாற்றும் முயற்சியினை இவ்வவதாரம் உணர்த்துகிறது.

**கூர்ம அவதாரம் :**

அடுத்து இவ்வாசிரியர்கள் ஈடுபாடு கொண்டுள்ளது கூர்ம அவதாரம் ஆகும். இவ்வவதார நிகழ்ச்சி 12 அந்தாதிகளில் 22 பாசுரங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது339.

பாகவத அபசாரத்திற்குத் தண்டனை உடனே ஏற்படும். ஆணவத்தால் அடிபட்ட உள்ளமானது குற்றம் உணரும்பொழுது அரவணைப்பைப் பெறும் என்பது இவ்வவதாரத்தில் காட்டப் படும் தத்துவமாகும். ஆமை தன் எல்லாப் பக்கங்களையும் உள்ளே அடக்கிக்கொள்ளும். அதுபோல் மனிதன் எப்பொழுதும் உலகப்பந்தங்களின்றும்/புலன்களை அடக்கிக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் அவனுடைய ஞானம் நிலைத்து நிற்கும் என்பது உணர்த்தப்படுகின்றது.

புலன்களாகிய கயிற்றின் மூலம் அறிவாகிய மத்தைக் கொண்டு மெய்ஞானம் என்ற பாற்கடலைக் கடையவேண்டும், அதாவது சிந்திக்கவேண்டும். கடலில் அலைகள் தோன்றுவது போல் விருப்பு வெறுப்பு என்ற மயக்கங்கள் உள்ளத்தில் தோன்றும். அறிவானது பாற்கடலைக் கடையும்பொழுது மந்திர மலை அமிழ ஆரம்பித்ததுபோல் அமிழும். தன்செயலை இழந்து நிற்கும். அப்பொழுது அடலாமையாம் திருமால் மந்திர மலையைத் தாங்கியது போல் அறிவாகிய அமுதை விருப்பு வெறுப்பு ஆகிய பற்றுகளில் மூழ்கிவிடாமல் தாங்கி வலிமையைக் கொண்ட ஆமையைப்போல் தன்னைச் சரணடைந்தவர்களுக்கு

உலகப்பந்தங்களில் பற்று ஏற்படாவண்ணம் மனத்தில் நிலை நின்ற ஆத்மபுத்தியுடன் வாழச்செய்வான் என்பது இவ்வவதாரம் காட்டும் குறிப்பாகும்.

**வராக அவதாரம் :**

வராக அவதாரம் மூன்றாம் திருவந்தாதியின் 45-வது பாசுரத்திலும், திருவரங்கத்திருவந்தாதியில் 82-வது பாசுரத்தி லும், அத்திகிரிவரதன் அந்தாதியில் 3-வது பாசுரத்திலும் மட்டுமே எடுத்தாளப்பட்டுள்ளது.

உருவால் பெறும் உயர்வு உயர்வன்று, பண்பினால் செயற் கரிய செய்யும் செயல்களால் பெறும் உயர்வே உயர்வு என்ற அரிய கருத்தை அறிவுறுத்தும் அவதாரம் வராக அவதாரம். அன்பு செலுத்தும் அடியவர்களுக்கு எவ்வடிவமும் இனிய வடிவமே என்ற கருத்தை எடுத்துரைக்கவே இறைவன் பன்றியின் உருவம் எடுத்திருக்கக்கூடும். நீரில் மூழ்கிக்கிடந்த உலகத்தை மேலெழுப்பி இயல்பான நிலையில் நிறுத்திய இறைவன் சாதனையை வராக அவதாரத்தில் காணமுடிகிறது.

தன்னையும், உலகத்தையும், இறைவனையும் அறவே மறந்து அஞ்ஞானத்தில் மூழ்கியிருந்த நிலையிலிருந்த மனிதனை மீட்கும் முயற்சியாக இந்த அவதாரத்தத்துவத்திற்கு விளக்கம் கொள்ளலாம்.

தனக்கு வேண்டிய கோரைக் கிழங்கைப்பெற நிலத்தைத் தோண்டி எடுக்கும் காட்டுப்பன்றியைப்போல, நூல் அறிவையும் அனுபவ அறிவையும் ஒருமுனைப்பட உள்ளமுடன் ஆச்சார்ய னருளால் ஆராய்ந்து தத்துவங்களை உணரவேண்டும் என்பதே இவ்வவதாரம் காட்டும் குறிப்பாகும்.

ஒருமுனைப்பட்ட உள்ளத்தோடு நூலறிவினை மதிநுட்ப முடன் ஆராய்ந்தால் உண்மைகள் கிடைக்கும். அவற்றை வாழ்க்கையுடன் கிடைக்கும். அனுபவத்தை ஒப்பிட்டுச் சிந்தனை செய்தால், இறையின்பத்தைப் பெறமுடியும் என்ற கருத்தை இவ் வவதாரம் உணர்த்துகிறது.

**மச்ச அவதாரம் :**

மச்ச அவதாரம் பற்றிய செய்தியை மூன்றாம் திருவந் தாதியின் 66-வது பாசுரத்தில் காணமுடிகிறது.

"மதுகை டபரும் வயறுருகி மாண்டார்
அதுகேட வர்க்கிறுதி யாங்கு"[340]

என்று மதுகைடபரின் அழிவினைக்கூறி, அந்த மதுகைடபர்களைப் போன்ற விரோதிகளுக்கும் அக்கேடு தேரும் என்று கூறுகிறார்.

மேலும் முதல் திருவந்தாதியில் 83 -வது பாசுரத்திலும், நான்முகன் திருவந்தாதியில் 24வது பாசுரத்திலும், திருவாய்மொழி நூற்றந்தாதியின் 3 -வது பாசுரத்திலும் இவ்வவதார நிகழ்ச்சியைக் காணமுடிகின்றது

விழிப்புடன் கூடிய தெளிந்த அறிவின் மூலம் தீய உணர்வுகளை ஒழித்துக் கட்டிவிட்டு, நல்லுணர்வுகளைக் காத்தல் வேண்டும் என்ற நெறி இவ்வவதாரத்தின் மூலம் இச்சமுதாயத்திற்கு உணர்த்தப்படுகிறது.

மீன் தன் பார்வையாலேயே குஞ்சுகளை வளர்த்து வாழ வைப்பது போல் தன் கண்களை மூடாமல் இருக்கும் இறைவன் தன் பார்வையாலேயே அடியார்களை வாழவைப்பான் என்பதை உணர்த்துகிறது.

இறை அனுபவமாகிய பேரின்பத்தைப் பெற அவனது நற்குணக் கடலை உட்புகுந்து அனுபவிக்கவேண்டும் என்னும் மறையின் உட்பொருளை, மீன் உணவிற்காக நீரில் எந்தநேரமும் நீந்திக் கொண்டிருக்கும் செயலால் உணர்த்தப்படுகின்றது. இவ்வவதாரங்கள் காலந்தோறும் உலகத்தில் அருளாளர்கள் தோன்றுவதைக் காட்டுகின்றன. அவர்கள் மனித சமுதாயத்தில் மலிந்து விடுகின்ற ஒழுக்கக்கேடுகள், தடுமாற்றங்கள், அறிவிற்கும் பொருந்தாத கருத்துக்கள் போன்றவற்றைக் களைந்து, காலந்தோறும் ஏற்படுகின்ற மாறுதல்களுக்கேற்பப் புதியனவற்றைச் செயல்படுத்த முயல்கின்றனர் என்பதை உணர்த்துகின்றது [341].

மக்களிடையே சமய உணர்வு மேலோங்கி இருந்த காலத்தில் இவ்விலக்கியங்கள் தோன்றின. சமயக்கொள்கைகளைப் பரப்பவும், எளியமுறையில் எடுத்துச்சொல்லவும் இப்புராணக்கூறுகள் மிகுதியாக இவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன. மனித ஆற்றலைக் காட்டிலும் இறையாற்றல் மிகப்பெரிது என்பதை உணர்த்தும் வகையில் இப்புராணக்கூறுகள் அமைந்துள்ளன. சில தத்துவக் கருத்துக்களை உருவகப்படுத்திக் கூறவேண்டிய இடங்களில் இப்புராணக்கூறுகள் இவர்களால் எடுத்தாளப்படுகின்றன.

இலக்கியங்களை இன்பம் பயப்பன, அறிவுறுத்துவன என இரண்டாகப் பிரிக்கலாம். இவ்விலக்கியங்கள் இன்பத்தை முதன்மையாகக் கொள்ளாமல், நீதியை உணர்த்துவதையே முதன்மையாகக் கொண்டுள்ளன. இங்கு உணர்த்தப்படும் நீதிகள் பத்தியின் அடிப்படையில் உணர்த்தப்பெறும் நீதிகளாகும். எனவே, இச்சமுதாயத்தைச் செந்நெறிப்படுத்த விரும்பிய இச்சான்றோர்கள் நீதியைப் புகட்டும் புராணத்தின் வாயிலாக மக்களை நெறிப்படுத்த விரும்பினர்.

சமயத்தத்துவங்களை எளிய முறையில் கேட்போரைப் பிணிக்கும் வகையில் எடுத்துக்கூற இப்புராணக்கூறுகள் அவர்களுக்குத் துணை புரிந்தன.

புராணக்கதைகளின் மூலம் பத்தியை, இறையுணர்வை ஊட்டவேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளனர். இவர்கள் எடுத்தாளுகின்ற புராணக் கதைகளில் உவமை, வருணனை, கற்பனை எனவரும் இடங்களில் எல்லாம் தத்துவங்களாகவே காணப்படுகின்றன.

புராணக்கூறுகளை எடுத்தாளுவதன் மூலமாக இவ்விலக்கியம் பத்தி இலக்கியமாகவும், நீதி இலக்கியமாகவும், தத்துவ இலக்கியமாகவும் கொள்ளத்தக்க வகையில் அமைந்துள்ளது.

இந்த அவதாரங்கள் யாவும் இறைவனின் விருப்பம் காரணமாக ஏற்பட்டவை. இவற்றின் பலன் தம்மை அடைந்தாரைக் காக்கவும், அவர்களின் விரோதிகளை அழிக்கவும், வைதிக தர்மத்தை நிலைநிறுத்தவும் மேற்கொண்டவையே என்பதை இவர்கள் தங்கள் பாசுரம் மூலம் வெளிப்படுத்துகின்றனர்.

மனித ஆற்றலைக்காட்டிலும் இறையாற்றல் மிகப்பெரியது என விளக்கும் வகையிலும், மக்கள் நடுவே இறைவனின் பெருமையை நிலைநாட்டி மக்களிடம் நம்பிக்கை ஏற்படுத்தவும் இப்புராணக் கதைகள் இவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன.

மனிதவாழ்வுக்குப் பயன்படக்கூடிய தத்துவக் கருத்துக்களைத் தம் அனுபவத்தில் உணர்ந்த இச்சான்றோர்கள் அக்கருத்துக்களை மக்களிடம் வெறுமையாகச் சொன்னால் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள் என்று கருதி அக்கருத்துக்களைக் கதை வடிவில் கூறுவதற்கு இவ்வுத்தியைப் பயன்படுத்தியிருக்கக்கூடும்.

புராணக் கதைகளை எடுத்தாளுவதின் மூலம், பத்தியையும் இறையுணர்வையும் வளர்க்கவேண்டும் எனும் நோக்கத்தோடு, தங்கள் பாசுரங்களைப் பாடியுள்ளதைக் காணமுடிகின்றது.

சமய ஒழுகலாறுகளை மக்கள் அறிந்துகொள்ளவும், மக்கள் உள்ளம் பண்படுவதற்கும், உயிர் உறுதி அடைவதற்கும் இப் புராணக்கூறுகள் துணைசெய்வன என்று கூறலாம்.

இப்புராணக்கதைகள், மக்களின் கருத்துக்கள் அழிந்துபோகாத வாறு ஊக்கம் கொடுத்துத் தட்டியெழுப்பிப்பிப்புத்துயிரோடு வாழ வழிசெய்தன என்று கூறலாம். மக்களிடத்து ஆன்மிக உணர் வுகள் வளர இப்புராணக்கதைகள் முழுமையாகப் பயன்படும் என்றநோக்கத்தில் எடுத்தாளப்பட்டிருக்கலாம்.

புராணங்களில் கூறப்படும் வரலாறுகள் முழுவதும் உண்மை என்று கொள்ளாவிட்டாலும், அவை ஆங்காங்கு வழங்கப்பட்ட வரலாறுகளைப் புராணமாகப் பாடியுள்ளமையால் உண்மை வரலாறும் சிறிது புலப்படுத்தப்படுகிறது.

மக்களிடம் ஆன்மிக உணர்வுகள் மிகுவதற்கு இப்புராணக் கதைகள் காரணமாக அமையும் என்று இவர்கள் நம்பியிருக்கக் கூடும்.

இயற்கை இறந்த செயல்களை ஆற்றினால்தான் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும் எனும் வகையில், இறைவனும் இறையடியார் களும் பல அற்புதச் செயல்களை ஆற்றியுள்ளனர். 'அச்செயல் களை எடுத்தாள்வதால் மக்களிடம் இறை நம்பிக்கையை ஊட்ட முடியும் என இவ்வாசிரியர்கள் கருதியிருக்கலாம்.

சமய நம்பிக்கைகளையும் அதன் விளக்கங்களையும் கதை களின் வாயிலாக வெளிப்படுத்தும்பொழுது, மக்களிடம் அவை எளிதாகச் சென்றடையும் என்று இவர்கள் கருதியதனால், மிகுதி யான புராணங்களைத் தம் படைப்பில் எடுத்தாண்டுள்ளதைக் காணமுடிகின்றது.

இறைவன் முன் அன்பு ஒன்றுதான் மதிக்கப்பெறும் என் பதும், மற்றவை எல்லாம் அங்குக் கருதுதற்குரியன அல்ல என் பதுமே புராணங்கள் அனைத்தும் தெளிவுறுத்தும் செய்தியாகும். எனவே, இப்புராணங்களைக் கேட்ட அளவிலேனும் தன்முனைப்பு அடங்கி மக்கள் சிந்திக்கத் தொடங்குவர் என்று இவர்கள் நம்பியிருக்கக்கூடும்.

அந்தாதி இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ள புராணங்களில் விவரிக்கப்பட்டுள்ள அசுரர்களின் உருவத்தோற்றம், செயற்பாடுகள் போன்றவை, வியப்பூட்டக்கூடியவனவாகவும், நம்ப முடியாதவனவாகவும் இருப்பதைக் காண்கின்றோம். அசுரர்கள் என்று குறிக்கப்படுபவர் ஒரு தத்துவ உருவம் என்றுகொள்ள வேண்டும்.

எம்பெருமான் அவதாரக் காலங்களில் நடத்திய அருள் செயல்களை நினைக்கும்பொழுது மனஅழுக்கு மாய்ந்துவிடும், நிலையான மதி அமைந்திடும், அப்பொழுது இவ்வுலகில் நிகரின்றி வாழமுடியும் என்று இவர்கள் எண்ணியதனால், தங்கள் படைப்புக்களில் அவதார நிகழ்ச்சிகளை எடுத்தாளுகின்றனர்.

திருமாலின் பத்து அவதாரங்கள், 'இறைவன் பல வடிவங்களைக்கொண்டு விளங்கினாலும் ஒருவரே' என்ற கருத்தை வலியுறுத்தவும், எந்நிலையில் உள்ளாரும் இறைநிலை எய்தலாம் எனும் கருத்தை வலியுறுத்தவுமே எழுந்திருக்கக்கூடும்.

ஆழ்வார்கள் தொடங்கி இக்கால ஆசிரியர்கள் வரை பத்து அவதாரங்களில் கிருஷ்ண அவதாரத்தையே மிகுதியாக எடுத்தாண்டுள்ளமையைக் காணமுடிகின்றது. இவர்கள் பாகவதக் கதையிலும் பாரதக்கதையிலும் கொண்ட ஈடுபாடே காரணம் எனக்கூறலாம்.

தன்னையும் இறைவனையும் உலகத்தை மறந்து அஞ்ஞான நிலையில் மூழ்கியிருந்த மக்களை மீட்கும் முயற்சியென்று இந்த அவதாரத் தத்துவத்திற்கு விளக்கம் கொள்ளலாம். இச்சமுதாயத்தைச் செந்நெறிப்படுத்த விரும்பிய இவ்வாசிரியர்கள் இவ்வவதார நிகழ்ச்சிகளைத் தங்கள் படைப்புக்களில் மிகுதியாக எடுத்தாண்டுள்ளனர்.

கண்ணன் அவதாரத்தை அடுத்து இவர்கள் அதிக ஈடுபாடு காட்டியது இராம அவதாரமாகும். எம்பெருமானின் வெற்றிச் சிறப்புக்களை மட்டும் விளக்கும் இடங்களில் எத்தனையோ சிறப்பியல்புகள் இருந்தபோதும், இராவணனை வென்ற நிகழ்ச்சி அதிகமாக இவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது.

இராமாயண நிகழ்ச்சிகள் பலவாறாக எடுத்தாளப்பட்டிருப்பினும் இலங்கையை அழித்த பெருஞ் செயலே இங்குப் போற்றப்படுகிறது.

## 5. முடிவுகள்

1. தன்முனைப்பு, உடைமை போன்றவற்றை அழித்து இறைவனிடம் அன்பு செலுத்தி அவன் அருளை வேண்டி அவனிடம் அடைக்கலம் புகுந்தால் இறை நிலையை அடையலாம் என்ற இந்நம்பிக்கை மனிதனுக்கும், இறைவனுக்கும் இடையிலிருந்த தொடர்பை வெளிப்படுத்தும்.

2. பத்திநெறியைப்போற்றிப் பரப்பிய ஆழ்வார்கள், சமுதாய வாழ்க்கையில் கட்டுப்பாடும், புலனடக்கமும், குறிக்கோளும் பெறவேண்டும் என்று வற்புறுத்துவர்.

3 திருவடியின் சிறப்பைக்கூறும் முகமாக நிலையாமை, ஊழ்வினை, வீடுபேறு, இறைவனின் கருணை, முத்தி, பற்றற்ற நிலை, சிற்றின்பம், வீட்டின்பம், பிறவாமை போன்றவற்றை உலகத்தார்க்கு எடுத்துக் கூறுவர்.

4. இவர்களது பாசுரங்களில் துறவறம் பழிக்கப்பெறவில்லை; இல்லறம் வெறுக்கப் பெறவில்லை; நிலையாமை உணர்த்தப் பெறுகின்றது. உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பத்தி செலுத்தலாம் என்பதைத் தெளிவாக்குகின்றன.

5. இறைவனுக்கு முன்னே எல்லோரும் சமம். இறைவன் ஒருவனே மக்கள் தலைவன் என்ற கருத்தைப் பரப்ப இவர்களது பாசுரங்கள் துணையாக நிற்கின்றன. மன்னர்களையும் செல்வர்களையும் போற்றிப் பாடுவதற்குப் பயன்பட்ட தமிழ், இறைவனைப் பாடுவதற்கு மட்டுமே பயன்பட வேண்டும் என்ற இவர்கள் கொள்கை வெளிப்படுத்தப் படுகின்றது

6. பத்தி நிலைகள் இறைவனின் இனிய இயல்புகளையும் அவதார நிகழ்ச்சிகளையும், இறைத்தன்மைகளையும் சமயத் தத்துவங்களையும் எடுத்துக் கூறுவனவாக அமைந்துள்ளன.

7. நாராயணனே முழுமுதற் கடவுள் என்பதும் அவனைப் பத்தி, பிரபத்தி ஆகிய இரண்டு வழிகளாலும் அடையலாம் என்பதும் இவர்கள் கண்ட நெறியாகும்.

8 வீடுபேறு என்பது பற்றிச் சமயநூல்கள் பலவகையாகப் பேசும். இவர்களின் கருத்தின்படி வீடு என்பது ஒரு தனி உலகம்; அது அழிவில்லாதது; அதனை அடைந்தார்க்கு

உண்டாகும் இன்பம் அழிவில்லாதது என்று உணர்த்தப்படு கின்றது.

9. உடலினுள் உயிர் எவ்வாறு உள்ளதோ அவ்வாறேஅவ்வுயிர் உட்பட எல்லாப் பொருள்களிலுள்ளும் இறைவன் உள்ளான் என்ற சரீர-சரீரி பாவனை இவர்களால் பேசப்படும்.

10. காலங்கடந்த கருத்துகட்குக் காலத்திற்கு உட்பட்ட நிகழ்ச்சி களால் அளிக்கப்படும் அடையாள வெளியீடுகளே புராணங் கள் என்று கூறலாம்.

11. புராணங்கள் மனித சமுதாயத்திற்குரிய செந்நெறிகளைச் சிறந்த கதைகளின் வாயிலாக மக்களுக்கு அறிவுறுத்துவ தாலும், தொன்மையான ஒரு பொருளைக் களமாகக் கொண்டு வாழ்க்கைக்கு வேண்டிய இன்றியமையாத கருத்துக் களைக் கூறுவதாலும், இவர்களால் புராணங்கள் மிகுதியாக எடுத்தாளப்பட்டுள்ளன.

12. வேதத்தின் உட்பொருளையும், சமய தத்துவங்களையும் மக்கள் உணரவேண்டும் என்ற நோக்கத்தில் இப்புராணக் கூறுகள் இவர்களால் பயன்படுத்தப்பட்டுள்ளன.

13. கடவுள் அனுபவத்தினை மக்கள் மனத்தில் இத்தகையது என உணர்த்துதற்கும், அவ்வனுபவத்தை நோக்கி அவர்கள் மனங்களைக் கிளர்ந்தெழச் செய்வதற்கும் இப்புராணங்கள் பெரிதும் பயன்பட்டிருக்கலாம்.

14. அவதாரங்கள் காலந்தோறும் உலகில் அருளாளர்கள் தோன்றுவதை உணர்த்துகின்றன. அவர்கள் இச்சமுதாயத் தில் மலிந்துவிடுகின்ற ஒழுக்கக் கேடுகள், தடுமாற்றங்கள் போன்றவற்றைக் களைந்து, காலந்தோறும் ஏற்படுகின்ற மாறுதலுக்கேற்பப் புதியனவற்றைச் செயல்படுத்த முயல் கின்றனர் என்பதை உணரமுடிகின்றது.

15. இறைவன் முன்னர் அன்பு ஒன்றுதான் மதிக்கப்பெறும் என்பதும், மற்றையவை எல்லாம் அங்குக் கருதுதற்குரியன அல்ல என்பதுமே புராணங்கள் அனைத்தும் தெளிவுறுத்தும் செய்தியாகும். எனவே, இப்புராணங்களைக் கேட்ட அளவி லேனும் இச்சமுதாயம் தன்முனைப்பு அடங்கிச் சிந்திக்க வேண்டும் என்பதே இவ்வாசிரியர்களின் நோக்கமாகும்

# குறிப்புக்கள்

1. ப. அருணாசலம், பக்தி இலக்கியம், ப. 28;
2. நற். 1;
3. திருமுருகு. 93;
4. இர. திரு. அந். 1;
5. Dhavamony, "Love of God according to Saiva Sidhanta"; P. 13;
6. திருவருள்மொழி, ப. 25;
7. ப. அருணாசலம், வைணவ சமயம், ப. 50;
8. மேலது; ப. 57;
9. எ.சிஸ். இராதாகிருஷ்ண ஐயர், பக்தி விளக்கம், ப. 12;
10. அ.ச. ஞானசம்பந்தன், 'தமிழும் சமயமும்', உலகத்தமிழ் மாநாடு விழாமலர், சமயப்பகுதி, ப. 4;
11. முத. திரு. அந். 70
12. இர. திரு. அந். 2;
13. மூன். திரு. அந். 94;
14. இரா. நா. அந்; 66;
15. ந. சுப்புரெட்டியார், முக்திநெறி, ப. 100;
16. நற். 1;
17. முத. திரு. அந். 1;
18. இர. திரு. அந். 1;
19. வேதாந்ததேசிகர், தே. பி. 89;
20. முத. திரு. அந். 44;
21. இர. திரு. அந். 41;
22. மேலது, 51;

23. பெரி. திரு. அந். 78;
24. அழ. அந். 46;
25. மேலது, 48;
26. குறள். 2;
27. நா. எட். திரு. அந். 19;
28. மேலது. 22;
29. திரு. வா. அந். 4;
30. திரு. வேங். அந். 6;
31. புறம். 21;
32. திரு. வா. ப. அந். 3;
33 திரு. வா. மொ. நா. அந். 10;
34. பெரு. அந் 98;
35. குட. அந். 57;
36. மகர. நெடு. குழை. அந். 27;
37. புல். அந். 6;
38. இர. திரு. அந். 21;
39. திரு. வேங். அந். 43;
40. நா. எட். திரு. அந். 57;
41. இர. திரு. அந். 87;
42. முன். திரு. அந். 17;
43. மேலது, 85;
44. நான். திரு. அந். 50;
45. மகர. நெடு. குழை. அந். 13;
46. மேலது, 14;
47. மேலது, 84;

48. அழ. அந். 13;
49 குட. அந். 18;
50. திரு. முட். ப. அந். 15;
51. புல். அந் 21;
52. முத. திரு. அந். 23;
53. இர. திரு. அந். 7;
54. முன். திரு. அந். 9;
55. மேலது, 21;
56. திரு. வர. அந். 60;
57. மேலது, 89;
58. திரு. வேங். அந். 63;
59. மேலது, 95;
60. மேலது, 96;
61. திரு. எவ் ப. அந் 28;
62. திரு. க. மல். ப. அந். 28;
63. திரு. வர. ப. அந். 28;
64. திரு வா. மொ. நூ. அந். 32;
65. பெரு. அந். 65:
66. அழ. அந். 82;
67. திரு. நா. திரி. அந். 66;
68. குட. அந். 57;
69. சேட. மலை. ப. அந். 76;
70 பெரி. திரு. அந். 20;
71. நூ. எட். திரு. அந். 20;
72. பரிபா. 2, 24, 26;

73. மேலது, 3. 68;

74. மகர. நெடு. குழை. அந். 36;

75. புல். அந். 20;

76. மேலது, 45;

77. நூ. எட். திரு. அந்- 60;

78. நம்மாழ்வார், திருவாய் மொழி 8. 3. 7;

79. எஸ். ஸ்ரீநிவாசையர் (உ.ஆ.), நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, ப 51;

80. ந. சுப்புரெட்டியர், மலைநாட்டுத் திருப்பதிகள், ப. 12;

81. முத. திரு. அந். 86;

82. இர. திரு. அந். 75;

83. பெரி. திரு. அந். 42;

84. கம்பர், கம்பராமாயணம், 2016;

85. அண்ணாங்கரசாரியர், மூன்றாம் திருவந்தாதி, 61:

86. மூன். திரு. அந். 61;

87. திரு வர. அந். 45;

88 பெரி திரு. அந். 5;

89. குட. அந். 82;

90. புல். அந். 33;

91. மகர. நெடு. குழை. அந். 46

92. அழ. அந். 27;

93. திரு. வேங். அந். 4;

94. திரு வர. அந். 21;

95. பெரி. திரு. அந். 46;

96. அழ. அந். 54;

97. நா. எட். திரு. அந். 9;

98. பெரு. அந். 22;

99. திரு. எவ். ப. அந். 86;

100. திரு. கட. மல். ப. அந். 21;

101 புல். அந். 77;

102. ப. அருணாசலம், மு. நூ., ப. 33;

103. முத. திரு. அந். 56;

104. திருப்பாவைஉரை, 29;

105. இர. திரு, அந். 52;

106. ஆர் ராமஸ்வாமி ராமாநுஜதாஸர், ஸ்ரீவைஷ்ணவம், ப.40;

107. ஆர். ராமஸ்வாமி ராமாநுஜதாஸர், மு.நூப. 43;

108. ந. சுப்புரெட்டியார், சடகோபன் செந்தமிழ், ப.375;

109 மேலது, ப 377;

110. ப. அருணாசலம், மு. நூ., ப 48;

111 அம்மன் சத்தியநாதன், மதங்களும் மகத்துவங்களும், ப.32;

112 ப அருணாசலம், மு. நூ., பக். 118-119;

114. எம். நாராயண வேலுப் பிள்ளை, ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம் ப. 253;

115, மேலது, ப. 254;

116. இர. திரு. அந் 2;

117. முன். திரு. அந். 54:

118. இரா, நூ, அந். 85;

119. இர. திரு. அந். 1;

120. நான்திரு. அந். 85;

121. மேலது, 63;

122. திரு. சத். விரு. 92;

123. மேலது, 90;

124. ப. அருணாசலம், மு. நூ. ப. 60;

125. மேலது, ப. 65;

126. பெரி. திரு. அந். 68;

127. நான். திரு. அந், 13;

128. முத. திரு அந். 11;

129. முத. திரு. அந். 43;

130. மேலது, 47;

131. அம்மன் சத்தியநாதன், மதங்களும் மகத்துவங்களும், ப. 26;

132. அ. இராமானுஜர், வேதாந்தம் — வைணவ கடவுட் கொள்கை, ப. 543;

133. எம். நாராயண வேலுப்புள்ளை, மு. நூ., ப. 13;

134. தே. வரதராசன், வைணவ சமயசாரம், ப. 10;

135. இர திரு அந். 6;

136. முத. திரு. அந். 50;

137. மேலது, 52;

138. பெரி. திரு. அந். 46;

139 Friedhelm Hardy, Viraha — Bhakti. The early history of devotion in South India, P. 477;

140. நான். திரு அந். 20;

141. மேலது, 2;

142 முத. திரு. அந். 44;

143. நான். திரு. அந். 53;

144. ப. அருணாசலம், மு. நூ.. ப. 131;

145. முத. திரு. அந். 44;

146. மேலது, 58;

147. அழ. அந். 21;

148. மேலது. 37;

149. மேலது, 42;

150. முத. திரு. அந். 32;

151. Princeton, Encyclopaedia of Poetry and Poetics, P. 538;

152. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கிய உதயம் (இரண்டாம் பாகம்)' ப. 436;

153 தமிழண்ணல், வையைமலர் (தொகுதி 3), பக். 74 — 75;

154. நடராசன் நாவலியூர், வடமொழி இலக்கிய வரலாறு, ப. 145;

155. Swami Prabhavananda, The Spiritual Heritage of India, P. 136;

156. James Hastings, Encyclopaedia of Religion and Ethics, Vol. 2, P 448;

157. சபா. சிவநேசன், புராணங்கள் — அறிமுகப்பார்வை, ஆய்வுக்கோவை, (தொகுதி—2), ப. 399;

158. மேலது, ப. 400;

159. மணிமேகலை, 27, 98;

160. வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர், புராணங்கள்', கலைக், களஞ்சியம், (தொகுதி—7), ப, 436;

161. புறம். 330;

162. பேராசிரியர், நோல பொருள். 549

163. திருநாவுக்கரசர், தேவாரம், 6.78;

164. திருவிசைப்பா 9 22

165. மேலது, 9.50;

166. சிலம்பு, அடியார்க்கு நல்லார் உரை, ப. 280;

167. மேலது, ப. 370;

168. பொ. வே. சோமசுந்தரனார், தணிகைப்புராணம்,ஆராய்ச்சி முன்னுரை;

169. மேலது;

170. திரு.வி. கலியாணசுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 128;

171. தா. வே. வீராசாமி (பதி. ஆ.) தந்திவனப் புராணம், ப. 2;

172. மேலது, ப. 3;

173. ப. கோபாலன், பரஞ்சோதி திருவிளையாடற் புராணம், இலக்கிய மதிப்பீடு, ப. 20;

174. தா.வே. வீராசாமி (பதி.ஆ.), தந்திவனப்புராணம், ப. 2;

175. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (13-ஆம் நூற்றாண்டு ), ப. 234 :

176. பே. சா. கர்ணசேகரன், ''புராணங்களும் அவற்றை அணுகும் முறைகளும்'', சப்தகிரி (ஜூன் 1989), ப. 10;

177. பெரியபுராணம், திருமலைச்சிறப்பு 39;

178. சம்பந்தர் தேவாரம் 2.6.6;

179. அருணந்தி சிவாச்சாரியார், சிவஞானசித்தியர், ப. 263;

180. Benjamin Walker, An Encyclopaedia Survey of Hindus, p. 253;

181. கி. வா. ஜகந்தாசன். திருவிளையாடல், முன்னுரை, ப. 4;

182. திரு. வே. அந். 1, 13, 24, 31, 35, 42, 60, 62, 71, 73; குட.அந். 3, 27, 48, 53, 55, 60, 66, 73, 83; திரு, எவ். ப. அந். 29, 43, 55, 71, 75, 89, 94; அழ. அந். 7, 28, 38, 72, 89; சட. சத. அந். 8, 30, 41, 52, 63; முத. திரு. அந். 29, 47, 63, 97; இர. திரு. அந். 13, 22, 73, 86; முன். திரு அந். 36, 50, 58, 61, 64; மகர. நெடு. குழை அந். 37, 39, 41,42; அத்தி.வர. அந். 18, 23, 34, 79; திரு மழி. ப. அந்.16, 34, 72; திரு.கட மல்.ப அந். 37, 62; திரு அரி.திரி.அந்.27, 93; திரு. நா. திரி. அந். 61, 84; திரு.குரு.யம.அந். 46,97; புல்.அந். 19,99; சேட.மலை.ப.அந் 18,29; நான்.முக.திரு' அந். 13, 83; திரு, புல், திரி, அந், 73;

183. திரு. வேங். அந். 1;

184. மேலது, 31;

185. வை. மு. கோ. (உ. ஆ), திருவேங்கடத்தந்தாதி, ப. 22;

186. மேலது, ப. 23;

187. புல். அந். 19;

188. அழ. அந். 28;

189. திரு. வேங். அந். 9;

190. திரு. மழி. ப. அந். 16;

191. சேட .மலை. ப. அந். 18;

192. திரு. வெ. தி. அந். 43;

193 முத. திரு. அந். 29; திரு. வே. அந். 77; மகர. நெ குழை. அந். 2; குட. அந். 66. 73; திரு. புல். திரி. அந். 37; திரு. குரு. யம, அந். 97; திரு. வெ. திரி. அந். 43; திரு. நா. திரி .அந். 30; புல். அந். 19, 99; அழ. அந். 7; திரு. மழி..ப அந். 99; திரு. எவ. ப. அந் 29, 43, 55, 71, 89, 94; திரு. கட, மல். ப அந். 3; நூ. எட். திரு. அந் 44;

194. முத. திரு அந். 47;

195. முத. திரு. அந். 47; இர. திரு. அந். 13, 73; மூன். திரு. அந். 99: அழ அந். 38; திரு. வர. அந் 28; சட. சத. அந். 63; திரு. மக அந் 79; திரு. வே.அந். 35, 60, 62, 73;

196. திரு. வர. அந். 64;

197. சேட. மலை. ப. அந். 18;

198. மகர. நெடு குழை அந். 39;

199, பிள்ளைப் பெருமாளையங்கார், அஷ்ட பிரபந்தம்.ப.456;

200. திரு. வர. அந். 13;

201. திரு கட. மல். ப. அந். 8;

202. குறிஞ். 19;

203. திரு. கட மல். ப. அந். 18;

204. மேலது, 29;

205. இர. திரு. அந். 89; . அந். 18, 67, 54, 78; முன். திரு. அந். 68. 89; திரு. வர. அந். 13, 51; திரு. வேங் அந் 16, 57, 83; திரு. வேங். ப. அந். 36;மகர. நெடு. குழை. அந். 8; குட. அந். 1; திரு. மழி. ப அந். 26, 95;திரு குரு.யம அந். 46; அத்.சிரி. வர. அந். 100;திரு எவ். ப. அந். 4, 13, 78; திரு. கட மல். ப. அந். 8, 18, 29; சேட. மலை. ப. அந். 6, 23, 31, 76;

206. முத. திரு அந். 18, 27, 54, 78 இர. திரு. அந். 22, 68, 89; முன். திரு. அந். 43, 51, 65, 90;திரு. வே: அந். 13, 35, 36, 62; திரு. வர. அந். 28, 34; சட. சத. அந். 30, 63 அழ. அந். 28; திரு. எவ். ப. அத். 4, 13, 29, 55, 75;கு,அந். 53,60, 66; சேட. மலை. ப. அந் 6, 23, 29, 31, 76;திரு. மழி. ப.அந். 100; திரு. கட. மல். ப. அந்.8, 18, 29, 70 அத். கிரி. வர. அந். 100;திரு. குரு. யம அந் 46; திரு. மொ. நூ. அந். 38;

207. நூ. எட். திரு. அந். 37; மகர. நெடு. குழை. அந். 68; பிள்ளைப்பெருமாளையங்கார். அஷ்டப்பிரபந்தம், ப. 454;

208. அழ. அந். 63;

209. மேலது, 34;

210. மேலது, 84;

211. திரு. வர. அந். 3;

212. மேலது, 26;

213. மேலது, 99;

214. முத. திரு அந். 83;

215. மேலது, 6;

216. முன். திரு அந். 51;

217. மகர. நெடு. குழை. அந். 32;

218. திரு வே. அந். 31; முத. திரு. அந். 27, 39, 54, 69, 83, 86; மூன். திரு. அந். 41, 51; மகர. நெடு. குழை. அந். 1, 32, 95, அழ.அந். 34, 3, 84; திரு. எவ். ப. அந்.6, 11, 95, 99;திரு.கட.

